# பாரி தமிழ் வாசகம்

எட்டாம் வகுப்பு



...ாரி நிலையம்
...சென்னை-1

# பாரி தமிழ் வாசகம்

[எட்டாம் வகுப்பு]






ஆசிரியர் :

புலவர் தா. சிங்காரவேலு

வித்துவான் நா. பழநியப்பன்

பாரி நிலையம்

59. பிராட்வே · சென்னை-1.

# உள்ளுறை

## செய்யுள்

## உரைநடை

# இலக்கணம்

## மனப்பாடப் பகுதி

| எண் | பொருள் | | வரிகள் |
|---|---|---|---|
| 1. | வாழ்த்து-1, 2, 3. | ... | 12 |
| 2. | நாலடியார்-1, 3. | ... | 8 |
| 3. | பழமொழி-4, 5. | ... | 8 |
| 4. | நீதிநெறி விளக்கம்-4, 5. | ... | 8 |
| 5. | ஏலாதி-2, 5. | ... | 8 |
| 6. | சிறுபஞ்சமூலம்-3, 4. | ... | 8 |
| 7. | கம்பராமாயணம்-6, 7. | ... | 8 |
| 8. | பெரிய புராணம்-20, 21. | ... | 8 |
| 9. | திருவிளையாடற் புராணம்-12, 15. | ... | 8 |
| 10. | சீறாப் புராணம்-10. | ... | 4 |
| 11. | தேம்பாவணி-9. | ... | 4 |
| 12. | வருணனை-1, 2, 5, 7. | ... | 16 |
| 13. | சிற்றிலக்கியம்-2, 3. | ... | 8 |
| 14. | வழிபாட்டுப் பாடல்கள்-1, 4, 5. | ... | 12 |
| | | | 120 |

குறிப்பு : திருக்குறட் பகுதி முழுவதையும் மனப்பாடம் செய்தல் நலம்.

## தேசிய கீதம்

ஜன கண மன அதிநாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்த்ய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவ சுப நாமே ஜாகே
தவ சுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா
ஜய ஹே! ஜய ஹே! ஜய ஹே!
ஜய ஜய ஜய ஜய ஹே!

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்

## நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிறாய்.

நின் திருநாமம் பஞ்சாப்பையும் சிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது; யமுனை, கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக்கிறது; இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு வெற்றி! வெற்றி!! வெற்றி!!!

## இந்திய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

இந்தியா என்னுடைய நாடு. இந் நாட்டில் வாழ்கின்ற ஆண், பெண் அனைவரும் என் உடன் பிறந்தவர்கள்.

என் நாட்டின்பால் நான் அன்புடையேன். அதனுடைய வளமான பலவகைப்பட்ட பண்பாட்டியல்புகளை நினைந்து பெருமையடைகிறேன். இத்தகைய பழம் பெருமையுடைய நாட்டின் குடிமகனாக இருத்தற்குரிய தகுதிகளை அடைய நான் முயல்வேன்.

என்னுடைய பெற்றோரிடத்தும், ஆசிரியரிடத்தும், ஏனைய பெரியோரிடத்தும் பணிவுடன் நடந்து கொள்வேன்; அனைவரிடத்தும் பண்புடன் பழகுவேன்.

என்னுடைய நாட்டிற்கும், அதனுடைய மக்களுக்கும் தொண்டு செய்ய உறுதி கூறுகிறேன். என் நல்வாழ்வு அவர்தம் நலத்தையும் வளமான வாழ்க்கையையுமே பொறுத்திருக்கின்றது.

## தேசிய ஒருமைப்பாட்டு உறுதிமொழி

தாய் நாட்டின் உரிமையையும் ஒருமைப்பாட்டையும் எப்பாடு பட்டாகிலும், என்ன தியாகம் செய்தாகிலும் காக்க மக்கள் மேற்கொண்டுள்ள எண்ணத்தில் (சங்கற்பத்தில்) எனது உறுதியை மீண்டும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நாடு வலிவுறவும், ஒற்றுமை வலுப்பெறவும் உறுதியான உள்ளத்துடன் பாடுபட உறுதி கூறுகிறேன்.

# செய்யுள்

## I. வாழ்த்து

### 1. தேவாரம்

தேனைப் பாலினைத் திங்களை ஞாயிற்றை
வான வெண்மதி சூடிய மைந்தனை
வேனி லானை மெலிவுசெய் தீயழல்
ஞான மூர்த்தியை நான்மறக் கிற்பனே.

—திருநாவுக்கரசர்.

### 2. திருவாசகம்

இன்பம் பெருக்கி
இருளகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்வறுத்துச்
சோதியாய்—அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான்
என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டா
னுவந்து.

—மாணிக்கவாசகர்.

## 3. திவ்வியப் பிரபந்தம்

கங்கையிற் புனித மாய
காவிரி நடுவு பாட்டுப்
பொங்குநீர் பரந்து பாயும்
பூம்பொழி லரங்கம் தன்னுள்
எங்கள்மா லிறைவ னீசன்
கிடந்ததோர் கிடக்கை கண்டும்
எங்ஙனம் மறந்து வாழ்கேன்
ஏழையேன் ஏழை யேனே.

—தொண்டரடிப்பொடியாழ்வார்.

## 4. தேம்பாவணி

விதியெ ழுந்தமெய் வேதநன் ஞதனும்
துதியெ ழுந்தகைத் தாதையஞ் சூசையும்
மதியெ ழுந்தப தத்தினள் வாழ்த்தினர்
நிதியெ ழுந்தவிண் ணேடுது நாமென்ருர்.

—வீரமாமுனிவர்.

## 5. சீருப் புராணம்

திருவினும் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த
மருவினும் மருவாய் அணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி யனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினும் கருவாய்ப் பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே.

—உமறுப் புலவர்.

# II. நீதி

## 1. திருக்குறள்

### அறத்துப்பால்

#### கடவுள் வாழ்த்து

வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்க்
கியாண்டு மிடும்பை யில. 1

#### வான் சிறப்பு

விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புல் தலைகாண் பரிது. 2

#### அறன் வலியுறுத்தல்

அழுக்கா றவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்
இழுக்கா வியன்ற தறம். 3

#### வாழ்க்கைத் துணை நலம்

தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். 4

#### இனியவை கூறல்

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவற்
கணியல்ல மற்றுப் பிற. 5

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. 6

### செய்ந்நன்றியறிதல்

காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 7

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார். 8

### அடக்கமுடைமை

எல்லார்க்கும் நன்றாம் பணிதல் அவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 9

### பொறையுடைமை

ஒறுத்தார்க் கொருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ். 10

### புறங்கூறாமை

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர். 11

### ஒப்புரவறிதல்

ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு. 12

### கள்ளாமை

உள்ளத்தால் உள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வே மெனல். 13

### வாய்மை

புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும். 14

### வெகுளாமை

நகையும் உவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையு முளவோ பிற. 15

### இன்னா செய்யாமை

பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும். 16

### அவாவறுத்தல்

வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
யாண்டும் அஃதொப்ப தில். 17

## பொருட்பால்

### இறைமாட்சி

இயற்றலும் ஈட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு. 18

### கல்வி

தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு. 19

### கல்லாமை

நல்லார்கட் பட்ட வறுமையின் இன்னாதே
கல்லார்கட் பட்ட திரு. 20

### கேள்வி

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும். 21

### அறிவுடைமை

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 22

அறிவுடையார் எல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனும் இலர். 23

### குற்றங்கடிதல்

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார். 24

### பெரியாரைத் துணைக்கோடல்

இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும். 25

### வலியறிதல்

பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டம்
சால மிகுத்துப் பெயின். 26

### காலமறிதல்

கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து. 27

### தெரிந்து தெளிதல்

பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்
கருமமே கட்டளைக் கல். 28

### தெரிந்து வினையாடல்

அன்பறிவு தேற்றம் அவாவின்மை இந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு. 29

### பெருமை

மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர். 30

### சான்றாண்மை

ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். 31

### குடி செயல் வகை

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 32

### உழவு

உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். 33

### இரவச்சம்

இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். 34

### கயமை

அறைபறை யன்னர் கயவர் தாம்கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். 35

—திருவள்ளுவர்.

# 2. நாலடியார்

### கல்வியின் சிறப்பு

வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார்
எச்சம் எனவொருவன் மக்கட்குச் செய்வன
விச்சைமற் றல்ல பிற. 1

### உயர்வு உள்ளல்

இசையும் எனினும் இசையா தெனினும்
வசைதீர எண்ணுவர் சான்றோர்—விசையின்
நரிமா உளங்கிழித்த அம்பினில் தீதோ
அரிமா பிழைப்பெய்த கோல். 2

### செல்வர் கடமை

துகடீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்
பகடு நடந்தகூழ் பல்லாரோ டுண்க
அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வம்
சகடக்கால் போல வரும். 3

### நட்பாராய்தல்

யானை அனையவர் நண்பொரீஇ நாயனையார்
கேண்மை கெழீஇக் கொளல்வேண்டும்—யானை
அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் எறிந்தவேல்
மெய்யதா வால்குழைக்கும் நாய். 4

### வள்ளலின் செல்வம்

மல்கு திரைய கடற்கோட் டிருப்பினும்
வல்லூற் றுவரில் கிணற்றின்கண் சென்றுண்பர்
செல்வம் பெரிதுடைய ராயினும் சேட்சென்றும்
நல்குவார் கட்டே நசை. 5

—சமண முனிவர்கள்,

## 3. பழமொழி

### குலவித்தை கல்லாமல் பாகம் படும்

உரைமுடிவு காணுன் இளமையோ னென்ற
நரைமுது மக்கள் உவப்ப—நரைமுடித்துச்
சொல்லான் முறைசெய்தான் சோழன் குலவிச்சை
கல்லாமற் பாகம் படும். 1

### கேள்விச் சிறப்பு

உணற்கினிய இன்னீர் பிறிதுழியில் லென்னும்
கிணற்றகத்துத் தேரைபோ லாகார்—கணக்கினை
முற்றப் பகலும் முனியா தினிதோதிக்
கற்றலிற் கேட்டலே நன்று. 2

### சான்ருண்மை

முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்
தொல்லை யளித்தாரைக் கேட்டறிதும்—சொல்லின்
நெறிமடற் பூந்தாழை நீடுநீர்ச் சேர்ப்ப
அறிமடமும் சான்ருேர்க் கணி. 3

### அறிவுடைமை

ஆயிரவ ரானும் அறிவிலார் தொக்கக்கால்
மாயிரு ஞாலத்து மாண்பொருவன் போல்கலார்
பாயிருள் நீக்கும் மதியம்போற் பன்மீனும்
காய்கலா வாகும் நிலா. 4

### அறிவின் மாட்சி

அறிவினுல் மாட்சியொன் றில்லா ஒருவன்
பிறிதினுல் மாண்ட தெவனும்—பொறியின்
மணிபொன்னும் சாந்தமும் மாலையும் இன்ன
அணியெல்லாம் ஆடையின் பின். 5

—மூன்றுறையரையனுர்.

# 4. நீதிநெறி விளக்கம்

### அவைக்கு அஞ்சுவார் கல்வி

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியும் கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும்—நவையஞ்சி
ஈத்துண்ணுர் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று. 1

### கல்விச் செருக்காற் பயனில்லை

முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉங்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லுந் தகரும் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி ஞல். 2

### தற்புகழ்ச்சியின் இழிவு

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்ருல்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். 3

### கெடுவது காட்டும் குறிகள்

நட்புப் பிரித்தல் பகைநட்டல் ஒற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையும் ஐயுறுதல்—தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி. 4

### நிறைகுணத்தவர் இயல்பு

கண்ணேக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே
சலியாத கற்ப தரு. 5

—குமரகுருபரர்.

# 5. ஏலாதி

ஊண் ஈய்ந்தார் ஊண் ஆர்வார்

இல்லிழந்தார் கண்ணிழந்தா ரீண்டியசெல்
[வம்மிழந்தார்
நெல்லிழந்தா ரானிரை தானிழந்தார்க்-கெல்லுழந்து
பண்ணியூ ணீய்ந்தவர் பல்யானை மன்னராய்
எண்ணியூ ணுர்வா ரியைந்து. 1

ஊண் ஈத்து உண்பார் படையராய் வாழ்வார்

கடம்பட்டார் காப்பில்லார் கைத்தில்லார் தங்கான்
முடம்பட்டார் மூத்தார் மூப்பில்லார்க்—குடம்பட்
டுடையரா யில்லுளூ ணீத்துண்பார் மண்மேல்
படையராய் வாழ்வார் பயின்று. 2

தீயோரைச் சார்ந்தால் பழிபாவம் சாரும்

பெருமை புகழறம் பேணுமை சீற்றம்
அருமைநூல் சார்பில்லார் சாரி—னிருமைக்கும்
பாவம் பழிபகை சாக்காடே கேடச்சம்
சாபம்போற் சாருஞ் சலித்து. 3

பெரியவர் உரையும் பேதையர் உரையும்

மையேர் தடங்கண் மயிலன்ன சாயலாய்
மெய்யே உணர்ந்தார் மிகவுரைப்பர்—பொய்யே
குறளை கடுஞ்சொற் பயனிலசொ ஞன்கும்
மறலையின் வாயினவா மற்று. 4

விரும்பத் தகாதவையும் பார்க்கத் தகாதவையும்

கொலைக்களம் வார்குத்துச் சூதாடு மெல்லை
அலைக்களம் பேர்யானை யாக்கு—நிலைக்களம்
முச்சா ரிகையொதுங்கு மோரிடத்து மின்னவை
நச்சாமை நோக்காமை நன்று. 5

—கணிமேதையார்.

# 6. சிறுபஞ்சமூலம்

ஐவரைப் போற்றியவர் அழகாய் வாழ்வார்

புண்பட்டார் போற்றுவா ரில்லாதார் போகுயிரார்
கண்கெட்டார் காலிரண்டு மில்லாதார்—கண்கண்பட்
டாழ்ந்து நெகிழ்ந்தவர்க் கீந்தார் கடைபோக
வாழ்ந்து கழிவார் மகிழ்ந்து. 1

நோய் தீர்த்தார் நோயின்றி வாழ்வார்

சிக்கர் சிதடர் சிதலைபோல் வாயுடையார்
துக்கர் துருநாமர் தூக்குங்கால்—தொக்க
வருநோய்கள் முன்னுளில் தீர்த்தாரே இந்நாள்
ஒருநோயு மின்றிவாழ் வார். 2

சிரிப்புக்கிடமானவை

நாணிலான் சால்பும் நடையிலான் நன்னேன்பும்
ஊணிலான் செய்யும் உதாரதையும்—ஏணிலான்
சேவகமும் செந்தமிழ் தேற்ருன் கவிசெயலும்
நாவகமே நாடின் நகை. 3

கூற்றுவன்

சிலம்பிக்குத் தன்சினை கூற்றம்நீள் கோடு
விலங்கிற்குக் கூற்ற மயிர்தான்—வலம்படா
மாவிற்குக் கூற்றமாம் ஞெண்டிற்குத் தன்பார்ப்பு
நாவிற்கு நன்றல் வசை. 4

ஐந்தரண் உடைய அரசன்

நீண்டநீர் காடு களர்நிவந்து விண்தோயும்
மாண்ட மலைமக்கள் உள்ளிட்டு—மாண்டவர்
ஆய்ந்தன ஐந்தும் அரணு உடையானை
வேந்தனு நாட்டல் விதி. 5

—காரியாசான்.

# III. கதை

## 1. கம்பராமாயணம்

### நகர் நீங்கு படலம்

தசரதன் தான் பெற்ற சாப வரலாற்றைக்
கோசலைக்குக் கூறத் தொடங்குதல்

பொன்னார் வலயத் தோளான்
    கானே புகுத றவிரான்
என்னா ருயிரோ வகலா
    தொழியா திதுகோ சலைகேள்
முன்னா ளொருமா முனிவன்
    மொழியுஞ் சாப முளதென்
றந்நா ளுற்ற தெல்லாம்
    அவளுக் கரசன் அறைவான். 1

தசரதன் ஆற்றங்கரையில் மறைந்து நிற்றல்

வெய்ய கானத் திடையே
    வேட்டை வேட்கை மிகவே
ஐய சென்று கரியோ
    டரிக டுருவித் திரிவேன்
கையார் சிலையுங் கணையுங்
    கொடுகார் மிருகம் வருமோர்
செய்ய நதியின் கரைவாய்ச்
    சென்றே மறைய நின்றேன். 2

### தசரதன் அம்பெய்தலும் அலறலொலி கேட்டலும்

ஒருமா முனிவன் மனையோ
டொளியொன் றிலவாய் நயனந்
திருமா மகனே துணையாய்த்
தவமே புரிபோழ் தினின்வாய்
அருமா மகனே புனல்கொண்
டகல்வான் வருமா றறியேன்
பொரும ரகணைவிட் டிடலும்
புவிமீ தலறிப் புரள்வான். 3

### 'யானையொலி யன்று; மக்கள் குரலே' என மன்னன் உணர்தல்

புக்குப் பெருநீர் நுகரும்
பொருபோ தகமென் றொலிமேற்
கைக்கட் கணைசென் றதலாற்
கண்ணிற் றெரியக் காணேன்
அக்கைக் கரியின் குரலே
அன்றீ தென்ன வெருவா
மக்கட் குரலென் றயர்வேன்
மனநொந் தவண்வந் தனெனால். 4

### முனிகுமரனை, 'நீ யார்?' என மன்னன் வினுதல்

கையுங் கடமும் நெகிழக்
கணையோ டுருள்வோற் காணு
மெய்யுந் தனுவும் மனனும்
வெறிதே கிடமேல் வீழா

ஐயன் னீதான் யாவன்
அந்தோ வருள்கென் றயரப்
பொய்யொன் றறியா மைந்தன்
கேணீ யென்னப் புகல்வான். 5

### முனிகுமரன் ‘ஊழின் செயல்’ எனல்

இருகண் களுமின் றியதாய்
தந்தைக் கும்மீங் கவர்கள்
பருகும் புனல்கொண் டகல்வான்
படர்ந்தேன் பழுதா யினதால்
இருகுன் றனைய புயத்தாய்
இபமென் றுணரா தெய்தாய்
உருகுந் துயரந் தவிர்நீ
ஊழின் செயலீ தென்றே. 6

### ‘தண்ணீர் கொடுத்துச் சாவும் உரை’ என முனிகுமரன் வேண்டல்

உண்ணீர் வேட்கை மிகவே
உயங்கு மெந்தைக் கொருநீ
தண்ணீர் கொடுபோ யளித்தென்
சாவு முரைத்தும் புதல்வன்
விண்மீ தடைவான் றொழுதான்
எனவு மவர்பால் விளம்பென்
றெண்ணீர் மையினான் விண்ணோர்
எதிர்கொண் டிடவே கினனால். 7

தசரதன் நீரொடு முனிவரை அணுகலும் முனிவர் செயலும்

மைந்தன் வரவே நோக்கும்
வளர்மா தவர்பான் மகவோ
டந்தண் புனல்கொண் டணுக
ஐயா விதுபோ தளவாய்
வந்திங் கணுகா தென்னே
வந்த தென்றே நொந்தேம்
சந்தங் கமழுந் தோளாய்
தழுவிக் கொளவா வெனவே. 8

முனிவருக்குத் தசரதன் கூறல்

ஐயா யானே ரரசன்
அயோத்தி நகரத் துள்ளேன்
மையார் மிருகந் துருவி
மறைந்தே வதிந்தே னிருள்வாய்ப்
பொய்யா வாய்மைப் புதல்வன்
புனன்மொண் டிடுமோ தையின்மேற்
கையார் கணைசென் றதலாற்
கண்ணிற் றெரியக் காணேன். 9

'புதல்வன் விண்ணுலகடைந்தான்' எனல்

வீட்டுண் டலறுங் குரலால்
வேழக் குரலன் றெனவே
ஓட்டந் தெதிரா நீயார்
எனவுற் றவெலா முரையா
வாட்டந் தருநெஞ் சினனாய்
நின்றான் வணங்கா வானோர்
ஈட்ட மெதிர்வந் திடவே
இறந்தே கினன்விண் ணிடையே. 10

### தசரதன் முனிவரிடம் பொறுத்தருள வேண்டுதல்

அறுத்தாய் கணையா லெனவே
அடியேன் றன்னை யையா
கறுத்தே யருளாய் யானோ
கண்ணிற் கண்டே னல்லேன்
மறுத்தா னில்லான் வனமொண்
டிடுமோ தையினெய் ததலாற்
பொறுத்தே யருள்வா யென்னு
இருதாள் சென்னி புனைந்தேன். 11

### முனிவரும் அவர்தம் துணைவியாரும் வருந்தல்

வீழ்ந்தா ரயர்ந்தார் புரண்டார்
விழிபோ யிற்றின் றென்றார்
ஆழ்ந்தார் துன்பக் கடலுள்
ஐயா வையா வென்றார்
போழ்ந்தாய் நெஞ்சை யென்றார்
பொன்னு டதனிற் போய்நீ
வாழ்ந்தே யிருப்பத் தரியேம்
வந்தேம் வந்தே மினியே. 12

### 'இனி நானே உம் புதல்வன்' எனத் தசரதன் கூறல்

என்றென் றயருந் தவரை
இருதாள் வணங்கி யானே
இன்றும் புதல்வ னினிநீர்
ஏவும் பணிசெய் திடுவேன்
ஒன்றுந் தளர்வுற் றயரீர்
ஒழிமின் னிடரென் றிடலும்
வன்றிண் சிலையாய் கேண்மோ
எனவே யொருசொல் வகுத்தான். 13

முனிவர், 'எம்போல் மகன் பிரிய
வான் அடைக' எனல்

கண்ணுண் மணிபோன் மகவை
இழந்து முயிர்கா தலியா
வுண்ணு வெண்ணி யிருந்தால்
உலகோ ரென்னென் றுரையார்
விண்ணின் றலைசே ருதும்யாம்
எம்போல் விடலை பிரியப்
பண்ணும் பரிமா வுடையாய்
அடைவாய் படர்வா னென்னு. 14

முனிவர் இட்ட சாபம்

தாவா தொளிருங் குடையாய்
தவறிங் கிதுநின் சரணம்
காவா யென்று யதனுற்
கடிய சாபங் கருதேம்
ஏவா மகவைப் பிரிந்தின்
றெம்போ லிடருற் றணைநீ
போவா யகல்வா னென்னுப்
பொன்னுட் டிடைபோ யினரால். 15

'இராமன் வனமேகலும் தன்னுயிர் போதலும்
திண்ணம்' என்றான் தசரதன்

சிந்தை தளர்வுற் றயர்தல்
சிறிது மிலனு யின்சொன்
மைந்த னுளனென் றதனுன்
மகிழ்வோ டிவண்வந் தனெனுல்
அந்த முனிசொற் றமையின்
அண்ணல் வனமே குதலும்
என்ற னுயிர்வீ குதலும்
இறையுந் தவறு தென்றான். 16

—கம்பர்.

## 2. பெரிய புராணம்

### மெய்ப்பொருள் நாயனர் புராணம்

#### மெய்ப்பொருளாரின் அரசாட்சிச் சிறப்பும் சிவவழிபாடும்

சேதிநன் னாட்டி னீடு
திருக்கோவ லூரின் மன்னி
மாதொரு பாக ரன்பின்
வழிவரு மலாடர் கோமான்
வேதநன் னெறியின் வாய்மை
விளங்கிட மேன்மை பூண்டு
காதலா லீசர்க் கன்பர்
கருத்தறிந் தேவல் செய்வார். 1

அரசிய னெறியின் வந்த
அறநெறி வழாமற் புல்லி
வரைநெடுந் தோளால் வென்று
மாற்றலர் முனைகள் மாற்றி
உரைதிறம் பாத நீதி
ஓங்குநீர் மையினின் மிக்கார்
திரைசெய்நீர்ச் சடையா னன்பர்
வேடமே சிந்தை செய்வார். 2

மங்கையைப் பாக மாக
உடையவர் மன்னுங் கோயில்
எங்கணும் பூசை நீடி
ஏழிசைப் பாட லாடல்
பொங்கிய சிறப்பின் மல்கப்
போற்றுதல் புரிந்து வாழ்வார்
தங்கள்நா யகனுக் கன்பர்
தாளலாற் சார்பொன் றில்லார். 3

தேடிய மாடு நீடு
செல்வமுந் தில்லை மன்றுள்
ஆடிய பெருமான் அன்பர்க்
காவன வாகு மென்று
நாடிய மனத்தி னேடு
நாயன்மார் அணைந்த போது
கூடிய மகிழ்ச்சி பொங்கக்
குறைவறக் கொடுத்து வந்தார். 4

### மெய்ப்பொருளாருடன் முத்தநாதன் போரிட்டுத் தோற்ருேடுதல்

இன்னவா ருெழுகு நாளில்
இகற்றிறம் புரிந்தோர் மன்னன்
அன்னவர் தம்மை வெல்லும்
ஆசையால் அமர்மேற் கொண்டு
பொன்னணி ஓடை யானை
பொருபரி காலாள் மற்றும்
பன்முறை இழந்து தோற்றுப்
பரிபவப் பட்டுப் போனுன். 5

### முத்தநாதனின் சூழ்ச்சி

இப்படி இழந்த மாற்ருன்
இகலினுல் வெல்ல மாட்டான்
மெய்ப்பொருள் வேந்தன் சீலம்
அறிந்துவெண் ணீறு சாத்தும்
அப்பெரு வேடங் கொண்டே
அற்றத்தில் வெல்வா னுகச்
செப்பரு நிலைமை யெண்ணித்
திருக்கோவ லூரிற் சேர்வான். 6

முத்தநாதன் பொய்வேடம் பூணல்

மெய்யெலாம் நீறு பூசி
வேணிகள் முடித்துக் கட்டிக்
கையினிற் படைக ரந்த
புத்தகக் கவளி யேந்தி
மைபொதி விளக்கே என்ன
மனத்தினுள் கறுப்பு வைத்துப்
பொய்தவ வேடங் கொண்டு
புகுந்தனன் முத்த நாதன். 7

முத்தநாதன் மாளிகையினுள் செல்லுதல்

கடையுடைக் காவ லாளர்
கைதொழு தேற நின்றே
உடையவர் தாமே வந்தார்
உள்ளெழுந் தருளும் என்னத்
தடைபல புக்க பின்பு
தனித்தடை நின்ற தத்தன்
இடைதெரிந் தருள வேண்டும்
துயில்கொளும் இறைவன் என்றான். 8

முத்தநாதன் பள்ளியறையினை அடைதல்

என்றவன் கூறக் கேட்டே
யானவற் குறுதி கூற
நின்றிடு நீயும் என்றே
அவனையும் நீக்கிப் புக்குப்
பொன்றிகழ் பள்ளிக் கட்டிற்
புரவலன் துயில மாடே
மன்றலங் குழல்மென் சாயல்
மாதேவி இருப்பக் கண்டான். 9

### முத்தநாதனின் பொய்வேடத்தை மெய்ப்பொருளார் வணங்குதல்

கண்டுசென் றணையும் போது
கதுமென எழுந்து தேவி
வண்டலர் மாலை யானை
எழுப்பிட உணர்ந்து மன்னன்
அண்டர்நா யகனுர் தொண்ட
ராமெனக் குவித்த செங்கை
கொண்டெழுந் தெதிரே சென்று
கொள்கையின் வணங்கி நின்று. 10

### மெய்ப்பொருளாரின் வினவும் முத்தநாதனின் விடையும்

மங்கலம் பெருக மற்றென்
வாழ்வுவந் தணைந்த தென்ன
இங்கெழுந் தருளப் பெற்ற
தென்கொலோ என்று கூற
உங்கணு யகனுர் முன்னம்
உரைத்தவா கமநூல் மண்மேல்
எங்குமில் லாத தொன்று
கொடுவந்தேன் இயம்ப என்றுன். 11

பேறெனக் கிதன்மேல் உண்டோ
பிரானருள் செய்த இந்த
மாறிலா கமத்தை வாசித்
தருள்செய வேண்டும் என்ன
நாறுபூங் கோதை மாது
தவிரவே நானும் நீயும்
வேறிடத் திருக்க வேண்டும்
என்றவன் விளம்ப வேந்தன். 12

### மெய்ப்பொருளார் அரசியாரை அந்தப்புரத்திற்கு அனுப்புதல்

திருமகள் என்ன நின்ற
தேவியார் தம்மை நோக்கிப்
புரிவுடன் விரைய வந்தப்
புரத்திடைப் போக ஏவித்
தருதவ வேடத் தானைத்
தவிசின்மே லிருத்தித் தாமும்
இருநிலத் திருந்து போற்றி
இனியருள் செய்யும் என்றார். 13

### இழிசெயலும் உயர்பண்பும்

கைத்தலத் திருந்த வஞ்சக்
கவளிகை மடிமேல் வைத்துப்
புத்தகம் அவிழ்ப்பான் போன்று
புரிந்தவர் வணங்கும் போதில்
பத்திரம் வாங்கித் தான்முன்
நினைந்தவப் பரிசே செய்ய
மெய்த்தவ வேட மேமெய்ப்
பொருளெனத் தொழுது வென்றார். 14

### மெய்ப்பொருளார் தத்தனைத் தடுத்தல்

மறைத்தவன் புகுந்த போதே
மனமங்கு வைத்த தத்தன்
இறைப்பொழு தின்கட் கூடி
வாளினல் எறிய லுற்றான்
நிறைத்தசெங் குருதி சோர
வீழ்கின்றார் நீண்ட கையால்
தறைப்படு மளவில் தத்தா
நமரெனத் தடுத்து வீழ்ந்தார். 15

**மெய்ப்பொருளார் தத்தனுக்கு ஆணையிடுதல்**

வேதனை எய்தி வீழ்ந்த
வேந்தரால் விலக்கப் பட்ட
தாதனும் தத்தன் றானும்
தலையினால் வணங்கித் தாங்கி
யாதுநான் செய்கேன் என்ன
எம்பிரான் அடியர் போக
மீதிடை விலக்கா வண்ணம்
கொண்டுபோய் விடுநீ என்றார். 16

**தத்தன் இறையாணையை இயம்புதல்**

அத்திறம் அறிந்தா ரெல்லாம்
அரசனைத் தீங்கு செய்த
பொய்த்தவன் றன்னைக் கொல்வோம்
எனப்புடை சூழ்ந்த போது
தத்தனும் அவரை எல்லாம்
தடுத்துடன் கொண்டு போவான்
இத்தவன் போகப் பெற்ற
திறைவன தாணை என்றான். 17

**தத்தன் முத்தநாதனை அழைத்துச் செல்லல்**

அவ்வழி அவர்கள் எல்லாம்
அஞ்சியே அகல நீங்கச்
செவ்விய நெறியில் தத்தன்
திருநகர் கடந்து போந்து
கைவடி நெடுவாள் ஏந்தி
ஆளுறாக் கானம் சேர
வெவ்வினைக் கொடியோன் றன்னை
விட்டபின் மீண்டு போந்தான், 18

**மெய்ப்பொருளார் தத்தனின் நன்மொழி கேட்க உயிர் தாங்கி இருத்தல்**

மற்றவன் கொண்டு போன
வஞ்சனை வேடத் தான்மேற்
செற்றவர் தம்மை நீக்கித்
தீதிலா நெறியில் விட்ட
சொற்றிறங் கேட்க வேண்டிச்
சோர்கின்ற ஆவி தாங்கும்
கொற்றவன் முன்பு சென்றான்
கோமகன் குறிப்பில் நின்றான். 19

**தத்தன் மெய்ப்பொருளாரிடம் நன்மொழி கூறலும் மெய்ப்பொருளார் தத்தனைப் பாராட்டுதலும்**

சென்றடி வணங்கி நின்று
செய்தவ வேடங் கொண்டு
வென்றவற் கிடையூ றின்றி
விட்டனன் என்று கூற
இன்றெனக் கையன் செய்த
தியார்செய வல்லார் என்று
நின்றவன் றன்னை நோக்கி
நிறைபெருங் கருணை கூர்ந்தார். 20

**மெய்ப்பொருளாரின் இறுதி ஆணை**

அரசியல் ஆயத் தார்க்கும்
அழிவுறும் காத லார்க்கும்
விரவிய செய்கை தன்னை
விளம்புவார் விதியி னாலே
பரவிய திருநீற் றன்பு
பாதுகாத் துய்ப்பீர் என்று
புரவலர் மன்று ளாடும்
பூங்கழல் சிந்தை செய்தார். 21

—சேக்கிழார்.

## 3. திருவிளையாடற் புராணம்

### விறகு விற்ற படலம்

#### ஏமநாதன் மதுரை வருகை

மன்றலந் தெரியன் மார்பன்
வரகுணன் செங்கோ லோச்சிப்
பொன்றலங் காவ லானிற்
பொலியுநா ளேம நாதன்
என்றொரு விறல்யாழ்ப் பாணன்
வடபுலத் திருந்தும் போந்து
வென்றிகொள் விருதி னோடும்
விஞ்சைசூழ் மதுரை சார்ந்தான். 1

#### ஏமநாதன் பாண்டியன் அவையிற் பாடுதல்

பூழியர் பெருமான் கோயில்
புகுந்துவேத் தவையத் தெய்திச்
சூழிமால் யானை யானைத்
தொழுதுபல் புகழ்கொண் டாடி
ஏழிசை மழலை வீணை
இடந்தழீஇச் சுருதி கூட்டி
வாழியின் னிசைத்தேன் மன்னன்
அஞ்செவி வழியப் பெய்தான். 2

#### பாண்டியன் பாணபத்திரனை வருவித்தல்

மீனவன் வரிசை பெற்ற
செருக்கினும் விருதி னாலும்
மானமேல் கொண்டு தன்னோ
டின்னிசை பாட வல்ல
தானயாழ்ப் புலவர் வேறிங்
கில்லெனத் தருக்குஞ் செய்தி
கோனறிந் துழையர்க் கூவிப்
பத்திரற் கொணர்தி ரென்றான். 3

### பாண்டியன் பத்திரனை வினவுதல்

உழையரால் விடுக்கப் பட்ட
பத்திர னுவரி னென்றோன்
கழல்பணிந் தருகு நிற்பக்
கௌரிய னேக்கிப் பாணி
பழகிசை வல்லா னேடும்
பாடுதி கொல்லோ வென்ன
மழலையா யிடந்தோ ளிட்ட
பாணர்கோன் வணங்கிச் சொல்வான். 4

### பத்திரன் விடையும் பாண்டியன் ஆணையும்

தென்னவர் பெரும யானுன்
றிருவுள வலனுங் கூடன்
முன்னவ னருளுங் கூட்டு
முயற்சியான் முயன்று பாடி
அன்னவன் விருது வாங்கி
யவனைவீ றழிப்ப னென்றான்
மன்னவ னவனைப் பாடு
போகென விரைந்து சொன்னன். 5

### பத்திரன் இறைவனை வணங்கி இல்லம் சேர்தல்

மையணி மிடற்றி னனை
மதுரைநா யகனை வந்தித்
தையனே அடியேற் கின்றுன்
அருட்டுணை செய்யல் வேண்டும்
மெய்யனே யென்று போற்றி
வேண்டுகொண் டன்பு தோய்ந்த
பொய்யறு மனத்தா னில்லம்
புக்கினி திருந்தா னிப்பால். 6

### இறைவன் விறகாளாய் உருக்கொள்ளுதல்

வருத்த ஞகிவந் திரந்தவ
னிசைப்பகை மாற்ற
விருத்த ஞம்விற காளென
விண்ணிழி விமானத்
தொருத்த ஞரறி வாகிய
வுண்மையா னந்தத்
திருத்த ஞர்தம திச்சையாற்
றிருவுருக் கொள்வார். 7

### இறைவன் விறகு சுமந்து செல்லல்

அழுக்கு மூழ்கிய சிதரசைத்
தவிர்சடை யமுதம்
ஒழுக்கு வெண்மதி வாங்கியே
செருகிய தொப்ப
மழுக்கு கூனல்வெள் வாய்க்குயம்
வலம்படச் செருகி
இழுக்கு தேய்செருப் பருமறை
கடந்ததா ளேற்றி. 8

தறிந்த விந்தனந் தினந்தொறுந்
தாங்கிநீள் பங்கி
பறிந்து தேய்ந்தழுந் தியதலை
யுடையராய்ப் பரிந்து
மறிந்த கங்கையும் பங்குறை
மங்கையுங் காண
தெறிந்த விந்தனச் சுமைதிரு
முடியின்மே லேற்றி. 9

### விறகாள் ஏமநாதன் இல்லம் அடைதல்

நடந்து கொள்ளுநர்க் கருவிலே
பகர்ந்துநான் மாடம்
மிடைந்த வீதியுங் கவலையு
முடுக்கரு மிடைந்து
தொடர்ந்த வேதமும் பிரமன்மால்
சூழ்ச்சியும் பகலுங்
கடந்து போகியவ் விசைவலான்
கடைத்தலைச் செல்வார். 10

### விறகாள் யாழிசைத்துப் பாடுதல்

எடுத்த விந்தன மொருபுறத்
திறக்கியிட் டுன்றி
அடுத்த வன்புறந் திண்ணைமீ
தமர்ந்திளைப் பாறித்
தொடுத்த வின்னிசை சிறிதெழீஇப்
பாடினர் சுருதி
மடுத்தி யாரவன் பாடுவா
னென்றிசை வல்லான். 11

### ஏமநாதனுக்கு விறகாள் கூறிய விடை

வண்டறை கொன்றை யான்முன்
வந்துநீ யாரை யென்றான்
பண்டரு விபஞ்சி பாண
பத்திர னடிமை யென்றான்
முண்டக மலரோன் மாயோன்
புரந்தரன் முதன்மற் றேனை
அண்டருந் தன்குற் றேவ
லடிமையாக் கொண்ட வம்மான். 12

கனியிசைக் கிழவன் றன்கீழ்க்
கற்பவ ரநேகர் தம்முள்
நனியிசைக் கிழமை வேட்டு
நானுமவ் விளைஞ ஞனேன்
தனியிசைக் கிழவ ஞேக்கித்
தசையெலா மொடுங்க் மூத்தாய்
இனியிசைக் கிழமைக் காகா
யென்றெனைத் தள்ளி விட்டான். 13

இறைவன் மீண்டும் பாடுதல்

வெவ்விற கெறிந்து கட்டி
விலைபகர்ந் தேனு மைய
இவ்வயி ரேம்பு கேனென்
றித்தொழில் பூண்டே னென்ன
நைவளந் தெரிந்த ஏம
நாதனும் விறகு மள்ளா
அவ்விசை யொருகா லின்னும்
பாடென ஐயன் பாடும். 14

இறைவன் பாடிய இசையின் சிறப்பு

பைத்தலை விடவாய் நாகம்
பல்பொறி மஞ்ஞை நால்வாய்
மத்தமா னரிமான் புல்வாய்
வல்லிய மருட்கை யெய்தித்
தத்தமா றறியா வாகித்
தலைத்தலை மயங்கிச் சோர
இத்தகை மாவும் புள்ளு
மிசைவலைப் பட்ட வம்மா. 15

கண்ணிறை நுதலோன் சாம
கண்டத்தி னெழுந்த முல்லைப்
பண்ணிறை தேவ கீதஞ்
சராசர வுயிரும் பாரும்
விண்ணிறை திசைக ளெட்டும்
விழுங்கித்தன் மயமே யாக்கி
உண்ணிறை யுயிரு மெய்யு
முருக்கிய திசைவல் லானை. 16

ஏமநாதன் அஞ்சி ஓடுதல்

இழுக்கி விட்டவிக் கிழமக
னிசையிதே லந்த
வழுக்கில் பத்திரன் பாடலெற்
றேவென மதியா
அழுக்க முற்றெழுந் திசைவலா
னடுத்ததன் பண்டர்
குழுக்க ளுங்குலை குலைந்திட
விருள்வழிக் கொண்டான். 17

இறைவன் பத்திரன் கனவில் கூறுதல்

அன்று பத்திரன் கனவில்வந்
தாடலேற் றழகர்
இன்று பத்திர விசைவலா
னிடைவிற காளாய்ச்
சென்று பத்திர னடிமையா
மென்றுபாண் செய்து
வென்று பத்திரஞ் செய்துநின்
வேண்டுகோ ளென்றார். 18

பத்திரன் பரமனைப் பணிதல்

கண்ம லர்ந்தெழு பத்திரன்
கரையிலா வுவகை
உண்ம லர்ந்தெழு மன்புகொண்
டுக்கவெங் கதிரோன்
விண்ம லர்ந்தெழு முன்புபோய்
விசும்பிழி கோயிற்
பண்ம லர்ந்தநான் மறைப்பொரு
ளடித்தலம் பணிந்தான். 19

—பரஞ்சோதி முனிவர்.

## 4. சீறாப் புராணம்

### பாத்திமா திருமணப் படலம்

பாத்திமா வாயிலில் பக்கீறு கூவுதல்

அடிதிரை வளைமணி யெறியு மாவிவாய்க்
கடிமரை விரிதர விடிந்த காலையிற்
படியினும் பெரும்பொறை பாத்தி மாதிரு
வடிவுறும் புதுமணக் கோல வாயிலின். 1

தடியுலர்ந் துடனரம் பெழுந்து தங்கிலா
மிடியினன் பசியடைத் திருக்கு மெய்யினன்
பிடிவிர லுருவிலாப் பீற லாடையன்
கொடுகிய குளிரின்வந் தொருவன் கூயினன். 2

பாத்திமா பக்கீறை, 'வந்தது ஏன்?' என வினுதல்

கூயவ னியாவனென் றெழுந்து கோதையர்
நாயகி யெதிர்ந்துபக் கீறை நன்குறச்
சாயிபு பதமலர் வருந்தத் தக்கவென்
வாயிலின் வந்ததென் மவுலு வீரென்றார். 3

பக்கீறின் வேண்டுகோள்

கடிமனை யிஃதெனக் கருதி வந்தனன்
வடிவுறு மயிலனீர் வயிற்று றும்பசிக்
கொடுமையுந் தவிர்த்துடற் குளிரு நீங்கவோர்
புடவையு மருள்கவென் றெடுத்துப் பேசினன். 4

பாத்திமா பக்கீறுக்கு உணவு உடை அளித்தல்

வறியவ னுரைத்தசொற் கேட்டு மாமயில்
அறுசுவைக் கறியுட னன்ன மீந்துமேற்
குறையற வியற்றிய புதுக்குப் பாயமும்
பெறுகவென் றளித்தன ரறிவின் பெற்றியால். 5

பக்கீறு பாத்திமாவை வாழ்த்திச் செல்லல்

இகலறு மனத்தவ ரீந்த போசனம்
அகமகிழ் தரவயி றார வுண்டுநற்
றுகிலையு மொல்லையிற் புனைந்து தோமறும்
புகழொடும் வாழ்த்திபக் கீறு போயினன். 6

முகம்மது பாத்திமாவை வினுதல்

மணியொளி முகம்மது மகவை நோக்கிநன்
கிணைமணிப் பணியொடும் புதிய தின்றியே
பணிமொழி யீரொரு பழங்குப் பாயத்தை
யணிவதென் னெமக்கெடுத் தருளு வீரென்றார். 7

பாத்திமாவின் மறுமொழி

தந்தையீர் துகிலிலாச் சஞ்ச லத்தினல்
வந்தன னொருபக்கீர் வழங்கி னேனென
இந்தெனு நுதலிய ரியம்பச் செவ்விய
மந்தரப் புயநபி மறுத்துக் கூறுவார். 8

முகம்மது நபி உரைத்தல்

இரவல ரிடத்தினிற் பழைய தீந்துநற்
புரியிழை மென்றுகிற் புதுக்குப் பாயத்தை
மருமணக் கோலத்தின் வனைய வேண்டுமென்
றுரைதர மறுமொழி யுரைப்ப தாயினர். 9

பாத்திமா ஆடை வழங்கியதற்குக் காரணங் கூறுதல்

அழகிய தெவையுமல் லாவுக் காகவே
விழைவுடன் கொடுத்திட வேண்டு மென்றுநம்
பழமறை வாக்கினுற் பகர்ந்த தாலரோ
மழைதவழ் கொடையனீர் வழங்கி னேனென்றார். 10

பாத்திமாவின் விடைகேட்டு அனைவரும் மகிழ்தல்

பாத்திமா வெனுமயில் பகரக் கேட்டலர்த்
தேத்தரு புயநபி மகிழ்ந்த செய்கையால்
கோத்திரத் தவர்செழு முகங்கள் கோதறப்
பூத்தசெந் தாமரைக் காடு போன்றவே. 11

—உமறுப் புலவர்.

## 5. தேம்பாவணி

### காசை சேர் படலம்

திருக்குடும்பத்தார் காசை நகரை அடைதல்

திலங்குன் றுநிழல் தேன்மலர் பூப்பநீர்ப்
புலங்குன் றுமழை பொய்யில தூவமேல்
நலங்குன் றுநகர் நாடு நயந்தெழ
வலங்குன் றுதவர் மாநகர் எய்தினர். 1

திருக்குடும்பத்தார் அழுகுரல் கேட்டல்

வேலை மாமணிப் பீடிகை வீதியும்
சாலை பூம்புகை வீதியும் தாண்டிநற்
பாலை யாழிசை பாடினர் வீதியுள்
மாலை மாடத் தழுங்குரல் கேட்டனர். 2

காசை நகருக்குள் திருக்குடும்பத்தார்
ஆற்றிய புதுமைகள்

ஓர் அன்னை உயிர்போக ஐவர் அழுதல்

திரிசு மந்தில தீபமொத் தாவிபோய்
அரிசு மந்தவ ணைகிடந் தன்னைசூழ்
வரிசு மந்தவி ளமயில் மானவைந்
தெரிசு மந்தக ணரழு தேங்கினர். 3

சூசை உளம் இரங்குதல்

ஆங்கு நானநெய்ப் பூவள கங்கெட
வீங்கு நோயினி லத்தில்வி ழுந்தடித்
தேங்கு மேதையைக் கேட்டவி ணர்க்கொடி
ஓங்கு சூசையு ளத்திலி ரங்கினன். 4

இறந்த அன்னை உயிர் பெறல்

கொம்பி லாக்கொடி போலிளங் கோதையார்
பம்பி யார்த்தழும் பாசறை நோக்கென
நம்பி நாதனை வேண்டலின் நல்லுயிர்
எம்பி ரானிடும் ஏவலின் மீண்டதே. 5

அனைவரும் திருக்குமரனை வாழ்த்துதல்

தாயெ ழுந்துவ ரந்தரு கைபெறு
தாயெ ழுந்தவி யப்பில னைவரும்
தூயெ ழுந்தக ளிப்பொடு துள்ளிவான்
மீதெ ழுந்தவி மலனை வாழ்த்தினர். 6

## ஒரு பெண்ணின் முடநோயை நீக்குதல்

வருந்திக் கையொடு கால்வழங் காதவள்
பொருந்திக் கைக்கொடை உய்த்தவர் பூமுகம்
திருந்தித் தீட்டிய தேவருள் கண்டென்நோய்
இருந்திற் றுற்றும் மருந்திலை யோவென்றாள். 7

அணங்கு தேவம கன்முகத் தாறுமென்
றணங்கு பேமுற ஆர்வத் தோனறைந்
தணங்கு தீர்ந்தவள் வாய்ப்புகழ்க் கஞ்சினர்
அணங்கு மின்னென ஆங்கொளித் தாரரோ. 8

## காசைநகர் பொலிவு பெறல்

மாலை வாய்மணம் போலவும் வாசப்பூஞ்
சோலை வாய்நிழல் போலவும் தூயறச்
சாலை வாயினர் தாங்கிய முப்பகற்
காலை வாய்ந்தது காசறக் காசையே. 9

—வீரமாமுனிவர்.

# IV. பல்சுவை

## அ. வருணனை

### 1. வயலில் குழந்தை வளர்ப்பு

சேலுண்ட ஒண்க ணாரில்
திரிகின்ற செங்கா லன்னம்
மாலுண்ட நளினப் பள்ளி
வளர்த்திய மழலைப் பிள்ளை
காலுண்ட சேற்று மேதி
கன்றுள்ளிக் கனைப்பச் சோர்ந்த
பாலுண்டு துயிலப் பச்சைத்
தேரைதா லாட்டும் பண்ணை.

—கம்பர்.

### 2. கோழி கூவுதல்

தையல் துயர்க்குத் தரியாது தம்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்.

—புகழேந்திப் புலவர்.

## 3. தொழில்

இரும்பைக் காய்ச்சி உருக்கிடு வீரே
இயந்தி ரங்கள் வகுத்திடு வீரே
கரும்பைச் சாறு பிழிந்திடு வீரே
கடலில் மூழ்கிநன் முத்தெடுப் பீரே
அரும்பும் வேர்வை உதிர்த்துப் புவிமேல்
ஆயி ரந்தொழில் செய்திடு வீரே
பெரும்பு கழ்நுமக் கேயிசைக் கின்றேன்
பிரம தேவன் கலையிங்கு நீரே.

—சுப்பிரமணிய பாரதியார்.

## 4. திருவள்ளுவர்

புத்தகம் நூறு புரட்டிக் களைப்புற்றுச்
சித்தம் கலங்கித் திகைப்பதேன்—வித்தகன்
தெய்வப் புலவன் திருவள் ளுவன்சொன்ன
பொய்யில் மொழியிருக்கும் போது.

—தேசிகவிநாயகம் பிள்ளை.

## 5. ஏரி

மாரி வந்தால் நீரைத் தேக்கும் ஏரி—அது
வயலுக் கெல்லாம் நீர்கொ டுக்கும் ஏரி
ஊரி லுள்ள மாடு குடிக்கும் ஏரி—அங்
குள்ளவரும் தண்ணீர் மொள்ளும் ஏரி
ஏரிக்கரை எல்லாம் பனைதென்னை—அதன்
இடையிடையே அலரி நல்ல புன்னை
சார்ந்தவர்கள் எனக்குத் தந்தார் தொன்னை—பனஞ்
சாற்றை யூற்றிக் குடிக்கச் சொன்னார் என்னை.

—பாரதிதாசன்

## 6. உத்தமர் காந்தி

சொல்லுவதிங் கெல்லார்க்கும் சுலப மாகும்
　　சொன்னபடி நடப்பவர்கள் மிகவும் சொற்பம்
எல்லையின்றி நீதிகளை எழுது வார்கள்
　　எழுதியது பிறருக்கே தமக்கென் றெண்ணுர்
தொல்லுலகில் நாமறிந்த தலைவர் தம்முள்
　　சொன்னதுபோல் செயல்முயன்ருர் இவரைப்
[போல
இல்லையெனும் மோகனதாஸ் கரம்சந்த் காந்தி
　　இந்தியத்தாய் உலகினுக்கே ஈந்த செல்வம்.

—நாமக்கல் வே. இராமலிங்கம் பிள்ளை

## 7. ஞாயிறு

வண்டுகள் யாழை மீட்ட
　　வரிக்குயில் பண்ணி சைக்க
அண்டையில் கல்லிற் பாயும்
　　அருவியின் முழவிற் கேற்பக்
கொண்டையைக் குலுக்கிச் சேவல்
　　குரலிசைத் தாளம் சேர்க்கக்
கொண்டல்சூழ் வான ரங்கில்
　　நீயாடும் கூத்தென் சொல்வேன்.

—வாணிதாசன்.

## 8. ஆறு

மலைமீது தோன்றிப்பின் அருவி.யாக
　　மன்னர்பகைப் போர்முரசம் என்ன ஆர்த்து
நிலையாமல் ஓடிப்போய்க் கரையே யில்லா
　　நீர்க்கடலில் மறைகின்ற ஆறு கண்டேன்
உலையாத உண்மைகண்டேன் உலகில் தோன்றி
　　உருப்பெற்ற பொருளொருநாள் மறைதல்
[உண்மை
கலைமானே மறைவதன்முன் மக்கள் வாழ்வைக்
　　காண்கின்ற ஆற்றைப்போல் கடமை செய்க.

—முடியரசன்.

## ஆ. சீட்டுக் கவி

### சிவபெருமான் சேரலனுக்கு விடுத்த சீட்டுக்கவி

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற
கன்னம் பயில்பொழி லால வாயில்
மன்னிய சிவன்யான் மொழிந்திடு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
கொருமையி னுரிமையி னுதவி யணிதிகழ்
குருமா மணிதிகழ் குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்கும் சேரலன் காண்க
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்பா லென்பா லன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

—மதுரைச் சோமசுந்தரப் பெருமான்.

## இ. இரட்டுற மொழிதல்

### 1. பாம்பும் வாழைப்பழமும்

நஞ்சிருக்குந் தோலுரிக்கும் நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டால் மீளாது-விஞ்சுமலர்த்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம்.

—காளமேகப் புலவர்.

### 2. கலைசைச் சிலேடை வெண்பா

ஆவ லுடன் பாவலரும் ஆறுகால் வண்டினமும்
காவலரைச் சூழும் கலைசையே—மேவும்
அரிவையம் பாகத்தான் அரனொருமுன் றெய்தோன்
அரிவையம் பாகத்தா னகம்.

—சுப்பிரமணிய முனிவர்.

## ஈ. சிற்றிலக்கியம்

## 1. கலிங்கத்துப் பரணி

### குருதி வெள்ளத்தில் யானை மிதந்து செல்லல்

உடலின்மேல் பலகாயஞ் சொரிந்து பின்கால்
உடன்பதைப்ப உதித்தே ஒழுகும் யானை
கடலின்மேல் கலந்தொடரப் பின்னே செல்லுங்
கலம்போன்று தோன்றுவன காண்மின்
[காண்மின். 1

### போர்க்களத்தில் வீரர் முகமலர்ந்து கிடத்தல்

விருந்தினரும் வறியவரும் நெருங்கி யுண்ண
மேன்மேலும் முகமலரும் மேலோர் போலப்
பருந்தினமும் கழுகினமும் தாமே யுண்ணப்
பதுமமுகம் மலர்ந்தாரைப் பார்மின் பார்மின். 2
—சயங்கொண்டார்.

## 2. முத்தொள்ளாயிரம்

### சேர நாடு

அள்ளற் பழனத் தரக்காம்பால் வாயவிழ
வெள்ளந்தீப் பட்ட தெனவெரீஇப்—புள்ளினந்தங்
கைச்சிறகாற் பார்ப்பொடுக்கும் கவ்வை
[யுடைத்தரோ
நச்சிலைவேற் கோக்கோதை நாடு.

## 3. திருக்குற்றாலக் குறவஞ்சி

### குற்றால மலைவளம்

ஆடுமர வீனுமணி கோடிவெயில் எறிக்கும்
அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்
வேடுவர்கள் தினைவிரைக்கச் சாடுபுனந் தோறும்
விந்தையகில் குங்குமமுஞ் சந்தனமும் நாறும்
காடுதொறும் ஓடிவரை ஆடுகுதி பாயும்
காகமணு காமலையில் மேகநிரை சாயும்
நீடுபல வீசர்கயி லாசகிரி வாசர்
நிலைதங்கும் திரிகூட மலையெங்கள் மலையே.

—திரிகூடராசப்பக் கவிராயர்.

## 4. முக்கூடற் பள்ளு

### நாட்டு வளம்

### மூத்த பள்ளி

கறைபட் டுள்ளது வெண்கலைத் திங்கள்
கடம்பட் டுள்ளது கம்பத்து வேழம்
சிறைபட் டுள்ளது விண்ணெழும் புள்ளு
திரிபட் டுள்ளது நெய்படுந் தீபம்
குறைபட் டுள்ளது கம்மியர் அம்மி
குழைபட் டுள்ளது வல்லியம் கொம்பு
மறைபட் டுள்ள தரும்பொருட் செய்யுள்
வளமை ஆசூர் வடகரை நாடே. 1

இளையபள்ளி

காயக் கண்டது சூரிய காந்தி
கலங்கக் கண்டது வெண் தயிர்க் கண்டம்
மாயக் கண்டது நாழிகை வாரம்
மறுகக் கணடது வான்சுழி வெள்ளம்
சாயக் கண்டது காய்க்குலைச் செந்நெல்
தணிப்பக் கண்டது தாபதர் உள்ளம்
தேயக் கண்ட துரைத்திடுஞ் சந்தனம்
சீவல மங்கைத் தென்கரை நாடே. 2

—என்னயினுப் புலவர்.

## 5. தனிப் பாடல்

### 1. இடுக்கண் வருங்கால் நகுக

சீராடை யற்ற வயிரவன் வாகனம் சேரவந்து
பாராரும் நான்முகன் வாகனம் தன்னைமுன்
[பற்றிக்கௌவி
நாரா யணனுயர் வாகன மாயிற்று நம்மைமுகம்
பாரான்மை வாகனன் வந்தே வயிற்றினில்
[பற்றினனே.

—அந்தகக்கவி வீரராகவர்.

### 2. வினு-விடை

இரவல னேயுனக் கில்லாத தென்ன இதயமென்ன
பரவுண வேது சுவையற்ற தென்னசொற்
[பான்மையென்ன
தரவுரை செய்திட வென்று னதற்கொன்றும்
[சாற்றிலன்யான்
வரதிரு வேங்கட நாதாவென் றேன்பொன்
[வழங்கினனே.

—இராமசந்திர கவிராயர்.

## உ. வழிபாட்டுப் பாடல்கள்

### 1. தேவாரம்

நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை
தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான
சங்கரன்நற் சங்கவெண் குழையோர் காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளா ஆளாய்க்
கொய்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.

—திருநாவுக்கரசர்.

### 2. பெரிய திருமொழி

வந்தாய் என்மனம் புகுந்தாய் மன்னிநின்றாய்
நந்தாத கொழுஞ்சுடரே எங்கள் நம்பீ
சிந்தா மணியே திருவேங்கட மேய
எந்தாய் இனியா னுனையென் றும்விடேனே.

—திருமங்கையாழ்வார்.

### 3. இரட்சணிய யாத்திரிகம்

வானமும் பூமியும் மகிழ்கொண் டோங்கிட
ஞானமும் நன்மையும் நனிசி றந்திட
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தீனரட் சகன்பதம் சிந்தித் தேத்துவாம்.

—ஹெ. ஆ. கிருட்டினப் பிள்ளை.

## 4. நீதி நூல்

கதிரவன் கிரணக் கையால்
கடவுளைத் தொழுவான் புட்கள்
சுதியொடும் ஆடிப் பாடித்
துதிசெயும் தருக்க ளெல்லாம்
பொதியலர் தூவிப் போற்றும்
பூதந்தந் தொழில்செய் தேத்தும்
அதிர்கடல் ஒலியால் வாழ்த்தும்
அகமேநீ வாழ்த்தா தென்னே.

—வேதநாயகம் பிள்ளை.

## 5. மலரும் மாலையும்

நாடிப் புலங்கள் உழுவார் கரமும் நயவுரைகள்
தேடிக் கொழிக்கும் கவிவாணர் நாவும் செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர் நெஞ்சும் உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலேயுன் பாதம் அடைக்கலமே.

—தேசிகவிநாயகம் பிள்ளை.

# செய்யுள்

## குறிப்புரை

# I. வாழ்த்து

## 1. தேவாரம்

### நூலும் ஆசிரியரும்

தேவாரம்-(தே+வாரம்) தெய்வத்துக்குரிய இசைப் பாடல். தே+ஆரம் எனப் பிரித்துத் தெய்வத்திற்கு அணியும் பூமாலை போன்ற பாமாலை என்றும் பொருள் கொள்ளலாம். தே-தெய்வம். வாரம்-சொல் நயமும் பொருள் நயமும் கொண்ட பாக்கள். ஆரம்-மாலை. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி, மாணிக்கவாசகர் ஆகிய சைவ சமய குரவர் நால்வரில், முதல் மூவராலும் பாடப் பெற்ற பாடல் தொகுதிக்குத் தேவாரம் என்பது பெயர்.

திருநாவுக்கரசர் திருமுனைப்பாடி நாட்டுத் திருவாமூரில் வேளாளர் மரபில் குறுக்கையர் குடியில் தோன்றியவர்; அப்பர் என்னும் அருமைத் திருப்பெயரினர்; அற்புதங்கள் பல இயற்றியவர். இவர்தம் இயற்பெயர் மருள்நீக்கியார் என்பதாகும். இவர் சமண சமயத்தைச் சார்ந்தபோது தருமசேனர் என்னும் பெயரையும், சைவ சமயத்தைச் சார்ந்தபோது திருநாவுக்கரசர் என்னும் பெயரையும் பெற்றவராவார். இவர் தந்தையார்: புகழனூர்; தாயார்: மாதினியார்; தமக்கையார்: திலகவதியார். இவர் காலம்: கி. பி. ஏழாம் நூற்றூண்டு. இவர் இயற்றிய பாடல்கள் பன்னிரு திருமுறைகளுள் நான்காம் திருமுறை முதல் ஆறும் திருமுறை வரை உள்ளவை ஆகும்.

### அருஞ்சொற் பொருள்

திங்கள்-சந்திரன். ஞாயிறு-சூரியன். மதி-மூன்றும் பிறைச் சந்திரன். வேனிலான்-மன்மதன். இறைவன் தேனைப் போலவும், பாலைப் போலவும் இனிப்பவன்; திங்களைப் போலவும், ஞாயிற்றைப் போலவும் ஒளி தருபவன். 'மன்மதன் சிவபெருமானுடைய தவத்தைக் கலைத்தான்; அப்பொழுது சிவபெருமான் அவனை நெற்றிக்கண்ணால் அழித்தார்' என்பது புராணக் கதை.

## 2. திருவாசகம்

### நூலும் ஆசிரியரும்

திருவாசகம்-(திரு+வாசகம்) அழகிய மொழிகளால் அமைந்த பாடல்களையுடைய நூல். இந்நூல் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாவதாகும். இதனை இயற்றியவர் சைவ சமய குரவர் நால்வருள் ஒருவராகிய மாணிக்கவாசகர் ஆவார்.

மாணிக்கவாசகர் பாண்டிய நாட்டிலே உள்ள திருவாதவூரிலே அமாத்தியர் என்னும் அந்தணர் மரபில் தோன்றியவர். இவருடைய இயற்பெயர் வாதவூரர் என்பதாகும். இவருக்குத் 'தென்னவன் பிரமராயன்' என்ற பட்டப் பெயரும் உண்டு. இவர் தந்தையார்: சம்புபாதாசிருதர்; தாயார்: சிவஞானவதியார். மாணிக்கவாசகர் அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சுத் தொழில் புரிந்து வந்தவரானவர். இவர் இயற்றிய வேறு நூல்: திருக்கோவையார். இவரது காலம் கி. பி. மூன்றும் நூற்றாண்டு என்றும், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்றும் கூறுவர்.

### அருஞ்சொற் பொருள்

இருள்-அஞ்ஞானம். அகற்றி-நீக்கி. எஞ்ஞான்றும்-எப்பொழுதும். சீரார்-(சீர்+ஆர்) சிறப்புப் பொருந்திய. உவந்து-மகிழ்ந்து. பெருந்துறை-ஆவுடையார் கோவில்.

## 3. திவ்வியப் பிரபந்தம்

### நூலும் ஆசிரியரும்

திருமாலைக் குறித்துப் பன்னிரு ஆழ்வார்கள் பாடிய நாலாயிரம் பாடல்கள் அடங்கிய நூலுக்கு நாலாயிர திவ்வியப் பிரபந்தம் என்பது பெயர். இஃது ஒரு வைணவ நூல். பொய்கையார், பூதத்தார், பேயார், திருமழிசையார், நம்மாழ்வார், குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்ட ரடிப்பொடியாழ்வார், திருப்பாணுழ்வார், திருமங்கையாழ் வார், மதுரகவியாழ்வார், ஆண்டாள் ஆகியவர்கள் பன்னிரு ஆழ்வார்கள் ஆவார்கள். நாலாயிர திவ்வியப் பிரபந்தம் முதலாயிரம், பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி என்னும் நான்கு பகுதிகளையுடையது.

இப்பாட்டை இயற்றியவர் தொண்டரடிப்பொடியாழ் வார் ஆவார். இவர் தஞ்சாவூரை அடுத்த திருமண்டங்குடி என்னும் ஊரில் பிறந்தவர். இவர் காலம் கி. பி. எட்டாம் நூற்றுண்டாகும். இவர் பாடிய பிரபந்தங்கள் 'திருமாலை', 'திருப்பள்ளியெழுச்சி' என்னும் இரண்டுமாம். பாடப் பகுதி யில் எடுத்தாளப் பெற்றுள்ள செய்யுள், 'திருமாலை'யில் உள்ளதாகும்.

### அருஞ்சொற் பொருள்

புனிதம்-தூய்மை. பொழில்-சோலை. அரங்கம்-திரு வரங்கம். இது காவிரிக்கும் கொள்ளிடத்திற்கும் இடையே அமைந்துள்ளது.

## 4. தேம்பாவணி

### நூலும் ஆசிரியரும்

தேம்பாவணி-(தேம்பா+அணி) வாடாத மலர் மாலை யைப் போன்ற பாமாலை. தேம்பா-வாடாத; மங்காத. அணி-மலர்மாலை. இந்நூல் கிறித்து நாதரை வளர்த்த தந்தையாகிய சூசையப்பர் வரலாற்றைக் கூறுவது. வீரமா முனிவர் என்னும் கிறித்தவ மதபோதகரால் இயற்றப் பெற்றது; மூன்று காண்டங்களையும், முப்பத்தாறு படலங்

களையும், மூவாயிரத்து அறுநூற்றுப் பதினைந்து செய்யுட்களையும் கொண்டது.

வீரமாமுனிவர் இத்தாலி நாட்டில் மாந்துவா மாவட்டத்தில் காஸ்திகிலியோனே எனும் சிற்றூரில் கி.பி. 1680ஆம் ஆண்டு நவம்பர்த் திங்கள் 8ஆம் நாள் பிறந்தவர். இவருடைய இயற்பெயர் கான்ஸ்டான்டைன் சோசப் பெஸ்கி என்பதாகும். தைரியநாத சுவாமி, இஸ்மதி சன்னியாசி என்னும் பெயர்களும் இவருக்குண்டு. இவர் தம் இருபதாம் வயதில் சமயத் தொண்டாற்றத் தாய்நாட்டை விட்டுத் தமிழ் நாட்டிற்கு வந்தார்; மதுரையில் தங்கியிருந்து சுப்பிரதீபக் கவிராயரிடம் தமிழ்மொழியை நன்கு கற்றார்; தமிழில் சொற்பொழிவாற்றவும், செய்யுள் இயற்றவும் வல்லமை பெற்றார். தமிழர் இவரை வீரமாமுனிவர் என்று அழைத்தனர். இவர் இயற்றிய வேறு நூல்கள்: சதுரகராதி, தொன்னூல் விளக்கம், திருக்காவலூர்க் கலம்பகம், கித்தேரி அம்மாள் அம்மானை, பரமார்த்த குரு கதை முதலியனவாகும்.

### அருஞ்சொற் பொருள்

விதி எழுந்த–விதித்த முறையில் சிறந்த. மெய் வேதம்–சத்திய வேதம் (விவிலியம்). நன்னுதன்–இயேசு. துதி–புகழ். கைத் தாதை–வளர்த்த தந்தை. மதி எழுந்த பதத்தினள்–பிறைமேல் எழுந்த அடிகளை உடைய மரியன்னை. நிதி எழுந்த விண்–பொன்னுலகாகிய மோட்சம். நேடுதும்–தேடியடைவோம்.

## 5. சீறாப் புராணம்

### நூலும் ஆசிரியரும்

'சீறத்' என்னும் அரபுச் சொல் தமிழில் 'சீறா' என வரும். இச்சொல்லுக்கு வாழ்க்கை வரலாறு என்பது பொருள். முகம்மது நபியின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவதால் இந்நூல் சீறாப் புராணம் என்னும் பெயர் பெற்றது. இது விலாதத்துக் காண்டம், நுபுவ்வத்துக் காண்டம், ஹிஜ்ரத்

ரத்துக் காண்டம் என்னும் மூன்று காண்டங்களையும், தொண்ணூற்றிரண்டு படலங்களையும் கொண்டது. இதனை இயற்றியவர் உமறுப் புலவர் ஆவார்.

உமறுப் புலவர் தென்பாண்டி நாட்டில் முந்நூறு ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவர். இவர் தந்தையார்: ஷெய்கு முகம்மது அலியார் என்னும் சேகு முதலியார் ஆவார். உமறுப் புலவர் கடிகைமுத்துப் புலவரிடம் தமிழ் பயின்றவர்; எட்டையபுரம் சமத்தானத்தில் அவைக்களப் புலவராய் விளங்கியவர். இவர் காலம் கி.பி. பதினேழாம் நூற்றாண்டு ஆகும்.

## அருஞ்சொற் பொருள்

திருவினும் திரு-எல்லாச் செல்வங்களிலும் சிறந்த செல்வம். தெளிவு-அறிவு. மரு-மணம். பொருவினும்-ஒப்பாயினும். பூதலம்-பூமி. பெருந்தலம்-பெரிய பூமி. புரந்த-காத்த. கருத்தனை-தலைவனை; முகம்மது நபியை. பொருத்துதல்-மனத்தில் அமைத்தல். கருத்து-எண்ணம்.

## வினாக்கள்

1. திருநாவுக்கரசர் இறைவன் எவற்றைப் போல் இனியவன் என்று குறிப்பிட்டுள்ளார்?
2. திருநாவுக்கரசர் கூறும் இறைவனின் இயல்புகள் யாவை?
3. பெருந்துறை இறைவனின் செயல் என்ன?
4. மாணிக்கவாசகர் உள்ளத்தை இறைவன் கோவிலாகக் கொண்டது எங்ஙனம்?
5. அரங்கமாநகருள் காணும் திருமாலின் தோற்றம் யாது?
6. எதை மறந்து வாழ முடியாது என்று தொண்டரடிப் பொடியாழ்வார் கூறுகின்றார்?
7. மரியம்மையை வாழ்த்தியோர் யாவர்? அவர்கள் எங்குச் சென்றனர்?
8. உமறுப் புலவர் கருத்தனை எவ்வாறு போற்றுகின்றார்?

# II. நீதி

## 1. திருக்குறள்

### நூலும் ஆசிரியரும்

திருக்குறள் என்பதன் பொருள், மேன்மையான குறள் வெண்பாவினாலாகிய நூல் என்பதாகும். தமிழில் உள்ள நீதி நூல்களில் தலைசிறந்தது இத்திருக்குறள் நூலே ஆகும். இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று. இந்நூல் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்னும் மூன்று பிரிவுகளை உடையது; *133* அதிகாரங்களையும், அதிகாரத்திற்குப் பத்துப் பாடல்களாக *1330* குறள்களையும் கொண்டது; 'உலகப் பொதுமறை' என்று யாவராலும் போற்றப்படும் பெருமை பெற்றது.

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர் ஆவார். இவர் பெற்றோர் ஆதி-பகவன் எனவும், இவர் ஊர் மயிலாப்பூர் எனவும் மதுரை எனவும், இவர் மார்க்கசகாயர் மகள் வாசுகி அம்மையாரை மணந்து வாழ்ந்தார் எனவும், வள்ளுவன் ஒருவனால் வளர்க்கப் பெற்றமையின் இப்பெயர் பெற்றார் எனவும் கூறுவர். ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இவர் வாழ்ந்தவர் ஆதலால், இவற்றுள் எஃது உண்மையான வரலாறாக இருக்கும் எனத் துணிந்து கூற இயலவில்லை.

### அருஞ்சொற் பொருள்

*1.* வேண்டுதல்-விரும்புதல். வேண்டாமை - வெறுத்தல். யாண்டும்-எக்காலத்தும். இடும்பை-துன்பம். இல-இல்லை.

*2.* விசும்பு-வானம்; மேகம்: ஆகுபெயர். மற்று-வீழாதாயின். ஆங்கே-அப்பொழுதே. தலை-நுனி. காண்பு-காணுதல்: தொழிற்பெயர்.

3. அழுக்காறு-பொறாமை. அவா-ஆசை. வெகுளி-கோபம் இன்னுச் சொல்-கடுஞ்சொல். இழுக்கு-குற்றம். இயன்றது-நடந்தது.

4. பேணி-காத்து; உபசரித்து. தகை சான்ற-நன்மை அமைந்த. சொல்-புகழ். சோர்வு - மறத்தல்: தொழிற் பெயர்.

5. ஒருவற்கு-ஒருவனுக்கு. அணி - ஆபரணம். பிற-உடம்பில் அணியும் பிற ஆபரணங்கள்.

6. இனிய-நன்மை தரத்தக்க இனிமையான சொற்கள். இன்னுத-துன்பத்தைத் தரத்தக்க தீய சொற்கள். கனி-பழம். கவர்ந்து அற்று-பறித்துத் தின்பதற்கு ஒப்பாகும்.

7. காலம்-சமயம். நன்றி-உதவி. ஞாலம்-உலகம். மாண-மிக.

8. தினை-தினை அரிசி; சிறிய அளவினைக் காட்டுதற்குப் பயன்படுத்தும் சொல். துணை-அளவு. பனை-பனைமரம்; ஓங்கி உயர்ந்து பருத்து இருக்கத் தக்க ஒரு பெரிய பொருளைக் குறித்தற்காக வழங்கும் சொல்.

9. பணிதல்-அடங்குதல். செல்வம் தகைத்து-செல்வம் போலச் சிறப்புடையது.

10. ஒறுத்தார்க்கு-தண்டித்தவர்க்கு. பொன்றும் துணையும்-அழியும் காலம் வரையிலும். பொன்றுதல்-அழிதல். துணை-அளவு; வரையறை.

11. பகச் சொல்லி-நீங்குமாறு சொல்லி. கேளிர்-நண்பர்; சுற்றத்தார். நக-மகிழும்படி. நாட்பாடல்-நட்புச் செய்தல். தேற்றுதவர்-அறியாதவர்.

12. ஊருணி-ஊரார் நீர் உண்ணுதற்கு இடமாகிய குளம்: காரணப் பெயர். நிறைந்து அற்று-நிறைந்ததைப் போன்றது. உலகு - உலகநடை. அவாம்-விரும்பும். பெருமை + அறிவு - பேரறிவு. பேரறிவாளன்-பெரிய அறிவினையுடையவன். திரு-செல்வம்.

13. உள்ளத்தால்-மனத்தால். உள்ளலும் - நினைத்தலும். தீது-குற்றம். கள்ளத்தால்-அறியா வகையால்; வஞ்சனையால். கள்வேம்-கவர்ந்து கொள்ளுவோம். எனல்-என்று கருதற்க.

14. புறம்-உடம்பின் வெளிப்புறம். அமையும்-உண்டாகும். அகம்-உடம்பின் உட்புறமாகிய மனம். வாய்மையால்-உண்மை பேசுவதால். காணப்படும்-உண்டாகும்.

15. நகை-முகத்தின்கண் தோன்றும் மலர்ச்சி. உவகை-உள்ளத்தின்கண் தோன்றும் மகிழ்ச்சி. கொல்லும்-அழிக்கும். சினத்தின்-கோபத்தைக் காட்டிலும்.

16. இன்னு-துன்பம். முற்பகல்-பகலினது முற்கூறு; காலை 6 மணி முதல் 12 மணி முடிய உள்ள நேரம். பிற்பகல்-பகலினது பிற்கூறு; 12 மணிக்கு மேல் 6 மணி முடிய உள்ள நேரம்.

17. வேண்டாமை-ஆசை இல்லாமை. விழுச்செல்வம்-சிறந்த செல்வம். ஈண்டு-இந்த உலகம். யாண்டும்-எந்த உலகத்திலும். இல்-இல்லை.

18. இயற்றல் - உண்டாக்குதல். ஈட்டல்-சேர்த்தல். வகுத்தல்-பகுத்துச் செலவு செய்ய ஒதுக்கி வைத்தல். வல்லது-வல்லவன். அரசு-அரசன்.

19. தொட்ட அனைத்து-தோண்டிய அளவுக்கு ஏற்ப. ஊறும்-நீர் சுரக்கும். கேணி-கிணறு. மாந்தர்-மக்கள். கற்ற அனைத்து-படித்த அளவுக்கு ஏற்ப. ஊறும்-வளரும்.

20. நல்லார்கண்-கற்றறிந்த நல்லவரிடம். பட்ட-ஏற்பட்ட; உண்டான. வறுமையின்- வறுமையைக் காட்டிலும். கல்லார்கண்-கல்வியறிவு இல்லாதவரிடம். திரு-செல்வம். இன்னது-துன்பந் தருவதாகும்.

21. எனைத்தானும்-எவ்வளவு சிறியதாக இருந்தாலும். அனைத்தானும்-அவ்வளவாயினும். ஆன்ற-நிறைந்த.

22. மெய்ப்பொருள்-உண்மைப் பொருள். காண்பது-ஆராய்ந்தறியவல்லது.

23. எல்லாம்-எல்லாச் செல்வங்களையும். இலர்-ஒன்றும் இல்லாதவராவர்.

24. தினை-ஒருவகைப் புல்லரிசி. துணை-அளவு. பழி நாணுவார்-பழிக்கு அஞ்சும் பண்புடையவர்.

25. இடிப்பாரை-வற்புறுத்திச் சொல்லக் கூடிய பெரிய வர்களை. ஏமரா-ஏமம் மருவாத; காவல் பொருந்தாத; காவல் இல்லாத. கெடுப்பார்-கெடுக்கும் பகைவர். இலானும் - இல்லாவிட்டாலும். கெடும்-தானே கெட்டுப் போவான்.

26. பீலி-மயில் இறகு. பெய்-பெய்த; ஏற்றிய. சாகாடு-வண்டி; சகடம். அச்சு-வண்டியின் சக்கரம் கோக்கப்படும் அடிமரம். இறும்-முறியும். பண்டம்-சரக்கு. சால-மிக: உரிச்சொல். சால மிகுத்து-மிகவும் அதிகமாக. பெயின்-ஏற்றினால்.

27. ஒக்க-ஒத்து இருக்க. கூம்பும்-ஒடுங்கும். பருவம்-காலம். சீர்த்த இடம்-செயல் புரிவதற்குச் சமயம் வாய்த்த இடம்.

28. பெருமை - பெருந்தன்மை வாய்ந்த குணம். சிறுமை-இழிவுத் தன்மையைக் காட்டும் குணம். கட்டளைக் கல்-பொன்னை உரைத்துப் பார்த்து அதன் குணத்தை மதிப்பிடும் கல். கருமம்-செயல்.

29. தேற்றம் - தெளிவு: தொழிற்பெயர். அவா இன்மை- ஆசை இல்லாமை. உடையான்கட்டே-உடையவன் கண்ணதே; உடையவன் மேலதே.

30. மேல்-மேலிடம். மேல் அல்லார் - மேன்மைக் குணம் இல்லாத சிறியவர். மேல் அல்லர்-பெரியவர் ஆகார். கீழ்-கீழிடம். கீழ் அல்லார்-கீழ்மைக் குணம் இல்லாத பெரியவர். கீழ் அல்லவர்-சிறியவர் ஆகார்.

31. ஊழி-பெருவெள்ளத்தால் உலகம் முடியும் காலம். சான்றாண்மைக்கு - சால்புடைமையாகிய கடற்கு. ஆழி எனப்படுவார்-கரை என்று சொல்லப்படுவார். பெயரார்-

நீலே மாரூர். சான்ருண்மை-கடல்; சான்ருண்மை உடையவர்-கரை: உருவகம்.

32. குடி-குடும்பம். செய்வல்-செய்வேன். ஒருவற்கு-ஒருவனுக்கு. மடி தற்று-ஆடையை இறுகக் கட்டிக்கொண்டு. மடி-ஆடை. தற்றுதல்-இறுக உடுத்துதல். முந்துறும்-முன் வந்து நிற்கும்.

33. மற்று எல்லாம்-மற்றவர் எல்லாம். தொழுது-வணங்கி.

34. இரந்தும்-பிச்சை எடுத்தும். பரந்து-எங்கும் அலேந்து திரிந்து. கெடுக-கெடுவாஞக. உலகு இயற்றியான்-உலகைப் படைத்த முதல்வன்.

35. அறை பறை அன்னர்-அறையப்படும் பறையைப் போன்றவர். கயவர்-கீழ்மக்கள். மறை-இரகசியம். உய்த்து-சுமந்து சென்று. உரைக்கால ன்-சொல்லி வருவதால். பறை-கொட்டப்படும் தோற்கருவி.

வினுக்கள்

1. 'இடும்பை இல'—யார்க்கு?
2. வள்ளுவர் காட்டும் இறைவன் எத்தகையவன்?
3. வான் சிறப்பை வரைக.
4. எந்நான்கும் இழுக்கா இயன்றது அறம்?
5. பெண்ணின் இயல்புகள் யாவை?
6. ஒருவற்கு அணி யாது?
7. இனிய உளவாக இன்ஞத கூறுதல் எதற்கு ஒப்பாகும்?
8. எது ஞாலத்தின் மாணப் பெரிது?
9. பயன் தெரிவார் இயல்பு யாது?
10. பனைத்துணையாக் கொள்வர்—யார்? எதனை?
11. எல்லார்க்கும் நன்மையைத் தருவது எது?

12. பொன்றும் துணையும் புகழ் யார்க்கு நிலைத்து நிற்கும்?
13 பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்-யார்?
14. பேரறிவாளன் திரு எதற்குச் சமமாகும்?
15. தீயது எது?
16. புறந்தூய்மை எதனல் அமையும்?
17. அகந்தூய்மை எதனல் காணப்படும்?
18. சினம் எவ்வெவற்றைக் கொல்லும்?
19. 'முற்பகற் செய்யிற் பிற்பகல் விளையும்' என்ற கருத் தமைந்த குறளை அடிமாருமல் எழுதுக.
20. வேண்டாமையின் சிறப்பு எவ்வாறு கூறப்பட் டுள்ளது?
21. எவற்றைச் செய்ய வல்லவன் அரசன் ஆவான்?
22. கீழ்வரும் உவமைகளைப் பொருளோடு பொருத்திக் காட்டுக:
    (1) 'தொட்டனைத்து ஊறும் மணற்கேணி.'
    (2) 'கனி இருப்பக் காய் கவர்ந்தற்று.'
23. கல்லார்கண் பட்ட திரு எத்தகையது?
24. நிறைந்த பெருமையைத் தருவது எது?
25. 'அறிவுடைமை' பற்றி வள்ளுவர் கூறியுள்ள வற்றைத் தொகுத்தெழுதுக.
26. பனைத் துணையாக் கொள்வர்—யார்? எதை?
27. பழிநாணுவார் எதை எவ்வாறு கொள்வர்?
28. மன்னன் எத்தகையவரைத் துணையாகக் கொள்ள வேண்டும்? அவ்வாறு கொள்ளாதபோது நிகழ்வது யாது?
29. சாகாடு அச்சிறும்—எப்பொழுது? அதனின்றும் அறிவது யாது?

30. கூம்பும் பருவத்தும் சீர்த்த இடத்தும் எவ்வாறு இருத்தல் வேண்டும்?
31. கட்டளைக் கல்லாகக் கூறப்பட்டுள்ளது எது? அதனைக்கொண்டு எவற்றை அறியலாம்?
32. 'இந்நான்கும் நன்குடையான்'—எந்நான்கு?
33. மேலல்லர்—யார்? கீழல்லவர்—யார்?
34. ஊழி பெயர்ந்தாலும் பெயரார்தவர்—யார்?
35. தெய்வம் யார்க்கு, எவ்வாறு உதவி புரிய முன் வரும்?
36. உழவர் சிறப்பு எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
37. பரந்து கெட வேண்டியவன் யார்? ஏன்?
38. கயவர் எத்தகையவர்? ஏன்?
39. அறிவின் இலக்கணம் யாது?
40. எது அறிவாகும்?

# 2. நாலடியார்

## நூலும் ஆசிரியரும்

நாலடியார்-நான்கு அடிகளை உடைய வெண்பாக்களினல் இயற்றப்பட்ட நூல். இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. இஃது அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் என்ற மூன்று பால்களையும், நாற்பது அதிகாரங்களையும் உடையது; திருக்குறளோடு ஒப்பவைத்து எண்ணப்படும் சிறப்பு வாய்ந்தது; தமிழ் நீதி நூல்களில் சிறந்தது.

இதனை இயற்றியவர் சமண முனிவர்கள் ஆவார்கள். செய்யுட்களைத் தொகுத்து வகைப்படுத்தியவர் பதுமனர் என்னும் புலவராவர். இந்நூலின் காலம் கி. பி. இரண்டாம் நூற்றுண்டு என்பர்.

## அருஞ்சொற்பொருள்

1. உழி-இடம். கோட்படார்-(கொள் + படார்)கொள்ளப் படார். வாய்த்து ஈயின்-தக்கவர்களாகக் கிடைத்து அவர் களுக்குக் கொடுக்கப்பட்டால். செறின்-சினங்கொண்டால். வவ்வார்-கவரமாட்டார். எச்சம்-தனக்குப் பிறகு மீதமுள்ள பொருள். விச்சை-கல்வி.

2. இசையும்-முடியும். வசை-பழி; குற்றம். விசையின்-விரைவுடன். உளம்-மார்பு. மா-விலங்கு. அரி-சிங்கம். கோல்-அம்பு.

3. துகடீர்-(துகள் + தீர்). துகள்-குற்றம். பகடு-எருது. கூழ்-உணவு. அகடு-நடுவு நிலைமை. சகடம்-வண்டி. கால்-சக்கரம்.

4. ஒரீஇ-விட்டு. கேண்மை-நட்பு. கெழீஇ-சேர்த்து. மெய்-உடம்பு.

5. மல்கு-நிறைந்த. திரைய-அலைகளையுடைய. கோடு-கரை. வல்லூற்றுவரில்-(வன்மை + ஊற்று (ஊறு) + உவர் + இல்.) உவர்-உப்புத் தன்மை. சேட்சென்றும்-(சேண் + சென்றும்). சேண்-நெடுந்தொலைவு. நசை-விருப்பம்.

## வினாக்கள்

1. எச்சம் என ஒருவன் தன் மக்கட்குச் செய்வன யாவை? ஏன்?
2. நரிமா உளம் கிழித்த அம்பு, அரிமா பிழைப்பெய்த கோல்— இவ்விரண்டில் சிறந்தது எது? ஏன்?
3. செல்வர் கடமை யாது?
4. யாருடைய நட்பை நீக்கவேண்டும்? யாருடைய நட்பினைக் கொள்ளுதல் வேண்டும்? ஏன்?
5. 'மல்கு திரைய' என்னும் செய்யுளில் உள்ள உவமையை விளக்கி உவமேயத்தோடு பொருத்திக் கூறுக.

# 3. பழமொழி

## நூலும் ஆசிரியரும்

பழமொழி—(பழமை + மொழி)-பழமை ஆகிய மொழி. பழங்காலந் தொடங்கி உலக வழக்கில் வழங்கி வரும் அறிவுரை கூறும் சில சொற்றொடர்களுக்குப் பழமொழி என்பது பெயர். இது பழமொழி ஒவ்வொன்றை இறுதியில் அமைத்து நீதியைக் கூறுகின்ற நானூறு வெண்பாக்களால் ஆகிய ஒரு நீதி நூல் ஆகும். இதற்குப் 'பழமொழி நானூறு' என்ற வேறு பெயரும் உண்டு. இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று.

இதனை இயற்றியவர் முன்றுறையரையனார் ஆவார். இவர் முன்றுறை என்னும் ஊர்க்கு அரசர்; சமண சமயத்தவர் என்பர். இவர் காலம் கி. பி. ஆறு அல்லது ஏழாம் நூற்றாண்டு எனக் கருதுவர்.

## அருஞ்சொற் பொருள்

1. உரை-சொல். முதுமக்கள்-முதுமைப் பருவம் உடையவர். உவப்ப-மகிழ. சோழன்: கரிகாற் சோழன். முறை-நீதி. விச்சை-வித்தை. பாகம்படும்-செம்பாகமாக அமையும்.

2. இன்னீர்-(இனிமை + நீர்)-இனிய நீர். பிறிது உழி-வேறு இடம். தேரை-தவளை. கணக்கு-நூல். முனியாது-வெறுக்காது.

3. பூந்தாழை – அழகிய தாழை. சேர்ப்ப - நெய்தல் நிலத் தலைவ. தொல்லை-முன்பு. முல்லைக்குத் தேர் ஈந்தோன் பாரி. மயிலுக்குப் போர்வை ஈந்தோன் பேகன்.

4. தொக்கக்கால் – கூடியிருந்தால். மா இரு-மிகவும் பெரிய. ஞாலம்-உலகம். மாண்பு ஒருவன்–மாட்சிமைப்பட்ட ஓர் அறிஞன். போல்கலார்-ஒப்பாகார். பாய்-பரவிய.

5. பொறி-தீப்பொறி. சாந்தம்-சந்தனம். இன்ன-இப்படிப்பட்ட. மாட்சி-பெருமை. மாண்டது - பெருமை அடைவது. எவன் ஆம்-எப்படி முடியும்?

### வினுக்கள்

1. குலவிச்சை கல்லாமல் பாகம்படும்—இப்பழமொழியை விளக்கி எழுதுக.
2. சோழன் நரை முடித்து முறை செய்த வரலாறு யாது?
3. கற்றலிற் கேட்டலே நன்று—இப் பழமொழியை விளக்கி எழுதுக.
4. கேள்விச் சிறப்பு எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
5. கேள்வி வாயிலாக அறிந்துள்ளவை எவை?
6. சான்ருேர்க்கு அணி எது? ஏன்?
7. அறிவிலார் பலர் கூடினும் யாருக்கு ஒப்பாகார்? இதற்குக் கூறப்பட்டுள்ள உவமை யாது?
8. அறிவின் மாட்சி எவ்வாறு கூறப்பட்டுள்ளது?

# 5. நீதிநெறி விளக்கம்

## நூலும் ஆசிரியரும்

நீதி வழிகளை விளக்கிக் கூறும் நூல் நீதிநெறி விளக்கம் ஆகும். இது திருக்குறளை ஒட்டி, மதுரையரசர் திருமலை நாயக்கருடைய விருப்பத்திற்கிணங்கச் சுருக்கமாகவும் தெளிவாகவும் இயற்றப்பெற்ற நூல் ஆகும். இது நூற்றிரண்டு வெண்பாக்களைக் கொண்டது. இதனை இயற்றியவர் குமர குருபரர் ஆவார்.

குமரகுருபரர் திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள திருவைகுண்டத்தில் சைவ வேளாளர் குலத்திலே பிறந்தவர்; ஐந்தாண்டளவும் ஊமையராய் இருந்து, திருச்செந்தூர் முருகன் அருளால் பேசும் ஆற்றல் பெற்றவர்; தருமபுரம் மாசிலாமணி தேசிகரிடம் ஞானவுரை பெற்றவர்; காசி சென்று, இந்துஸ்தான் மொழியைக் கற்று முகலாய மன்னரைக் கண்டு, அவர் உதவியால் சைவப் பணி புரிந்தவர்; இறுதியில் அங்கேயே வீடுபேறெய்தியவர். இவர் பெற்ருேர்

சண்முகசிகாமணிக் கவிராயர்—சிவகாமி அம்மையார் ஆவர். கந்தர் கலிவெண்பா, மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனாட்சியம்மை குறம், மதுரைக் கலம்பகம், திருவாரூர் நான் மணிமாலை, முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ், சிதம்பரச் செய்யுட் கோவை, பண்டார மும்மணிக் கோவை, காசிக் கலம்பகம், சகலகலாவல்லி மாலை முதலியன இவர் இயற்றிய நூல்கள் ஆகும். இவர் காலம் கி. பி. பதினேழாம் நூற்றாண் டாகும்.

### அருஞ்சொற் பொருள்

1. விதிர்ப்பார்-நடுங்குவார்; உதறுவார். ஆகுலம்-ஆரவாரம். நவை-குற்றம். ஈத்து-ஈந்து; கொடுத்து. நல் கூர்ந்தார்-வறியவர். இன்னலம்-(இனிமை+நலம்)-இனிய தன்மை; இனிய அழகு. பூத்தல்-உண்டாதல். பூவாமை-உண்டாகாமை.

2. கனம் - பொன். குழாய் - காதணியை உடைய பெண்ணே. உணர்ந்தவர்-தெரிந்தவர். கற்றனம்-கற்று விட்டோம். களியற்க - செருக்காதே. கல்-மலை. தகரும்-உடையும். தகரா-உடையா. கொல்-கொல்லர். உலை-உலைக்களம். கூடம்-சம்மட்டி.

3. நன்னீர்-(நன்மை+நீர்)-நல்ல நீர்; குளிர்ந்த நீர். சுடர்-விளக்கு. வளர்த்தற்று-(வளர்த்தது+அற்று) வளர்த் தது போலாகும். நயவாமை-விரும்பாமை. நலம்-இன்பம்.

4. நட்பு-நண்பர். பகை-பகைவர்கள். நட்பு, பகை: பண்பாகு பெயர்கள். ஒற்று-உளவாளி; வேவுகாரர்: தொழிலாகு பெயர். ஐ உறுதல்-ஐயம் கொள்ளல். தக்கார்-பெரியார். நெடுமொழி-(நெடுமை+மொழி) பெருமை யுடைய மொழி; அறிவுரை. கோறல்-கொல்லல்; மீறல். பிறிது-வேறு. குறி-அடையாளம்.

5. கண் நோக்கு-கண்ணின் அன்புப் பார்வை. அரும்பு-மொட்டு. ஆ(க)-ஆகவும். நகை முகம்-சிரித்த முகம். நாள் மலர்-அன்றலர்ந்த புதுப்பூ. தீம் காய்-இனிய காய். வண்மை-வள்ளல் தன்மை; ஈகை. பலம்-பழம். கனிந்த-மிகுந்த. கற்ப தரு-கற்பக மரம். இச் செய்யுள் உருவகம்.

### வினுக்கள்

1. பூத்தலிற் பூவாமை நன்று—எவை?
2. 'சிற்றுளியால் கல்லுந் தகரும் தகரா கொல்லுலைக் கூடத்தினல்' என்னும் இவ்வுவமையைப் பொருளொடு பொருத்திக் காட்டுக.
3. கல்விச் செருக்காற் பயனில்லை என்பதைக் குமரகுருபரர் எவ்வாறு விளக்கியுள்ளார்?
4. நீதிநெறி விளக்கத்தில் தற்புகழ்ச்சியின் இழிவு எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
5. தீச்சுடர் நன்னீர் சொரிந்து வளர்த்தற்று—எது?
6. கெடுவது காட்டும் குறிகள் எவை?
7. பண்புடையார் இயல்புகள் யாவை? அவை எவ்வாறு உருவகம் செய்யப்பட்டுள்ளன?
8. சலியாத கற்பக தரு—யார்? ஏன்?

## 5. ஏலாதி

### நூலும் ஆசிரியரும்

ஏலாதி-(ஏலம்+ஆதி) ஏலம், இலவங்கம், சிறுநாவற்பூ, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய ஆறு மருந்துப் பொருள்களும் உடலுக்கு வன்மை ஊட்டுவதுபோல, இந்நூலில் உள்ள ஒவ்வொரு பாடலிலும் கூறப்படும் ஆறு பொருள்களும் உள்ளத்திற்கு உரமூட்டக்கூடிய தன்மை வாய்ந்ததாகும். ஏலாதி பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று; தற்சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றும், சிறப்புப் பாயிரச் செய்யுள் ஒன்றும் உட்பட எண்பத்திரண்டு செய்யுட்களைக் கொண்டது.

இந்நூலை இயற்றியவர் கணிமேதையார் ஆவார். இவர் கடைச் சங்கப் புலவர். இவரும் சிறுபஞ்சமூலத்தை இயற்றிய காரியாசானும் ஒருசாலை மாணுக்கராவர். கணிமேதையாரின் ஆசிரியர் மாக்காயனுர் ஆவார். கணிமேதாவியார்

என்னும் பெயரும் இந்நூலாசிரியர்க்கு உண்டு. கணிக்கும் ஆற்றலில் மேதையாய் இருந்தமையின் இவர் இப்பெயர்களைப் பெற்றவராவார்.

### அருஞ்சொற் பொருள்

1. இல்-இருப்பிடம்; வீடு. ஈண்டிய-பெருகிய. ஆன் நிரை-பசுக்கூட்டம். எல்-இரவு. ஊண்-உணவு. பண்ணி-சமைத்து. ஈய்ந்தவர் – கொடுத்தவர். எண்ணி - மதித்து. ஆர்வார்-ஆர உண்பார்.

2. கடம்-கடன். காப்பு-காப்பவர்: தொழிலாகுபெயர். கைத்து–கையில் உள்ள செல்வம். மூத்தார்–கிழத்தனம் அடைந்தவர். மூப்பு இல்லார்–பெற்றோர் முதலிய பெரியவர்கள் இல்லாதவர். உடம்பட்டு உடையராய்-உள்ளம் ஒத்து அன்புடையவராய். இல்லுள்-வீட்டினுள். ஈத்து–கொடுத்து. மண்மேல்-உலகத்தில். பயின்று – அளாவி. படையராய்-படைகளையுடைய மன்னர்களாய்.

3. பெருமை-பெரிய நிலைமை. சீற்றம் - சினம். பேணுமை-விரும்பாமை. சால்பு-பெருந்தன்மை. சாரின்–சேர்ந்தால். இருமை-இம்மை மறுமை ஆகிய இரண்டிலும். பாவம்-தீவினை. சாக்காடு-சாவு. கேடு-பொருள் அழிவு. சாரும்-சேரும்.

4. ஏர்-அழகு. தடம்-பெரிய. அன்ன–போன்ற. சாயலாய்-சாயலையுடைய பெண்ணே. உணர்ந்தார்-சான்றோர். குறளை-புறங்கூறல். மறலை-அறியாமையுடைய பேதை.

5. வார் குத்து-வெள்ளம் பெருகிச் சுழியும் நீர் நிலைகள். அலைக்களம்-பிறரை வருத்தும் சிறைச்சாலை. யாக்கும்-புழுக்கும். முச்சாரிகை-(மூன்று + சாரிகை)-யானை குதிரை தேர் என்னும் மூன்றும் சுற்றியோடி வருதல். நச்சாமை–விரும்பாமை.

### வினாக்கள்

1. யார் யார்க்கு ஊண் ஈய்ந்தார் ஊண் ஆர்வார்?
2. யார் யார்க்கு ஊண் ஈத்து உண்பார் படையராய் வாழ்வார்?

3. எவை இல்லார் கீழோர்? அவரைச் சாரின் சாரும் ஆறு எவை?
4. உணர்ந்தார் எதை உரைப்பார்? மறலையின் வாயில் வருவன எவை?
5. விரும்பத்தகர்தவையும் பார்க்கத்தகாதவையும் எவை?

# 6. சிறுபஞ்சமூலம்

## நூலும் ஆசிரியரும்

சிறுபஞ்சமூலம் - (சிறுமை + பஞ்சம் + மூலம்). பஞ்சம்- ஐந்து. சிறிய ஐந்து வேர்களாலாய மருந்து. கண்டங் கத்திரிவேர், சிறுவழுதுணைவேர், சிறுமல்லிவேர், பெரு மல்லிவேர், நெருஞ்சிவேர் என்னும் ஐந்தும் சிறுபஞ்ச மூலம் எனப்படும். இவ்வைந்து வேர்களால் செய்யப்பட்ட மருந்து உடல்நோயைப் போக்கப் பயன்படுதல் போல இந் நூலின் ஒவ்வொரு செய்யுளிலும் கூறப்பட்டுள்ள ஐந்து கருத்துக்களும் மனநோயைப் போக்கி அறிவு நலம் தருவன ஆகும். மூன்று கருத்துக்களைக் கொண்ட செய்யுட்களை யுடைய நூல் திரிகடுகம் என்றும், நான்கு கருத்துக்களைக் கொண்ட செய்யுட்களையுடைய நூல் நான்மணிக்கடிகை என்றும் பெயர் பெற்றுற்போல, ஐந்து கருத்துக்களைக் கொண்ட இந்நூல் சிறுபஞ்சமூலம் எனக் காரணப் பெயர் பெற்றுள்ளது. இந்நூல் பாயிரச் செய்யுள் உட்பட நூறு செய்யுட்களைக் கொண்டது. இது பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்தது.

இந்நூலை இயற்றியவர் காரியாசான்; இவர்தம் ஆசிரியர் மாக்காயனுர் ஆவார். காரியாசானும் ஏலாதி ஆசிரியர் கணிமேதையாரும் ஒருசாலை மாணுக்கராவர். இவர் சமண மதத்தவராவர். இவர் கி. பி. எட்டாம் நூற்ருண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் என அறிஞர் கருது கின்றனர்.

## அருஞ்சொற் பொருள்

1. போற்றுவார்-ஆதரிப்பவர். கண்கெட்டார்-குருடர். கண்பட்டு-இரக்கப்பட்டு. கடைபோக-இறுதிவரை.

2. சிக்கர்-தலைநோய் உடையார். சிதடர்-குருடர். சிதலை-கறையான். சிதலை போல் வாய் உடையார்-கறையான் புற்றுப் போன்று வாயிலே புற்றுநோய் உடையவர். துக்கர்-காசநோய் உடையவர். துருநாமர்-மூலநோயுடையவர்.

3. நாண்-நாணம். நடை-ஒழுக்கம். நோன்பு-விரதம். ஊண்-உணவு. உதாரதை-உதவி. ஏண்-வலிமை. சேவகம்-வீரச்செயல். தேற்றான்-கற்றுத் தெளியாதவன். நாடின்-ஆராய்ந்தால். நகை-சிரிப்பு.

4. சிலம்பி-சிலந்தி. சினை கரு. கூற்றம் எமன். கோடு-கொம்பு. வலம்-வெற்றி. மா-மான். ஞெண்டு-நண்டு. பார்ப்பு-குஞ்சு. நன்றல்—(நன்று + அல்)· வசை-பழிமொழி.

5. களர்-உவர்நிலம். நிவந்து-உயர்ந்து விண்-ஆகாயம். தோயும்-படியும். மாண்ட-சிறந்த. மாண்டவர்-மாண்புடையவர். அரண்-பாதுகாப்பு. விதி-முறை.

## வினாக்கள்

1. கடைநாள்வரை மகிழ்ச்சியுடன் வாழ்பவர் யாவர்?
2. எவற்றைத் தீர்த்தார் ஒரு நோயும் இன்றி வாழ்வார்?
3. நகைப்புக்கிடமானவை எவை?
4. எவ்வெப் பொருள்களுக்கு எவ்வெப் பொருள்கள் கூற்றமாகும்?
5. வேந்தனுகக் கருதத் தக்கவன் யார்?
6. ஐந்தரண்கள் எவை?

# III. கதை

## 1. கம்பராமாயணம்

### நூலும் ஆசிரியரும்

கம்பர் + ராமாயணம் — கம்பராமாயணம். ராம + அயநம் — ராமாயணம். அயநம் — உணர்த்துவது. இராமனது வரலாற்றைக் கூறும் நூல் இராமாயணம் ஆகும். கம்பர் இயற்றிய இராமாயணம் கம்பராமாயணம் ஆகும். கம்பராமாயணம் ஆறு காண்டங்களை உடையது. கம்பர் இந்நூலுக்கு இட்ட பெயர், 'இராமாவதாரம்' என்பதாகும். இராமாயணத்தை முதன் முதல் வான்மீகி முனிவர் வடமொழியில் இயற்றினர். அதனை முதல் நூலாகக் கொண்டு கம்பர் தமிழில் இராமாயணம் இயற்றினர். ஆகவே, கம்பராமாயணம் வழி நூல் ஆகும்.

கம்பர் தேரழுந்தூரில் உவச்சர் குலத்தில் ஆதித்தன் என்பாருக்கு மகனுகத் தோன்றியவராவார். இவரை ஆதரித்தவர் திருவெண்ணெய் நல்லூர்ச் சடையப்பவள்ளல் ஆவார். கம்பருக்குக் கம்பநாடர், கம்பநாட்டாழ்வார், கம்பநாடுடைய வள்ளல் என்னும் பெயர்களும் உண்டு. இவர் இயற்றிய நூல்கள் சடகோபர் அந்தாதி, சரசுவதி அந்தாதி, ஏரெழுபது, திருக்கை வழக்கம் முதலியனவாகும். இவர் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றுண்டு என்பர்.

பாடப் பகுதி அயோத்தியா காண்டத்தில் நான்காவதாக உள்ள நகர் நீங்கு படலத்தினின்றும் எடுக்கப் பெற்றதாகும்.

## கதைச் சுருக்கம்

இராமன் கைகேயி சொல்லால் வனம் புக நேரிட்டது. அது குறித்துத் தசரதன் மிகவும் வருந்தியிருந்தான். அப்பொழுது கோசலை அங்குச் சென்று கணவன் நிலை கண்டு புலம்பினள். அச்குரல் கேட்டு வசிட்ட முனிவர் அந்தப்புரஞ் சென்று கைகேயியைக் கண்டு செய்தி அறிந்து தசரதனைத் தேற்றினர். தேறிய தசரதனும் வசிட்ட முனிவரும் கைகேயியிடம் நன்மொழி கூறி, இராமனுக்கு அரசு தர வேண்டினர். கைகேயி இணங்காததைக் கண்ட தசரதன், 'நீ என் தாரமல்லை; பரதன் என் மகனல்லன்' என்று கூறிக் கோசலை வந்திருப்பதை அறிந்து மயக்கமுற்றான். கோசலை தசரதனைத் தேற்றினள். தெளிந்த தசரதன் தான் முன்பு வேட்டைக்குச் சென்றபோது முனிகுமாரனொருவனைக் கொன்றதாகவும், அதனால் அவன் தந்தை தனக்கு ஒரு சாபம் இட்டுள்ளதாகவும், அதனாலேயே இவ்வாறு நேர்ந்துள்ளதாகவும் கூறினன் மேலும், 'என் உயிர் போவது திண்ணம்' என்றான். அது கேட்டுக் கோசலை திகைத்தாள். வசிட்டன் அவையோர்க்குச் செய்தி தெரிவித்தார். முடிசூட்டுவிழா தடைபட்டதறிந்த எல்லாரும் வருந்தினர்.

## அருஞ்சொற் பொருள்

1. வலயம்-தோள்வளை. கான் - காடு. தவிரான்-நீங்கான். அகலாது ஒழியாது - நீங்காது இராது; நீங்கியே தீரும். உற்றது-நேர்ந்தது. அவள்-கோசலை. அறைவான்-சொல்லுவான்.

2. வெய்ய-கொடிய. வேட்கை-ஆசை. ஐய-வியக்கத் தக்க. கரி-யானை. அரி-சிங்கம். துருவி-தேடி. செய்ய-அழகிய. ஆர் சிலை-அரிய வில். கணை-அம்பு.

3. நயனம்-கண். திரு-அழகு. புனல்-நீர். அகல்வான்-அகலுவதற்கு. ஆறு-வழி; விதம். பொரு-போர் செய்யவல்ல, புவி-தரை. புரள்வான்-உருள்வான்.

4. புக்கு-சென்று. போதகம்-யானைக்கன்று. கை-தும் பிக்கை. வெருவா-பயந்து. அயர்தல்-தளர்தல்.

5. கடம்-கமண்டலம். காணு-கண்டு. மெய்-உடல். தனு-வில். வீழா-விழுந்து. அந்தோ-ஐயோ. ஐயன்-சிறுவன்.

6. பருகும்-குடிக்கும். படர்ந்தேன்-வந்தேன். பழுது-குற்றம். குன்று-மலை. புயம்-தோள். இபம்-யானை. ஊழ்-விதி.

7. உயங்கும்-வருந்தும். தண் நீர்-குளிர்ந்த நீர். விளம்பு-சொல். எண் நீர்மை-எண்ணத்தக்க தன்மை. விண்ணோர்-தேவர். ஏகினன் சென்றான்.

8. மாதவர்-மிக்க தவத்தையுடைய முனிவர். மகவு-பிள்ளை. அம்-அழகு. அணுகாது-சேராது. நொந்தேம்-வருந்தினோம். சந்தம்-சந்தனம். கமழும்-மணக்கும்.

9. மை ஆர்-கருமை பொருந்திய. வதிந்தேன்-வாழ்ந்தேன். பொய்யா வாய்மைப் புதல்வன்-பொய் பேசாது மெய்யே பேசுகின்ற மகன். மொண்டிடும்-முகக்கும். ஓதை-சத்தம். அலால்-அல்லாமல்.

10. வீட்டுண்டு-விட்ட அம்பு பட்டு. வேழம்-யானை. ஓட்டந்து-ஓட்டந்தந்து; ஓடி. எதிரா-எதிர்ந்து. உரையா-உரைத்து. வானோர்-தேவர். ஈட்டம்-கூட்டம்.

11. கறுத்து-கோபித்து. மறு-பிழை. என்னு-என்று. தாள்-அடி. சென்னி-தலை. புனைந்தேன்-அணிந்தேன்.

12. போழ்ந்தாய்-பிளந்தாய். பொன் நாடு-சொர்க்க உலகம். தரியேம்-பொறோம்.

13. அயரும்-வருந்தும். அயரீர்-வருந்தாதீர். இடர்-துன்பம். ஒழிமின்-நீங்குமின். வன்திண்சிலை-மிகவும் வலிய வில். கேண்மோ-கேட்பாயாக.

14. காதலியா-விரும்பி. உண்ணு-உண்டு. விண்ணின் தலை சேருதும்-தேவலோகத்திற் செல்வோம். பண்ணும் பரிமா-அலங்கரிக்கப்பட்ட குதிரை. விடலை-மகன். படர் வான்-பரந்த தேவலோகம். என்னு-என்று.

15. தாவாது-கெடாது. சரணம்-அடைக்கலம். கருதேம்-நினேயேம்.

16 சிந்தை-மனம். இவண்-இவ்விடம்; நகரம். வந்தனென்-வந்தேன். சொற்றமையின்-சொன்னதனுல். அண்ணல்-இராமன். ஏகுதல்-செல்லுதல். வீகுதல்-உயிர்போதல். இறையும்-சிறிதும்.

## வினுக்கள்

1. தசரதன் கோசலேக்குக் கூறிய சாப வரலாற்றைத் தொகுத்தெழுதுக.
2. தசரதன் எங்கு மறைந்து நின்ருன்? ஏன்?
3. தசரதன் விட்ட அம்பால் நிகழ்ந்தது யாது?
4. தசரதன் எவ்வாறு வருந்திஞன்?
5. 'நீ யாவன்?' என்ற தசரதனுக்கு மைந்தன் கூறிய விடை யாது?
6. நீர் கொண்டு சென்ற தசரதனிடம் முனிவர் கூறியது யாது?
7. தசரதன் முனிவரிடம் கூறிய தென்ன?
8. மகனே இழந்த பெற்ருேர் பட்ட துன்பம் எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
9. பெற்ருேர் துயர் கண்ட தசரதன் அவர்களே எவ்வாறு தேற்றிஞன்?
10. முனிவர் தசரதனுக்குக் கொடுத்த சாபத்தை வரைக.
11. 'இறையும் தவறு.'—எவை?
12. தசரதன் எவ்வாறு நகரத்தை அடைந்தான்?
13. இடஞ்சுட்டி விளக்குக:
    (1) 'உலகோர் என்னெனன் றுரையார்.'
    (2) 'இன்றும் புதல்வன்.'
    (3) 'சந்தங் கமழுந் தோளாய் தழுவிக்கொள வா.'
    (4) 'உம் புதல்வன் விண்மீ தடைவான்.'
    (5) 'உருகுந் துயரந் தவிர் நீ.'
    (6) 'கரியின் குரலே அன்று மக்கட் குரல்.'

# 2. பெரிய புராணம்

## நூலும் ஆசிரியரும்

செயற்கரிய செயல்களைச் செய்து பெருமை பெற்ற சிவ னடியார்களின் வரலாறுகளைக் கூறுவதால் இந்நூல் பெரிய புராணம் எனப் பெயர் பெற்றது. புராணம்-பழைய வரலாறு. பெரிய புராணம்-(பெரியர்+புராணம்). இந் நூலுக்கு ஆசிரியர் இட்ட பெயர், 'திருத்தொண்டர் புராணம்' என்பதாகும். இந்நூலில் அறுபத்துமூன்று நாயன் மார் வரலாறுகள், ஏறத்தாழ நாலாயிரம் செய்யுட்களினால் விரித்துக் கூறப்பட்டுள்ளன. சைவத் திருமுறைகளுள் இது பன்னிரண்டாம் திருமுறையாகும்.

பெரிய புராணத்தைப் பாடிய ஆசிரியர் சேக்கிழார். இவருடைய இயற்பெயர் அருண்மொழித்தேவர் என்ப தாகும். இவர் தொண்டை நாட்டிலுள்ள குன்றத்தூரில் சைவ வேளாளர் மரபில் கி. பி. 12ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தார்; சோழப் பேரரசனாக விளங்கிய இரண்டாம் குலோத்துங்கனுக்கு முதல் அமைச்சராக இருந்தார். அம் மன்னன் இவருக்கு, 'உத்தம சோழப் பல்லவராயன்' என்னும் பட்டப் பெயர் சூட்டி மகிழ்ந்தான். மேலும், மன்னன் விரும்பி வேண்டிக்கொண்டதற்கேற்பச் சேக்கிழார் பெரிய புராணத்தை இனிய எளிய செய்யுள் நடையில் இயற்றினார். அப்பொழுது அரசன், 'தொண்டர்சீர் பரவுவார்' என்னும் பட்டப் பெயரை வழங்கிச் சிறப்பித்தான்.

பாடப் பகுதி தில்லைவாழந்தணர் சருக்கத்தில் ஐந்தாவ தாக உள்ள மெய்ப்பொருள் நாயனார் புராணம் ஆகும்.

## கதைச் சுருக்கம்

சேதி நாட்டிலே திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு மலையமான் என்னும் அரசவமிசத்தைச் சேர்ந்த மெய்ப்பொருளார் என்பவர் நாடாண்டு வந்தார். அவருக்கு முத்தநாதன் என்னும் பகைவனொருவன் இருந்தான். அவன்

அவன் அவருடன் பலமுறை போரிட்டுத் தோல்வி அடைந் தான்; அவரை வஞ்சனையால் வெல்லக் கருதினன்; பொய்த் தவவேடம் பூண்டு மெய்ப்பொருளார் அரண்மனையுட் சென்றான்; காவலன் தத்தன் தடுத்தும் கேளாமல் அரசர் தம் பள்ளியறையுட் புகுந்தான்; அவனைக் கண்ட மெய்ப்பொரு ளார், 'அடியவர் வந்த காரணம் யாது?' என வினவினர். 'ஆகமத்தை உரைக்க வந்தேன்' என்றான் முத்தநாதன். மெய்ப்பொருளார் முத்தநாதனை ஆசனத்தமர்த்தித் தாம் தரையிலமர்ந்து, 'கூறுக' என்றார். முத்தநாதன் புத்தகப் பையை அவிழ்ப்பவனைப்போல நடித்து, மெய்ப்பொருளார் வணங்கியபோது வாளால் குத்திவிட்டான். அந்தச் சமயம் காவலன் தத்தன் உட்புகுந்தான். அவனைக் கண்ட அரசர், 'இவர் நம்மவர், பாதுகாப்போடு கொண்டு விட்டு வா' என்றார். தத்தன் அவ்வாறே செய்தான். அவன் வந்து நல்ல செய்தி கூறும்வரை உயிர் தாங்கி இருந்த மெய்ப்பொருளார், அவன் வந்ததும், அவனைப் பாராட்டினர்; அனைவரையும் அழைத்துத் திருநீற்றன்பைப் பாதுகாத்து வருமாறு வேண் டிய பின், கூத்தப்பிரான் கழலிணைகளைச் சிந்தித்தார்.

## அருஞ்சொற் பொருள்

1. மன்னி - நிலைபெற்று. மாதொருபாகர் - சிவன். மலாடு-மலையமான் ஆண்ட நாடு; மரூஉ. காதல்-ஆசை.

2. வரை-மலை. மாற்றலர்-பகைவர். உரை திறம் பாத-சொன்ன சொல் தவருத. திரை-அலை. நீர்-கங்கை. புல்லி-தழுவி; காத்து.

3. மங்கை-உமை. எங்கணும்-எவ்விடத்திலும். சிறப்பு-திருவிழா. போற்றுதல்-காத்தல். புரிந்து-செய்து. சார்பு-பற்றுக்கோடு.

4. மாடு - பொன். செல்வம்-பொருள்; நிதி. மன்று-அவை. அணைந்தபோது-சேர்ந்தபொழுது.

5. இகல்-பகை. அமர்-போர். ஓடை-முகபடாம். நெற்றிப்பட்டம். பரி-குதிரை. பரிபவப்பட்டு-அவமானம் அடைந்து.

6. சீலம்-ஒழுக்கம். அற்றம்-தக்க சமயம். செப்ப அரு நிலைமை-சொல்லவும் தகாத நிலைமை; கொலைத் தொழில்.

7. வேணி-சடை. கரந்த-மறைத்த. கவளி-சுவடித் தூக்கு. கறுப்பு-கறுப்பாகிய வஞ்ச எண்ணம்; கோபம்.

8. ஏற நின்று-எட்டி விலகி நின்றுகொண்டு. உடைய வர்-சிவபக்தர். தடை-வாயில். இடை-சமயம்.

9. அவற்கு-அரசனுக்கு. புக்கு-புகுந்து. புரவலன்-அரசன். மாடு-பக்கம். மன்றல்-மணம். குழல்-கூந்தல். மாதேவி-அரசன் பட்டத்திற்குரிய பெருந்தேவி.

10. கதுமென-விரைவாக. குவித்த-கூப்பிய. அண்டர் நாயகன்-சிவன். கொள்கை-முறை.

11. மங்கலம்-நன்மை. மண்மேல்-உலகில்.

12. மாறு இல்-எதிரும் இணையும் இல்லாத. நாறு-மணம் வீசும்.

13. புரிவு-அன்பு. தவிசு-வீற்றிருக்கும் இருக்கை.

14. கைத்தலம்-கையிடம். பத்திரம்-வாள். நினைந்த அப் பரிசு-எண்ணிய எண்ணம்; கொலை.

15. மறைத்தவன் - தவவேடத்திற்குள்ளே தன்னை மறைத்துக்கொண்டவன். இறைப்பொழுது-சிறிது பொழுது. குருதி-இரத்தம். சோர-வடிய. நமர்-நம்மவர்.

16. தாதன்-அடியவன். எம்பிரான்-சிவன். இடை விலக்கா வண்ணம்-வழி மறித்துத் துன்பம் செய்யாதபடி.

17. புடை-பக்கம். ஆணை-கட்டளை.

18. செவ்விய நெறி-சிறந்த வழி. வடி-வடித்த; கூரிய. ஆள் உறு-ஆட்கள் யாரும் அணுக முடியாத. வெவ்வினை-பாவம். போந்தான்-வந்தான்,

19. செற்றவர் கோபித்தவர். ஆவி-உயிர். கொற்றவன்-அரசன்.

20. ஐயன்-தத்தன். கருணை கூர்ந்தார்-அருள் செய்தார்.

21. விரவிய-உள்ளத்தில் நிறைந்த. உய்ப்பீர்-செலுத்துவீர். புரவலர்-அரசர். பூங்கழல்-பொலிவுள்ள திருவடிகள்.

### வினாக்கள்

1. மெய்ப்பொருளார் அரசாண்ட தன்மையை விளக்குக.
2. மெய்ப்பொருளார் எதனையே சார்பாகக் கொண்டிருந்தார்?
3. முத்தநாதன் செய்த சூழ்ச்சி யாது?
4. முத்தநாதன் கொண்ட சிவனடியார் வேடத்தை வரைக.
5. தன் ஆகமத்தைப்பற்றி முத்தநாதன் யாது கூறினன்?
6. முத்தநாதன் பேச்சைக் கேட்டு மெய்ப்பொருளார் உரைத்த தென்ன?
7. 'தான் முன் நினைந்த அப் பரிசே செய்ய'—நினைந்த பரிசு என்ன? செய்தவன் யார்? எப்பொழுது செய்தான்?
8. தத்தனிடம் மெய்ப்பொருளார் என்ன வேண்டினர்?
9. கீழ்வரும் உவமையை விளக்கிப் பொருளொடு பொருத்திக் காட்டுக: 'மை பொதி விளக்கே என்ன'
10. இடஞ்சுட்டி விளக்குக:
    (1) 'இடைதெரிந்தருள வேண்டும்.'
    (2) 'உங்கள் நாயகனர் முன்னம் உரைத்த ஆகமநூல்.'
    (3) 'இன்று எனக்கு ஐயன் செய்தது யார் செய்ய வல்லார்.'
    (4) 'இத்தவன் போசப் பெற்ற திறைவன தாணை.'

# 3. திருவிளையாடற் புராணம்

## நூலும் ஆசிரியரும்

திருவிளையாடற் புராணம்—மதுரையில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுள், தம் அடியவர் பொருட்டுச் செய்தருளிய அறுபத்துநான்கு திருவிளையாடல்களைப்பற்றி உணர்த்தும் புராணமாகும். புராணம்-பழைய வரலாறு.

இது மதுரைக் காண்டம், கூடற் காண்டம், ஆலவாய்க் காண்டம் என்னும் மூன்று பெரும் பிரிவுகளையுடையது. காண்டத்தின் உட்பிரிவுகளுக்குப் படலம் என்பது பெயர். இது வடமொழியில் உள்ள 'ஆலாசிய மகாத்மியம்' என்னும் நூலைத் தழுவி இயற்றப்பட்டமையினல் வழிநூல் ஆகும். பிற்கால இலக்கியங்களில் இந்நூல் தலைசிறந்ததாகும்.

இப் பாடப் பகுதி கூடற் காண்டத்தில் உள்ள விறகு விற்ற படலம் ஆகும்.

இந் நூலை இயற்றியவர் பரஞ்சோதி முனிவர் ஆவார். இவர் சோழநாட்டில் உள்ள திருமறைக்காடு என்னும் வேதாரணியத்தில் பிறந்தவர். இவர் தந்தையார் மீனட்சி சுந்தர தேசிகர் ஆவார். இவர் வேளாள மரபினர்; சைவ மதத்தினர். இவர் இயற்றிய வேறு நூல்கள்: திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா, மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி, வேதாரணிய புராணம். இவர் காலம் கி. பி. பதினறும் நூற்றாண்டு ஆகும்.

## கதைச் சுருக்கம்

பாணபத்திரன் என்பவன் இசைப்புலவன். அவன் சிவபெருமானிடம் பக்தி கொண்டவன். அவனுக்காகச் சிவபெருமான் விறகாளாகச் சென்று, அவன் பகைவன் ஆகிய ஏமநாதன் என்னும் வடநாட்டு இசைப்புலவனை வென்று,

அவனை மதுரையை விட்டு ஓட்டினார். இறைவன் புரிந்த இத் திருவிளையாடலைச் சொல்வது இப்பகுதியாகும்.

### அருஞ்சொற் பொருள்

1. மன்றல்-மணம். அம்-அழகு. தெரியல்-மாலை. ஒச்சி-செலுத்தி. பொன்றலம்-(பொன் + தலம்). காவலான்-சுவர்க்கத்தைக் காக்கின்ற இந்திரன். பொலியும்-விளங்கும். விறல்-வெற்றி. யாழ்-வீணை போன்ற ஓர் இசைக் கருவி. பாணன்-பாடுவோன். வடபுலம்-வடநாடு. போந்து-வந்து. வென்றி-வெற்றி. விருது-வெற்றிச் சின்னம். விஞ்சை-கலை. செங்கோல்-(செம்மை + கோல்)-அரசாணை.

2. பூழியர்-பாண்டியர். கோயில்-அரண்மனை. வேத்தவையம்-(வேந்து + அவை + அம்)-அரச அவை. சூழி-முகபடாம்; நெற்றிப் பட்டம். மால்-பெரிய. ஏழிசை-(ஏழ் + இசை) குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழு சுரங்கள். இதனைச் ச, ரி, க, ம, ப, த, நி என இக் காலத்துக் கூறுவர். மழலை-எழுத்து விளங்காத சொல்; திருந்தா மொழி. தழீஇ-தழுவிக்கொண்டு. சுருதி-பண். அஞ்செவி-(அகம் + செவி)-காதுகளின் உள்ளிடம்.

3. மீனவன்-மீனக் கொடியை உடைய பாண்டியன். வரிசை-சிறப்பு. செருக்கு-தருக்கு; கருவம். மானம்-பெருமை. தானம்-இசை பிறக்கும் இடம். கோன்-அரசன். உழையர்-பக்கத்தவர்; ஏவலாளர். கொணர்திர்-அழைத்து வாருங்கள்.

4. உவரி-கடல்: காரணப் பெயர். கௌரியன்-பாண்டியன். பாணி-தாளம். கழல்-திருவடி: ஆகுபெயர்.

5. தென்னவர்-பாண்டியர். வலன்-வலிமை. கூடல்-மதுரை. முன்னவன்-முதல்வன்; இறைவன். விருது-பட்டம். வீறு-பெருமை; செருக்கு. போகென-(போக + என).

6. மை-கருமை. அணி-அழகு. மிடறு-கழுத்து. வந்தித்து-வணங்கி. புக்கு-புகுந்து. மெய்யன்-உண்மையானவன்.

போற்றி-துதித்து. வேண்டுகொண்டு-வேண்டுதலைச் செய்து கொண்டு. தோய்ந்த-படிந்த. இப்பால்-இதன் பிறகு.

7. இரந்தவன்-வேண்டிக்கொண்டவனாகிய பாணபத்திரன். இசைப்பகை-இசைக்குப் பகைவனாகிய ஏமநாதன்; நான்காம் வேற்றுமைத் தொகை. வருத்தன்-துன்பம் உடையவன். விருத்தன்-வயது முதிர்ந்தவன்; கிழவன். விமானம்-இந்திர விமானம். திருத்தனார்-குற்றமற்றவர்; தூய்மையானவர். இச்சை-விருப்பம். விண்ணிழி-(விண் + இழி).

8. சிதர்-கிழிந்த ஆடை. அசைத்து-உடுத்தி. அவிர்சடை-விளங்குகின்ற சடை. வெண்மதி-(வெண்மை + மதி)-வெண்மையாகிய நிலவு. மழுக்கு-மழுங்கிய. கூனல்-வளைவு. குயம்-அரிவாள். ஒழுக்கு-சிந்தும். இழுக்கு-இழிந்த. மறை-வேதம். தாள்-திருவடி.

9. தறித்த-முறிக்கப் பெற்ற; பிளந்த. இந்தனம்-விறகு. பங்கி-தலை மயிர். பறிந்து-உதிர்ந்து. பரிந்து-அன்பு கொண்டு. மறிந்த-அலைகள் மடங்கி மடங்கி வீசுகின்ற. பங்கு-இடப் பக்கம். மங்கை-உமையம்மை. எறிந்த-வெட்டிய; பிளந்த.

10. கொள்ளுநர்க்கு-வாங்குபவர்க்கு. அருவிலை-வாங்க முடியாத விலை. பகர்ந்து-சொல்லி. மிடைந்த-செறிந்த; நெருங்கிய. கவலை-பிரிவடையும் தெருக்கள்; இரு தெருக்கள் கூடுமிடம். முடுக்கர்-குறுந் தெருக்கள்; சந்துகள். மால்-திருமால். கடைத்தலை-தலைவாயில்.

11. எடுத்த-தலையில் சுமந்து வந்த. ஊன்றி-நாட்டி. அடுத்தவன்-மதுரைக்கு வந்து சேர்ந்தவனாகிய ஏமநாதன். புறத் திண்ணை-வெளித் திண்ணை. தொடுத்த-தொடர்ச்சியாக வருகின்ற. எழீஇ-எழுப்பி. மடுத்து-கேட்டு. இசைவல்லான்-ஏமநாதன்.

12. அறை-ஒலிக்கின்ற. கொன்றையான்-கொன்றை மாலையை அணிந்த சிவன். பண்டரு-(பண் + தரு)-இசை உண்டாக்குகின்ற. விபஞ்சி-ஒருவகை யாழ். முண்டக மல

ரோன்-தாமரை மலரில் வீற்றிருப்பவனுகிய பிரமன். மாயோன்-திருமால். புரந்தரன்-இந்திரன். அண்டர்-தேவர். குற்றேவல்-(குறுமை+ஏவல்). அம்மான்-இறைவன். வண்டறை-(வண்டு+அறை.)

13. கிழவன்-உரியவன். நனி-மிகவும். வேட்டு-விரும்பி. மூத்தாய்-முதியவன் ஆயினை. ஆகாய்-ஏற்றவன் ஆக மாட்டாய். கிழமைக்கு-தகுதிக்கு. வினைஞன்-தொழிலன்.

14. வெவ்விறகு (வெம்மை+விறகு). ஓம்புகேன்-காப்பாற்றுவேன். நைவளம்-ஒருவகைப் பண். மள்ளா-வீரா. ஒருகால்-ஒருமுறை.

15. பை-படம். நாகம்-பாம்பு. பொறி-புள்ளி. மஞ்ஞை-மயில். நால்வாய்-தொங்குகின்ற வாய். மத்தமான்-மத மயக்கத்தை உடைய யானை. அரிமான்-சிங்கம். புல்வாய்-மான். வல்லியம்-புலி. மருட்கை-மயக்கம். மாறு-பகைமை. தலைத்தலை-இடங்கள் தோறும். மா-விலங்கு. புள்-பறவை.

16. கண் நிறை நுதலோன்-கண் நிறைந்த நெற்றியை உடைய சிவன். சாம கண்டம்-சாம வேதம் பாடும் கழுத்து. முல்லைப் பண்-சாதாரிப் பண். சர அசர உயிர்-இயங்குவனவும் நிற்பனவும் ஆகிய உயிர். பார்-உலகம். உண்ணிறை-(உள்+நிறை). சராசரம்-(சர+அசரம்).

17. இழுக்கிவிட்ட-நீக்கப் பெற்ற. வழுக்கில்-(வழுக்கு+இல்)-குற்றம் இல்லாத. எற்றோ-எத்தகைய சிறப்புடையதோ. மதியா-மதித்து; எண்ணி. அழுக்கம்-வருத்தம்; அச்சம். பண்டர்-மாணுக்கர்: பாடல் கற்றவர்; வேலை செய்வோர். குழு-கூட்டம். குலை குலைந்திட-நடுநடுங்கி ஓட.

18. ஆடல்-வெற்றி. ஏறு-காளை. அழகர்- சோமசுந்தரர். பாண் செய்து-பாட்டு இசைத்து. பத்திரம்-காவல். ஏற்றழகர்-(ஏறு+அழகர்). செய்தும்-செய்வோம்.

19. கண் மலர்ந்து-விழித்து. உள்-மனம். ஊக்க-செலுத்த. வெங்கதிரோன்-வெம்மையான கதிர்களையுடைய ஞாயிறு. விசும்பு-வானம். நான்மறை-(நான்கு+மறை)-நான்கு வேதங்கள்.

## வினாக்கள்

1. ஏமநாதன் என்பவன் யாவன்? அவன் பாண்டியனை எங்ஙனம் மகிழ்வித்தனன்?
2. ஏமநாதன் செருக்கடையக் காரண மென்ன? அச் செருக்கை அடக்கப் பாண்டியன் யாது செய்தனன்?
3. பாணபத்திரன் இறைவனிடம் முறையிட்டது யாது?
4. சிவன் விறகாளாய் உருக்கொண்ட தன்மையை விளக்கி எழுதுக.
5. விறகாளாகி வந்த சிவன் ஏமநாதனை நாட்டை விட்டு ஓட்டிய நிகழ்ச்சியை விளக்கி எழுதுக.
6. 'நீ யாரை?' என்ற ஏமநாதனுக்கு இறைவன் கூறிய விடை யாது?
7. இறைவன் பாடிய இசையின் சிறப்பினை விளக்குக.
8. சிவன் பாணபத்திரன் கனவில் தோன்றிக் கூறியது யாது?
9. இடஞ்சுட்டி விளக்கம் தருக:
   (1) 'அன்னவன் விருதுவாங்கி அவனை வீறழிப்பன்.'
   (2) 'பண்டரு விபஞ்சி பாணபத்திரன் அடிமை.'
   (3) 'இனியிசைக் கிழமைக்காகாய்.'
   (4) 'அஞ்செவி வழியப் பெய்தான்.'
   (5) 'இன்றுன் அருள்துணை செய்தல் வேண்டும்.'
   (6) 'பத்திரற் கொணர்திர்.'
10. உவரி வென்றோன், மையணி மிடற்றினன், கண்ணிறை நுதலோன்—இத் தொடர்களில் அமைந்த வரலாறுகளை எழுதுக.
11. 'பாடுதி கொல்லோ?' என்ற பாண்டியனுக்குப் பாணபத்திரன் கூறிய விடை என்ன?
12. பூழியர் கோமான், கொன்றையான், முண்டக மலரோன், பங்குறை மங்கை—இவர்கள் யார்?
13. குறிப்பு வரைக: (1) திருவிளையாடற் புராணம்; (2) பரஞ்சோதி முனிவர்.

# 4. சீறாப் புராணம்

## நூலும் ஆசிரியரும்

நூல், ஆசிரியர் பற்றிய குறிப்புக்களை வாழ்த்துப் பகுதியிற் காண்க.

பாடப் பகுதி ஹிஜ்றத்துக் காண்டத்தில் பதினைந்தாவதாக உள்ள பாத்திமா திருமணப் படலத்தினின்றும் எடுக்கப் பெற்றதாகும்.

### கதைச் சுருக்கம்

முகம்மது நபியின் நான்கு பெண் மக்களிலும் பாத்திமா என்பவள் பல்லாற்றானும் சிறப்பு மிக்கவள். முகம்மது, ஹஸரத் அலி என்பவரைப் பாத்திமாவின் கணவராகத் தேர்ந்தெடுத்தார். பாத்திமா-ஹஸரத் அலி ஆகிய இருவருக்கும் மதீனு நகரில் ஆடம்பரமின்றித் திருமணம் இனிது நடந்தேறியது. மணமக்கள் இருவரும் மணவறையில் இன்புற்றிருந்தனர். மறுநாட் காலை அவர்கள் தங்கியிருந்த வீட்டு வாயிலில் வறிய துறவியொருவன் நின்று கூவினான். உடனே பாத்திமா எழுந்து வந்து, அவ்வறியவனைப் பார்த்து, 'வந்த காரணம் என்ன?' என வினவினாள். வறியவன், 'மண வீடு இஃதென அறிந்து வந்தேன். பசி போக்க உணவும், குளிர் போக்க ஆடையும் கொடுத்துதவுக' என்றான். பாத்திமா வறியவனுக்கு அறுசுவை யுணவளித்துப் புத்தாடை ஒன்றும் ஈந்தாள். உண்டு உடுத்து மகிழ்ந்து வாழ்த்தி வறியவன் சென்றான். சென்ற பிறகு முகம்மது முதலானோர் அங்கு வந்தனர். முகம்மது தம் மகள் பாத்திமா பழந் துணியோடிருப்பதைக் கண்டு, 'காரண மென்ன?' வென்று கேட்டார். 'வறியவனுக்குக் கொடுத்துவிட்டேன்' என்றாள் பாத்திமா. 'வறியவனுக்குப் பழையதை ஈந்து, புதியதை நீ அணிதல் வேண்டு'மென்றார் முகம்மது. 'நல்லனவற்றை அல்லாவுக்காக ஈந்துவிட வேண்டும் எனப் பழமறை கூறியுள்ளமையால் வழங்கிவிட்டேன்' என்றாள் பாத்திமா. மகளின் பதில் கேட்டு முகம்மது பெருமகிழ்வுற்றார். மணமக்கள் இருவரையும் தம்மில்லத்திற்கு அழைத்துச் சென்று நல்வாழ்த்து நவின்றார்.

## அருஞ்சொற் பொருள்

1. படி-நிலம். வாயில்-வாசல்.

2. மிடி-வறுமை. பீறல்-கிழிசல். கூயினுன்-கூவினுன்.

3. கோதை: பாத்திமா. பக்கீறுமுகம்மதியத் துறவி. மவுலுவீர்-சொல்லுவீர்.

4. கடி மனே-மண வீடு. புடவை-ஆடை.

5. குப்பாயம்-சட்டை.

6. போசனம்-உணவு. துகில்-ஆடை. தோம் அறும்-குற்றமற்ற.

7. மகவு: பாத்திமா.

8. சஞ்சலம்-வருத்தம்; கவலே. இந்து-நிலாப்பிறை. நுதல்-நெற்றி. மந்தரம்-மலே.

9. இரவலர்-யாசகர். வனேதல்-உடுத்துதல்.

10. அல்லா-ஆண்டவன். விழைவு-விருப்பம். மறை-வேதம்.

11. பகர-சொல்ல. கோது அற-குற்றம.

### விஞக்கள்

1. மணவாயிலில் கூவிய வறியவனின் நிலேயை வரைக.
2. 'என் வாயிலின் வந்தது என்?' என்ற பாத்திமாவுக்கு வறியவன் கூறிய மறுமொழியை வரைக.
3. வறியவன் வேண்டுகோளேப் பாத்திமா எவ்வாறு நிறைவேற்றினுள்?
4. பக்கீறு எவ்வாறு சென்ருன்?
5. முகம்மது பாத்திமாவிடம் கேட்டதென்ன?
6. முகம்மது விஞவிற்குப் பாத்திமா கூறிய விடை யாது?
7. பாத்திமாவை மறுத்து முகம்மது நபி கூறியதை வரைக.
8. பழமறை பகர்ந்தது என்ன?
9. 'பூத்த செந்தாமரைக் காடு போன்ற'—எவை?
10. இடஞ் சுட்டி விளக்குக: 'பழங்குப்பாயத்தை அணிவது ஏன்?'

# 5. தேம்பாவணி

## நூலும் ஆசிரியரும்

இந்நூல், ஆசிரியர் பற்றிய குறிப்புக்களை வாழ்த்துப் பகுதியிற் காண்க.

இப் பாடப் பகுதி தேம்பாவணியின் இரண்டாங் காண்டத்தில், ஐந்தாவது படலமாக உள்ள காசை சேர் படலத்தினின்றும் எடுக்கப் பெற்றதாகும்.

## கதைச் சுருக்கம்

சூசை முனிவர், மரியாள், திருக்குமரன் ஆகிய மூவரும் களரிமாபுரத்தை விட்டுப் புறப்பட்டுக் காசை மாநகருக்குள் புகுந்தனர். அங்கு ஒரு வீட்டில் தாயின் பிணத்தின் அருகில் அமர்ந்து அழுதுகொண்டிருந்தனர் ஐந்து இளங் கன்னிப் பெண்கள். சூசை முனிவர் அவர்களைக் கண்டு, அவர்கள் துயர் தீர்க்குமாறு திருக்குமாரனை வேண்டினார். அவ்வளவில் தாய் உயிர் பெற்றெழுந்தாள். அதன்பின், அவர்கள் திருமுகத்தில் விளங்கிய தேவ அருளைக் கண்டு, தன் முடநோயை நீக்குமாறு ஒரு முடப் பெண் வேண்டினாள். 'இத் திருமகன் முன்னிலையில் உன் நோய் அகல்வதாக!' என்று சூசை முனிவர் கூறியதும், அவள் குணமடைந்தாள். அவர்கள் அங்குத் தங்கிய மூன்று நாட்களும் அந்நகர் நன்மைகளாற் பொலிவு பெற்றிருந்தது.

## அருஞ்சொற் பொருள்

1. திலம்-தில்லம்; காடு. நீர்ப்புலம்-வயல். நலம் குன்ற-நன்மை நிறைந்த. வலம் குன்றுதவர்-குறையாத வல்லமையுடைய திருக்குடும்பத்தவர்.

2. வேலை-கடல். பீடிகை வீதி-கடைத் தெரு. மாலை-அழகிய.

3. ஆவி-உயிர். அரி சுமந்த அணை-சிங்கங்கள் சுமந்த மெத்தை மேல். மான-போன்ற. எரி சுமந்த-சிவந்த.

4. நான நெய்-வாசனைத் தைலம். அளகம்-கூந்தல். வீங்கு நோய்-மிகுந்த துக்கம். ஓசை-சத்தம். இணர்க் கொடி-பூங்கொடி. சூசை-சூசை முனிவர்; வளன்.

5. கோதையர்-பெண்கள். பம்பி-செறிந்து; ஒலித்து. பாசறை-துன்பம். மீண்டது-மீண்டும் உடலினுள் புகுந்தது.

6. ஆய்-தாய். தருகை பெருத - வரவேற்காமல். தூய் எழுந்த-தூய்மைநிறைந்த. விமலன்-குற்றமில்லாதவன்.

7. கால் வழங்காதவள்-கால் விளங்காத முடம் உடையவள். பொருந்தி-மனம் வருந்தி. கைக்கொடை உய்த்து-ஈகை தந்தபோது. இருந்திற்று ஆற்றும்-இருந்தாற் போல உடனே தீர்க்கும்.

8. அணங்கு-பெண்; கன்னிமரி. அணங்கு-பேய். பேம்-அச்சம். அணங்கு-துன்பம். அணங்கு-அழகு. மின் என-மின்னலைப் போல. ஒளித்தார்-மறைத்தார்.

9. தூய் அறச்சாலை வாயினர்-தூய அறச்சாலை போன்ற வாயிலையுடையவர். முப்பகல்-மூன்று நாள். வாய்ந்தது-மாட்சி நிறைந்தது. காசு அற-குற்றமற. காசு-பொன். காசை-பொன்னகர்.

## வினுக்கள்

1. வலம் குன்ருதவர் யார்? அவர் காசை மாநகரை எவ்வாறு எய்தினர்?
2. திருக்குடும்பத்தார் எங்கு அழுகுரல் கேட்டனர்?
3. அழுது ஏங்கினர்-யார்? ஏன்?
4. சூசை முனிவர் திருக்குமரனிடம் வேண்டியது யாது?
5. அன்னை எவ்வாறு உயிர் பெற்ருள்?
6. விமலனை எல்லாரும் எவ்வாறு வாழ்த்தினர்?
7. முடப்பெண் திருக்குமரனிடம் வேண்டியது என்ன?
8. முடப்பெண் வேண்டியதற்குச் சூசை முனிவர் கூறிய விடை யாது?
9. காசை நகர் திருக்குடும்பத்தார் தங்கியமையால் அடைந்த நன்மைகள் யாவை?
10. இடஞ்சுட்டி விளக்குக:
    (1) 'கோதையார் பம்பி ஆர்த்தெழும் பாசறை நோக்கு.'
    (2) 'தேவமகன் முகத்தாறும்.'
    (3) 'என் நோய் இருந்திற்ருற்றும் மருந்திலையோ?'

# IV. பல்சுவை

## அ. வருணனை

### 1. வயலில் குழந்தை வளர்ப்பு

#### நூலும் ஆசிரியரும்

இச்செய்யுள் கம்பராமாயணத்திினின்றும் எடுக்கப் பெற்றதாகும்.

நூல், ஆசிரியர் பற்றிய குறிப்புக்களைக் கதைப் பகுதி யிற் காண்க.

#### அருஞ்சொற் பொருள்

பண்ணை-வயல். சேல்-மீன். ஒண்கணாரில்-(ஒண்மை + கண்ணார் + இல்)—விளக்கம் பொருந்திய கண்களையுடைய பெண்களைப்போல. செங்கால்-(செம்மை + கால்). நளினப் பள்ளி-தாமரை மலராகிய தொட்டில். நளினம்-தாமரை. பள்ளி-படுக்கை. மேதி-எருமை. உள்ளி-நினைத்து. தேரை-தவளை.

### 2. கோழி கூவுதல்

#### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள் 'நளவெண்பா'வினின்றும் எடுக்கப்பெற்ற தாகும்.

நிடத நாட்டு அரசனான நளனது வரலாற்றை வெண் பாக்களால் கூறும் நூல் 'நளவெண்பா' ஆகும். இந்நூல் சுயம் வர காண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்னும் மூன்று பகுதிகளையுடையது.

இந்நூலை இயற்றியவர் புகழேந்திப் புலவராவார். இவர் தொண்டை நாட்டிலுள்ள பொன்விளைந்த களத்தூரில்

வேளாளர் மரபில் தோன்றியவர்; வைணவ சமயத்தினர்; முரணை நகரைத் தலைநகராகக் கொண்டு மள்ளுவ நாட்டை ஆண்ட சந்திரன் சுவர்க்கி என்னும் சிற்றரசனால் ஆதரிக்கப் பெற்றவர்; 'வெண்பாவிற் புகழேந்தி' எனப் போற்றப்படும் பெருமை பெற்றவர். இவர் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு என்பர்.

அருஞ்சொற் பொருள்

தையல்-பெண்; தமயந்தி. அலைத்து-அறைந்து. கார் இருள்-கரிய இருட்டு. வெய்யோன்-சூரியன். வாவு பரி-தாவிச் செல்லும் குதிரை. குலம்-இனம்; கூட்டம்.

## 3. தொழில்

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள் 'பாரதியார் கவிதைகள்' என்னும் நூலில் 'தொழில்' என்னும் தலைப்புப் பகுதியினின்றும் எடுக்கப் பெற்றதாகும்.

இதை இயற்றியவர் தேசிய கவி சி. சுப்பிரமணிய பாரதியார் ஆவார். இவர் பெற்றோர் சின்னசாமி ஐயர்—இலக்குமி அம்மையார் ஆவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள எட்டையபுரத்தில் பிறந்தவர்; இந்திய நாட்டின் விடுதலைக்காகப் பாடுபட்டவர்; சுதந்தரம், சமத்துவம், சகோதரத்துவம் என்னும் மூன்று கொள்கைகளைக் கடைப்பிடித்து அவற்றுக்காகப் பாடுபட்டவர். இவர் காலம்: *11-12-1882—11-9-1921*.

அருஞ்சொற் பொருள்

புவி-உலகம். இசைக்கின்றேன்-சொல்கின்றேன். அரும்பும்-தோன்றும்.

## 4. திருவள்ளுவர்

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள், 'மலரும் மாலையும்' என்னும் நூலில் உள்ளதாகும்.

இதனை இயற்றியவர் சி. தேசிக விநாயகம் பிள்ளை ஆவார். இவர் நாஞ்சில் நாட்டிலுள்ள சுசீந்திரத்தை அடுத்த தேரூரில் பிறந்து, புத்தேரியில் வாழ்ந்து வந்தவர்; சைவ வேளாளர் மரபினர்; தமிழ், மலையாளம், ஆங்கிலம் ஆகிய மும்மொழிகளை அறிந்தவர்; திருவனந்தபுரம் அரசாங்கப் பெண்கள் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணி யாற்றியவர்; 'கவிமணி' என்னும் பட்டம் பெற்றவர். இவர் பெற்றோர்: சிவதாணு பிள்ளை—ஆதிலட்சுமி அம்மையார். இவர் இயற்றிய பிற நூல்கள்: உமர்கய்யாம் பாடல்கள், ஆசிய ஜோதி, நாஞ்சில் நாட்டு மருமக்கள் வழி மான்மியம் முதலியன. இவர் காலம்: தாது ஆண்டு ஆடித் திங்கள் 14ஆம் நாள் (1876 ஜூலை மாதம்)—25-9-1954.

### அருஞ்சொற் பொருள்

சித்தம்-மனம். வித்தகன்-அறிஞன். பொய் இல் மொழி-திருக்குறள்.

## 5. ஏரி

### நூலும் ஆசிரியரும்

இப்பாட்டு, 'இளைஞர் இலக்கியம்' என்னும் நூலில் உள்ளதாகும்.

இதனை இயற்றியவர் பாரதிதாசன் ஆவார். இவர் வரலாற்றை உரைநடைப் பகுதி மூன்றும் பாடத்திற் காண்க.

### அருஞ்சொற் பொருள்

மாரி-மழை. அலரி-ஒருவகைப் பூஞ்செடி. புன்னை-ஒரு வகை மரம். தொன்னை-இலைக்கலம்.

## 6. உத்தமர் காந்தி

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள், உலகம் போற்றும் உத்தமர் காந்தியடிகளைப்பற்றி, நாமக்கல் கவிஞர் பாடியுள்ள பாக்களினின்றும் எடுக்கப்பெற்றதாகும்.

இப்பாட்டை இயற்றியவர் வே. இராமலிங்கம் பிள்ளை ஆவார். இவர் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த மோகனூரில் பிறந்து, நாமக்கல்லில் வாழ்ந்து வருபவர். இவர் பெற்றோர்: வேங்கடராம பிள்ளை—அம்மணி அம்மாள். இவர் காந்தியக் கவிஞர்; தமிழ் நாட்டு அரசவைப் புலவராக விளங்கியவர்; 'நாமக்கல் கவிஞர்' என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப் பெறுபவர். இவர் இயற்றிய நூல்கள்: அவனும் அவளும், மலைக்கள்ளன், இலக்கிய இன்பம், சங்கொலி, தமிழன் இதயம் முதலியனவாகும். பிறப்பு: 10-10-1888.

### அருஞ்சொற் பொருள்

சுலபம்-எளிது. சொற்பம்-குறைவு. எல்லை-அளவு. தொல்லுலகு-(தொன்மை+உலகு) - பழைய உலகம். ஈந்த-கொடுத்த.

## 7. ஞாயிறு

### நூலும் ஆசிரியரும்

இப்பாடல், 'எழிலோவியம்' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பெற்றதாகும்.

இந்நூலை இய்ற்றியவர் கவிஞர் வாணிதாசன் ஆவார். இவர் பாவேந்தர் பாரதிதாசரின் மாணவர்; புதுச்சேரியை அடுத்த வில்லியனூரில் பிறந்து சேலியமேட்டில் வாழ்ந்து வருகிறார்; கிருமாம்பாக்கம் அரசினர் உயர்பள்ளியில் தலைமையாசிரியராய்ப் பணியாற்றி வருகிறார்; தமிழ், பிரெஞ்சு ஆகிய இரு மொழிகளிலும் பட்டம் பெற்றவர். இவருடைய இயற்பெயர்: அரங்கசாமி என்ற எதிராசு. இவர் தந்தை பெயர்: திருக்காமு நாயுடு. இவர் தமிழச்சி, கொடி முல்லை, எழிலோவியம், இன்ப இலக்கியம், தீர்த்த யாத்திரை, குழந்தை இலக்கியம், இரவு வரவில்லை, சிரித்த நுணா, பாட்டுப் பிறக்குமடா, தொடுவானம், வாணிதாசன் கவிதைகள், இனிக்கும் பாட்டு முதலிய நூல்களை இயற்றியுள்ளார். பிறப்பு: 22-7-1916.

அருஞ்சொற் பொருள்

வரி-புள்ளி. பண்-இசை. அண்டை-பக்கம்; அருகு. முழவு-மத்தளம். கொண்டல்-மேகம். அரங்கு-மேடை.

## 8. ஆறு

நூலும் ஆசிரியரும்

இப்பாட்டு, 'முடியரசன் கவிதைகள்' என்னும் நூலில் உள்ளதாகும்.

இந்நூலை இயற்றியவர் கவிஞர் முடியரசன் ஆவார். இவருடைய இயற்பெயர்: துரைராசு. இவர் தந்தை பெயர்: சுப்பராயலு. பிறந்த ஊர்: மதுரை மாவட்டத்தில் உள்ள பெரியகுளம். இவர் காரைக்குடி மீ.சு. உயர்நிலைப்பள்ளியில் தமிழாசிரியராய் இருந்து வருகிறார். இவர் காவியப் பாவை, கவியரங்கில் முடியரசன், முடியரசன் கவிதைகள், பூங்கொடி ஆகிய நூல்களை இயற்றியுள்ளார். பிறப்பு: 7-10-1920.

அருஞ்சொற் பொருள்

ஆர்த்து-ஒலித்து. உலையாத-அழியாத.

வினாக்கள்

1. எது தாலாட்ட எக் குழந்தை எவ்வாறு பள்ளி கொண்டது?
2. கதிரவன் உதயத்தினைப் புகழேந்திப் புலவர் எவ்வாறு கற்பித்துக் கூறியுள்ளார்?
3. பாரதியார் குறிப்பிடும் தொழில்கள் யாவை?
4. எதைப் படித்தால் திகைக்காதிருக்கலாம் என்கிறார் கவிமணி?
5. ஏரியின் சிறப்பைப் பாரதிதாசன் எவ்வாறு கூறியுள்ளார்?
6. இந்தியத்தாய் உலகினுக்கு ஈந்த செல்வம் யார்? அவரது இயல்பை வரைக.
7. ஞாயிற்றின் தோற்றத்தைக் கவிஞர் வாணிதாசன் எவ்வாறு வருணித்துள்ளார்?
8. ஆறு எவ்வுண்மையை உணர்த்துவதாகக் கவிஞர் முடியரசன் கூறியுள்ளார்?

## ஆ. சீட்டுக்கவி

### சிவபெருமான் சேரலனுக்கு விடுத்த சீட்டுக்கவி

சீட்டுக் கவியாவது செய்யுள் வடிவில் அமைந்த கடிதம் ஆகும். முற்காலத்தில் புலவர் பெருமக்கள் தாம் விரும்பிய செய்தியைச் செய்யுளாகவே புனைந்து பிறர்க்கு அறிவித்து வந்தார்கள்.

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள் மதுரையில் கோயில் கொண்டருளிய சோமசுந்தரப் பெருமான், பாணபத்திரன் என்னும் தன் அடியவருக்கு உதவுமாறு, சேரமான் பெருமாள் நாயனர் என்னும் சேர மன்னனுக்கு எழுதியனுப்பிய சீட்டுக் கவியாகும். இது பன்னிருதிருமுறைகளுள் பதினேராம் திருமுறையிலும், தனிப்பாடல் திரட்டிலும் உள்ளதாகும்.

### அருஞ்சொற் பொருள்

மதி-நிலவு. மலி-பொருந்திய. புரிசை-மதில். கூடல்-மதுரை. பானிறம்-(பால்+நிறம்)—பால் போன்ற வெண்மை நிறம். வரி-கோடு. பயில்-தங்கிய. பொழில்-சோலை. ஆலவாய்-மதுரை. மாற்றம்-சொல். பருவம்-கார்ப்பருவம். கொண்மூ-மேகம். படி-ஒப்பு. ஒருமையின்-ஒரு மனத்துடன். அணி-அழகு. குரு-நிறம். குலவிய-விளக்கமான. செருமா-போருக்குரிய குதிரை அல்லது யானை. உகைக்கும்-செலுத்தும். சேரலன்-கழறிற்றறிவார் என்னும் சேரமான் பெருமாள் நாயனர்; சேர அரசர். தன்போல்-உன்னைப்போல். தன்பால்-உன்னிடத்தில். போந்தனன்-வந்தனன். வரவிடுப்பது-அனுப்பிவைப்பாயாக.

### வினாக்கள்

1. சீட்டுக் கவி என்றால் என்ன?
2. 'மதிமலி புரிசை' என்று தொடங்கும் செய்யுள் எப்பொழுது, யாரால் பாடப்பட்டதாகும்?
3. மதுரையின் பெருமை எவ்வாறு கூறப்பட்டுள்ளது?
4. சேரலனின் குணச் சிறப்பை விளக்குக.
5. சிவபெருமான் சீட்டுக்கவியின் வாயிலாகச் சேரலனுக்கு அறிவிப்பது யாது?

# இ. இரட்டுற மொழிதல்

ஒரு சொல்லேனும் தொடரேனும் இரு பொருள் படுவது இரட்டுற மொழிதலாகும். இரட்டுற மொழிதல்—(இரண்டு +உற+மொழிதல்). இது சிலேடை எனவும் வழங்கும். சிலேடை, செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என இருவகைப்படும்.

## 1. பாம்பும் வாழைப்பழமும்

### நூலும் ஆசிரியரும்

இப் பாட்டு, தனிப்பாடல் திரட்டில் உள்ளதாகும். இதனை இயற்றியவர் காளமேகப் புலவர் ஆவார். இவர் சோழநாட்டில் குடந்தையை அடுத்துள்ள நந்திக்கிராமத்தில் பிறந்தவர்; சமையல் தொழில் செய்து வந்தவர்; திருவானைக்காவில் உள்ள அகிலாண்டநாயகியின் அருள் பெற்றுக் கவி பாடும் வன்மை பெற்றவர்; இவர் கவி மழை பொழிந்துவந்த திறங் கண்ட பொதுமக்கள் இவரைக் ‘காளமேகம்’ என அழைக்கலாயினர். இவர் விரைந்து கவி பாடுவதில் வல்லவர்; வசைக்கவி பாடுவதிலும் வல்லவர். இவர் கி. பி. பதினைந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்தவர். இவர் திருவானைக்கா உலா, சித்திர மடல் முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

### அருஞ்சொற் பொருள்

நஞ்சு-நைந்து; கனிந்து. தோல் உரிக்கும்-தோலை உரித்துக்கொள்ளும். நாதர்-கடவுள். வெஞ்சினம்-துணைக் கறி. வெம் சினம்-கொடிய கோபம். பல் பட்டால்-பல்லால் கடிக்கப்பெற்றால். மீளாது-திரும்ப வராது: வயிற்றுக்குள் சென்றுவிடும்; உயிர் திரும்பாது; இறப்பர். விஞ்சு மலர்—மிக்க மலர். வரை-மலை. திருமலைராயன்-விசயநகர அரசர்களின் பிரதிநிதியாகச் சோழ நாட்டிலுள்ள திருமலைராயன் பட்டினத்திலிருந்து ஆட்சி புரிந்து வந்த அரசன்; அதிமதுர கவிராயர் முதலிய புலவர்களை ஆதரித்தவன்.

## 2. கலைசைச் சிலேடை வெண்பா

### நூலும் ஆசிரியரும்

தொண்டை நாட்டில் உள்ள தொட்டிக்கலை என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனைப்பற்றிப் பாடப்பட்ட சிலேடை வெண்பாக்களால் ஆகிய நூல் என்பது, கலைசைச் சிலேடை வெண்பா என்னும் தொடரின் பொருளாகும்.

இந் நூலின் ஆசிரியர் தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர் ஆவார். இவர் காலம்: கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியாகும்.

### அருஞ்சொற் பொருள்

பாவலர் காவலரைச் சூழும்-புலவர்கள் அரசர்களைச் சூழ்ந்திருக்கின்ற. வண்டினமும் கா அலரைச் சூழும்-வண்டுக் கூட்டங்கள் காவில் உள்ள மலர்களைச் சூழ்ந்திருக்கக்கூடிய. அரி வை அம்பு ஆக-திருமாலைக் கூர்மையான அம்பாகக் கொண்டு. அரண் ஒரு மூன்று-பொன், வெள்ளி, இரும்புக் கோட்டைகளான திரிபுரங்கள். அரிவை அம் பாகத்தான்-பெண்ணாகிய உமையவளைத் தன் இடப்பக்கத்தில் உடைய வன்; சிவன். அகம்-இடம். காவலர்-காவலர்; கா அலர். காவலர்-அரசர். கா அலர்-சோலையிலுள்ள மலர்கள்.

### வினாக்கள்

1. பாம்பும் வாழைப்பழமும் எவ்வாறு ஒன்றாகும்? விளக்குக.
2. 'காவலரைச் சூழும் கலைசை'—இத்தொடரிலுள்ள சிலேடைப் பொருளை விளக்குக.
3. அரிவையம்பாகத்தான்—யார்? விளக்குக.
4. இருபொருள் கூறுக: வெஞ்சினம், நஞ்சிருக்கும், அரிவையம்பாகத்தான், காவலர்.
5. இரட்டுற மொழிதல் என்றால் என்ன?

# ஈ. சிற்றிலக்கியம்

## 1. கலிங்கத்துப்பரணி

### நூலும் ஆசிரியரும்

கலிங்கத்துப்பரணி கலிங்க நாட்டில் நிகழ்ந்த போரைப் பற்றிப் பாடப்பெற்ற பரணி நூல். பரணியானது போர்க் களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்ற வீரனுடைய வீரத் தைப் பாராட்டிப் பாடும் நூலாகும். முதற் குலோத்துங்க சோழன் வட கலிங்க நாட்டை வென்று அடிமைப்படுத்திய வீரச் செயலைப் பாராட்டிப் பாடப்பட்டது இந்நூல். தமிழில் முதற்பரணியும், பரணிக்குள் தலையாயதும் கலிங்கத்துப் பரணியேயாகும். இது சொற்சுவை, பொருட்சுவை கொண் டது; தாழிசையால் பாடப்பெற்றது.

இதனை இயற்றியவர் சயங்கொண்டார் என்னும் புலவ ராவார். காலம்: கி. பி. 12ஆம் நூற்றுண்டு. இவர் 'பரணிக் கோர் சயங்கொண்டான்' என்னும் புகழ் பெற்றவராவார். இவர் சமயம்: சைவம். இவர் ஊர் தீபங்குடி என்பர்.

### அருஞ்சொற் பொருள்

1. காயம்-புண். சொரிந்து-குருதியைச் சொரிந்து. பின்-உடலின் பிற்பகுதி. உதிரம்-குருதி. ஒழுகும்-மிதந்து செல்லும். கலம்-மரக்கலம்.

2. வறியவர்-ஏழைகள். இனம்-கூட்டம். பதுமம்-தாமரை. மலர்ந்தார்-வீரர்.

## 2. முத்தொள்ளாயிரம்

### நூலும் ஆசிரியரும்

இப்பாடல் 'முத்தொள்ளாயிரம்' என்னும் நூலில் உள்ளதாகும்.

சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தரைக் குறித்து ஒவ்வொருவரைப் பற்றியும் தொள்ளாயிரம் பாடல்களாகப்

பாடப்பட்டுள்ளதாதலின், இந்நூல் 'முத்தொள்ளாயிரம்' என்னும் பெயரைப் பெற்றது. முத்தொள்ளாயிரம்—மூன்று +தொள்ளாயிரம்.

இந்நூலாசிரியர் யார் என்பது விளங்கவில்லை.

அருஞ்சொற் பொருள்

அள்ளல்-சேறு. பழனம்-வயல். அரக்கு ஆம்பல்-செவ்வாம்பல். வெரீஇ-பயந்து. பார்ப்பு-குஞ்சு. கௌவை-ஆரவாரம். நச்சு-விரும்பத்தக்க. கோதை-சேரன்.

## 3. குற்றாலக் குறவஞ்சி

### நூலும் ஆசிரியரும்

இப்பாட்டு குற்றாலக் குறவஞ்சி என்னும் நூலில் உள்ளதாகும்.

'குற்றாலக் குறவஞ்சி' என்பது திருக்குற்றாலத்தில் எழுந்தருளியுள்ள குற்றாலநாதர் என்னும் சிவனைக் குறித்துப் பாடப்பட்ட நூலாகும். இஃது ஒரு பெண்ணிற்குக் குறத்தி குறி கூறும் செய்திகளைப் பெரும்பாலும் கொண்டது. குறவஞ்சி என்பது 'குறவஞ்சிப் பாட்டு' எனவும் வழங்கும். தமிழில் உள்ள குறவஞ்சிகளுள் தலையாயது இக்குறவஞ்சியே ஆகும்.

இதனை இயற்றியவர் திரிகூடராசப்பக் கவிராயர் ஆவார். இவர் தென்காசியை அடுத்துள்ள மேலகரம் என்னும் ஊரினர்; ஏறத்தாழ இற்றைக்கு 250 ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்தவர்.

அருஞ்சொற் பொருள்

அரவு-நல்ல பாம்பு. ஈனும்-கக்கும். வெயில்-ஒளி. அம்புலி-நிலவு; கவளம்-ஒருவாய்ச் சோற்று உருண்டை. தும்பி-யானை. வேடுவர்-மலைக்குறவர். விரைக்க-விதைக்க. சாடுதல்-அழித்தல். புனம்-காடு. நாறும்-மணம் பரப்பும். குதி பாயும்-துள்ளிக் கீழே விழும். அணுகா-நெருங்காத; பறக்காத. நிரை-வரிசை; கூட்டம்.

## 4. முக்கூடற்பள்ளு

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள்கள், 'முக்கூடற்பள்ளு' என்னும் நூலில் உள்ளவையாகும்.

'பள்ளு' என்பது பள்ளர் வாழ்க்கையை நிலைக்களமாக உடையது. 'உழத்திப் பாட்டு' என்றும் இதனைக் கூறுவர். 'முக்கூடற்பள்ளு' திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள சீவலப் பேரி என வழங்கும் முக்கூடலில் கோயில் கொண்டுள்ள அழகரது புகழைப் பாடும் நூலாகும்.

இதனை இயற்றியவர் என்னயினைப் புலவர் என்பர்.

### அருஞ்சொற் பொருள்

*1.* கறை-களங்கம். கடம்-மதம். வேழம்-யானை. சிறை-சிறகு. விண்–வானம். புள்-பறவை. குழைபட்டு உள்ளது-துவண்டு மெலிவது.

2. கண்டம்–கட்டி. மறுக-சுழல. தணிப்பக் கண்டது-ஒடுங்கியுள்ளது. தாபதர்–துறவறத்தினர்.

## 5. தனிப் பாடல்

### 1. இடுக்கண் வருங்கால் நகுக

### நூலும் ஆசிரியரும்

இப் பாடல், 'தனிப்பாடல் திரட்'டில் உள்ளதாகும்.

இது பிறவிக் குருடரான அந்தகக் கவி வீரராகவ முதலியார் தம் கட்டுச் சோற்று மூட்டையை நாய் கவர்ந்து சென்றபோது, நகைச்சுவை அமையப் பாடியதாகும். இவர் தொண்டை நாட்டைச் சேர்ந்த பூதூர் என்னும் ஊரில் பிறந்தவர்; வேளாள மரபினர்; 'சந்திரவாணன் கோவை' முதலிய நூல்களையும், பல தனிப் பாடல்களையும் பாடியுள்ளார். இவர் காலம் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டாகும்.

### அருஞ்சொற் பொருள்

வயிரவன் வாகனம்-பைரவக் கடவுளின் வாகனமாகிய நாய். நான்முகன் வாகனம்-பிரமன் வாகனமாகிய அன்னம்; சோற்று மூட்டை. நாராயணன் வாகனம்-கருடன்; கருடனைப்போல் பறந்துவிட்டது. மை வாகனன்-ஆட்டை வாகனமாக உடைய அக்கினி தேவன்; பசி. முகம் பாராமல்-முகத்தைப் பார்க்காமல்; இரக்கம் இல்லாமல்.

## 2. வினா—விடை

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள், 'தனிப்பாடல் திரட்'டில் உள்ளதாகும்.

வினா-விடையாவது, சில வினாக்களை அமைத்து அவற்றுக்குரிய விடை இறுதியில் அழகிய ஒரு தொடராக அமையுமாறு பாடுவதாகும். இதனை 'வினாவுத்தரம்' எனவும்கூறுவர்.

இச் செய்யுளை இயற்றியவர் இராமசந்திர கவிராயராவார். இவர் தொண்டை நாட்டைச் சேர்ந்த இராசநல்லூரில் பிறந்தவர். இவர் காலம் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டாகும்.

### அருஞ்சொற் பொருள்

இரவலன்-யாசகன். இதயம் - எண்ணம்; விருப்பம். பரவுணவு-மேலான உணவு. தர-தருமாறு. வரம்-மேன்மை. இல்லாதது திரு; இதயம் வேம்; உணவு கடம் (கடன் வாங்கி உண்பது); சுவையற்றது நா (நாக்கு); சொற்பான்மை தா (கொடு) எனத் தடித்த எழுத்தில் உள்ளவற்றைக் கூட்டிப் பொருள் கொள்க.

### வினாக்கள்

1. யானைகள் குருதி வெள்ளத்தில் மிதந்து சென்ற காட்சி எவ்வாறு இருந்ததாகச் சயங்கொண்டார் கூறியுள்ளார்?
2. வீரர் முகமலர்ந்து கிடந்தமை கலிங்கத்துப் பரணியில் எவ்வாறு புனைந்துரைக்கப்பட்டுள்ளது?

3. கோக்கோதையின் நாட்டு வளத்தை முத்தொள்ளாயிர ஆசிரியர் எங்ஙனம் புனைந்துரைத்துள்ளார்?
4. 'புள்ளினம் தம் கைச் சிறகால் பார்ப்பொடுக்கும்'— எக்காரணம் பற்றி? விளக்குக.
5. குறத்தி கூறும் குற்றால மலைவளத்தைத் தொகுத்து வரைக.
6. மூத்தபள்ளி ஆசூர் நாட்டின் வளங்களாகக் கூறுவன யாவை?
7. இளையபள்ளி கூறும் சீவலமங்கை நாட்டின் சிறப்புக்கள் யாவை?
8. அந்தகக் கவி வீரராகவரின் பாடலில் அமைந்த நகைச்சுவையைப் புலப்படுத்துக.
9. 'திருவேங்கடநாதா' என்ற தொடர் எவ்வினுக்களுக்கு விடையாய் அமைந்தது?

# உ. வழிபாட்டுப் பாடல்கள்

## 1. தேவாரம்

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள் தேவாரத்தினின்றும் எடுக்கப்பெற்றதாகும். இதனை இயற்றியவர் திருநாவுக்கரசர் ஆவார்.

நூல், ஆசிரியர் பற்றிய குறிப்புக்களை வாழ்த்துப் பகுதியிற் காண்க.

### அருஞ்சொற் பொருள்

ஆர்க்கும்-யாருக்கும். நமன்—எமன். நடலை-நடுங்குதல். மீளா ஆள்-நீங்காத அடிமை. குறுகினோம்-அமைந்தோம்.

## 2. திவ்வியப் பிரபந்தம்

### நூலும் ஆசிரியரும்

நூல் பற்றிய குறிப்பை வாழ்த்துப் பகுதியிற் காண்க.

இதனைப் பாடியவர் திருமங்கையாழ்வார் ஆவார். இவர் சோழ நாட்டில் உள்ள திருக்குறையலூரில் பிறந்தவர். இவர்

காலம் கி. பி. எட்டாம் நூற்றுண்டு என்பர். இவர் இயற்றிய பாடல்கள், 'பெரிய திருமொழி' எனப்படும்.

அருஞ்சொற் பொருள்

நந்தாதா-அழியாத. நம்பீ-தலைவனே.

## 3. இரட்சணிய யாத்திரிகம்

### நூலும் ஆசிரியரும்

இந்நூல் ஆங்கிலப் புலவர் ஜான் பனியன் என்பவர் இயற்றிய 'பில்கிரிம்ஸ் பிராக்ரஸ்' என்னும் நூலைத் தழுவி எழுதப்பட்டதாகும்.

இதனை இயற்றியவர் ஹென்றி ஆல்பர்ட்டு கிருட்டினப் பிள்ளை ஆவார். இவர் பாளையங்கோட்டைக்கருகிலுள்ள ரெட்டியார் பட்டியில் பிறந்தவர்; வைணவராய் இருந்து கிறித்தவராக மாறியவர். இவர் காலம்: 1827—1900.

அருஞ்சொற் பொருள்

நனி-மிகவும். ஊனம்-குற்றம். தீனரட்சகன்-எளியவரைக் காப்பவன்.

## 4. நீதி நூல்

### நூலும் ஆசிரியரும்

இச் செய்யுள் மாயூரம் முனிசீப்பு வேதநாயகம் பிள்ளை அவர்களால் இயற்றப்பெற்ற 'நீதி நூலி'ல் உள்ளதாகும்.

வேதநாயகம் பிள்ளை திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த குளத்தூரிற் பிறந்தவர்; வேளாள மரபைச் சேர்ந்தவர்; கிறித்தவ சமயத்தினர்; மாயூரத்தில் முனிசீப்பாக இருந்து புகழ் பெற்றவர்; 'பிரதாப முதலியார் சரித்திரம்', 'சர்வ சமய சமரசக் கீர்த்தனை' முதலிய பல நூல்களை இயற்றியவர். இவர் காலம்: கி. பி. 1826—1889.

அருஞ்சொற் பொருள்

கிரணம்-கதிர். புட்கள்-பறவைகள். சுதி-பண். தரு-மரம். பொதி அலர்-தொகுதியான பூக்கள். பூதம்-நிலம், நீர், தீ, காற்று, வான். அதிர்-ஒலிக்கின்ற.

## 5. மலரும் மாலையும்

### நூலும் ஆசிரியரும்

நூல், ஆசிரியர் பற்றிய குறிப்புக்களைப் பல்சுவை என்னும் தலைப்பில் 'அ' பிரிவில் உள்ள வருணனைப் பகுதியிற் காண்க.

### அருஞ்சொற் பொருள்

நாடி-தேடி. புலம்-வயல். கரம்-கை. கொழிக்கும்-பொழியும். கவிவாணர்-கவிஞர். உவந்து-மகிழ்ந்து. நடம்-நடனம். மயிலே-மயிலைப்போன்ற கலைமகளே. பாதம்-திருவடி. அடைக்கலம்-புகலிடம்.

### வினாக்கள்

1. சங்கரன் சேவடி குறுகினர் பெறும் நலங்கள் யாவை?
2. திருமங்கையாழ்வார், 'இனி யான் உனை என்றும் விடேன்' எனக் கூறக் காரணமென்ன?
3. ஏசுநாதரைத் துதித்தலால் விளையும் நன்மைகள் யாவை?
3. இயற்கைப் பொருள்கள் இறைவனை எவ்வாறு இறைஞ்சுகின்றன?
5. கலைமகள் மகிழ்ந்து நடமாடிக் களிக்கும் இடங்கள் யாவை?

# உரை நடை

## 1. பழந் தமிழ் நாடு

நமது பாரத நாட்டை வரலாற்று அமைப்பில் முப்பெரும் பிரிவுகளாகக் கொள்வது வழக்கம். இமய மலேகட்கும், விந்திய சாத்பூரா மலேகட்கும் இடைப் பட்ட சிந்து—கங்கைச் சமவெளி வட இந்தியா என்று வழங்கப்படும். விந்திய சாத்பூரா மலேகட்கும் திருப்பதிமலே, வடபெண்ணே யாற்றுக்கும் இடைப் பட்ட பகுதியைத் தட்சிணம் என்று கூறுவது வழக்கம். தட்சிணத்திற்குத் தெற்கே உள்ள பகுதி தமிழகம் எனப்படும். உலகில் முதன் முதலாகத் தோன்றிய நிலப்பகுதி நம் தமிழ் நாடேயாகும். பழங்காலத்தில் கிழக்கே ஜாவா வரையிலும் மேற்கே மடகாஸ்கர் வரையிலும் தமிழ்மொழி பேசப்பட்டு வந்தது என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். மொழியினும் நாடு பழமையானதாகும். அப் பழந் தமிழ்நாட்டின் சிறப்பினே இங்குக் காண்போம்:

நம் பழந்தமிழ் நாடு சேர சோழ பாண்டிய நாடு களோடு நடு நாடு, தொண்டை நாடு, கொங்கு நாடு என்னும் நாடுகளேயும் தன்னகத்தே கொண்டிருந் தது. இன்று மலேயாள மொழி பேசப்படும் திருவாங் கூர் கொச்சி நாடுகளும், மலேயாள மாவட்டமும் பழைய காலத்தில் தமிழ் வழங்கும் நிலப்பகுதிகளாக இருந்தன. இன்று தெலுங்கு பேசப்படும் வேங்கட

மலையைச் சுற்றியுள்ள சித்தூர் நெல்லூர் மாவட்டப் பகுதிகள் பண்டு தமிழ் பேசப்பட்ட இடங்களே யாகும். காலப் போக்கில் அவை சுருங்கி இன்று சென்னை, செங்கற்பட்டு, வடார்க்காடு, சேலம், தருமபுரி, கோயம்புத்தூர், நீலகிரி, தென்னார்க்காடு, தஞ்சை, திருச்சி, இராமநாதபுரம், மதுரை, திருநெல் வேலி, கன்னியாகுமரி என்னும் பதினன்கு மாவட்டங் களைக் கொண்ட நிலப்பகுதியே தமிழ்நாடு எனப் படுகிறது.

பழந்தமிழ் நாடு இந்தியப் பண்பாடு உருவாவ தற்குச் சிறந்த வழிகாட்டியாய் இருந்துள்ளது. அது கல்வி, கைத்தொழில், வாணிகம், கலை, நாகரிகம் ஆகியவற்றில் தலைசிறந்து இருந்தது. நம் நாடு நீர் வளம், நிலவளம், மலைவளம் ஆகிய பலவகை வளங் களையும் உடையது.

சேர நாடு

தமிழகத்தின் மேற்குக் கரையோரத்தில் உள்ளது சேரநாடாகும். இந்நாடு முற்றிலும் வானளாவிய மலை நிறைந்துள்ளதால் இதனை 'மலை நாடு' என்று கூறுவர். இக்காலத்தில் திருவாங்கூர், கொச்சி, தென் கன்னடம், கோயம்புத்தூர், சேலம் என வழங்கப் படும் நிலப்பகுதிகள் சேர நாட்டில் அடங்கும். அகில், சந்தனம், தேக்கு முதலிய உயர்ந்த மரவகைகள் இங் குள்ள மலைபடுபொருள்கள் ஆகும். இங்குள்ள காடு களில் யானைகள் மிகுதியாக உள்ளன.

"வேழமுடைத்து மலை நாடு"

என இதன் சிறப்பை ஔவையார் வியந்து கூறி யுள்ளார். இங்கு மிளகு, ஏலம், இலவங்கம் முதலிய

பொருள்கள் மிகுதியாக உண்டு. இவையனைத்தும், பன்னெடுங் காலந் தொட்டே வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. அயல் நாட்டிலிருந்து கண்ணடிகளும் போர்க் கருவிகளும் இறக்குமதி செய்யப்பட்டன. இந்நாட்டில் எந்நாளும் மழைவளஞ் சுரந்த வண்ண மிருக்கும். இங்குள்ள மக்கள் அழகும் நல்ல உடற்கட்டும் உடையவர் களாவர்.

சேர நாட்டின் தலைநகரம் வஞ்சி எனப்படும். தொண்டி, முசிறி என்பன இந்நாட்டின் துறைமுகப் பட்டினங்களாகும். இத்துறைமுகங்களின் வழியாகவே மேற்கூறிய பொருள்கள் ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்டன. இந்நாட்டை அழகு செய்யும் ஆறுகளுள் பெரியாறு, பொருநை என்பன சிறந்தனவாகும்.

சேர மன்னர்களுள் இமயவரம்பர் நெடுஞ்சேரலாதர், அவர் மைந்தர் செங்குட்டுவர், அவருக்குப் பிறகு மாந்தரஞ்சேரல் இரும்பொறை ஆகியவர்கள் சிறந்தவர்களாவர். இவர்களுள் செங்குட்டுவர் வடநாட்டின்மீது படையெடுத்துச் சென்று, வெற்றி வீரராக விளங்கினர் எனச் சிலப்பதிகாரம் என்னும் செந்தமிழ் நூல் செப்புகிறது. நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரத்தை முதல் நூலாக இயற்றிப் புகழ் பெற்றவர் செங்குட்டுவன் தம்பியரான இளங்கோவடிகள் ஆவர். சேர மன்னர்களுடைய கொடைத் தன்மை, போர்த் திறன், ஆட்சி முறை ஆகிய செய்திகளைத் தெளிவாகக் கூறும் நூல் பதிற்றுப்பத்து என்பதாகும். பத்து வேந்தர்களின் வரலாற்றைக் கூறும்

இந்நூலில் இப்பொழுது எட்டு மன்னர்களின் வரலாறுகளே கிட்டியுள்ளன. ஏனைய இரண்டு சேர மன்னர்களின் வரலாறு கூறும் பகுதிகள் இன்னும் கிடைக்கவில்லை.



## சோழ நாடு

"சோழவள நாடு சோறுடைத்து"

என ஔவையாரால் பாராட்டப் பெற்ற பெருமையுடையது சோழ நாடு. சிதம்பரத்திற்கு வடக்கே பாய்கின்ற வடவெள்ளாறு முதல் தெற்கே அறந்தாங்கி வட்டத்திலுள்ள தென்வெள்ளாறு வரையில் உள்ள நிலப்பகுதியே இப் பெயர் பெற்றது. இதில் தஞ்சை திருச்சி மாவட்டங்களும், தென்னார்க்காட்டில் ஒரு பகுதியும் அடங்கும். இந்நாட்டில் காடுகள் இல்லை. சிறு சிறு குன்றுகள் சில காணப்படுகின்றன. இந்நாடு முழுவதும் செழிப்புள்ள மருதநிலப் பகுதியே. வான் பொய்ப்பினும் தான் பொய்யா வளமுடைய காவிரியாறு பாய்ந்து குறையாத விளையுளை உண்டாக்குகிறது. 'யானை மறையத்தக்க அளவு பயிர்கள் ஓங்கி வளர்ந்து செழித்து விளங்குவது' எனப் புலவர்கள் இந் நாட்டின் செழுமையைப் புகழ்ந்து பாடியுள்ளனர். மஞ்சளும், இஞ்சியும், மாவும், பலாவும், தென்னையும், வாழையும், வெற்றிலையும், கமுகும் வளர்ந்து பச்சைக் கம்பளம் விரித்தாற்போன்று பசுமையான காட்சியைக் கண்ணுக்கு விருந்தாக்குவது இச் சோழ நாடே.

சோழ நாட்டின் மிகப் பழைய தலைநகரம் உறையூர்.

"ஊரெனப்படுவது உறையூர்"

எனப் புலவர்கள் இதனைப் புகழ்ந்தனர். புகார் என வழங்கிய காவிரிப்பூம்பட்டினம் இந்நாட்டின் துறை முகமாய் விளங்கியது. சோழ நாட்டில் நடைபெற்ற அயல்நாட்டு வாணிகத்தைப் பற்றியும், இப் பட்டினத் தின் பெருமைகளைப் பற்றியும் பத்துப்பாட்டு, சிலப் பதிகாரம் என்னும் நூல்கள் தெளிவுபடுத்தியுள்ளன. தஞ்சை, திருவாரூர், கங்கை கொண்ட சோழபுரம் ஆகிய நகரங்களும் சிற்சில காலங்களில் சோழர் தலை நகரங்களாக இருந்தன.

சோழ நாட்டை ஆண்ட மன்னர்களுள் கரிகாற் சோழர் சிறப்பு வாய்ந்தவராவர். இவர் கி. பி. முதல் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆட்சி புரிந்தார். இவர் காலத்தில் முதலில் உறையூரும், அதன் பிறகு காவிரிப்பூம்பட்டினமும் தலைநகரங்களாயிருந்தன. இவர் சேர பாண்டியரை வென்றார்; சிங்களத்தையுங் கைப்பற்றினர். இவர்தம் பெரும் புகழைப் பத்துப் பாட்டில் ஒன்றாகிய பட்டினப்பாலை என்னும் நூலில் காணலாம். காவிரிக்குக் கரை எடுத்து நாட்டை வளப் படுத்தியமையால் 'வளவர்' என இவர் புகழப்பெற்றார்.

கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் இடையில் விசயாலய சோழர் தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு சோழ நாட்டை ஆண்டு வந்தார். இவர் மைந்தர் ஆதித்த சோழர் காஞ்சிபுரத்தைக் கைக் கொண்டு தொண்டை மண்டலத்தைத் தமதாட் சிக்குக் கொண்டு வந்தார். ஆதித்த சோழருக்குப் பிறகு பராந்தக சோழர் அரியணையேறினர். இவர் மைசூரை ஆண்ட கங்க வமிசத்து மன்னரையும்,

பாண்டியரையும், சிங்களத்தையும் வென்றார். சிதம்பரத்தில் நடராசப் பெருமான் எழுந்தருளியுள்ள திருக்கோயில் கோபுரத்திற்குப் பொன் ஒடு வேய்ந்த பெருந்தகை இப்பராந்தக சோழரே ஆவர். கி. பி. 985இல் இராசராசர் சோழப் பேரரசர் ஆனார். இவர் சேரர் கடற்படையைத் திருவனந்தபுரத்திற்கு அண்மையில் உள்ள காந்தளூர்ச் சாலைக்கு அருகில் வென்றார். குடகு நாட்டைத் தமது பேரரசுக்கு உள்ளாக்கினார். மைசூர், சிங்களம் இரண்டையும் வென்று தமதாக்கிக்கொண்டார். கீழைச் சாளுக்கிய மன்னரைப் போரில் வென்றார். தம் அருமை மகள் குந்தவையைச் சாளுக்கிய இளவரசருக்கு மணம் செய்வித்தார்.

இராசராசர் தம் வீரத்தினால் பலரை வென்று குன்றாப் புகழ் எய்தினார். தம் நாட்டிலுள்ள விளை நிலங்களை அளந்தார்; அவற்றிற்குத் தக்கவாறு வரி விதித்தார். ஊராட்சி மன்றங்களை நிறுவினார். தலைநகரான தஞ்சையில் பிரகதீச்சுரர் கோயில் என வழங்கும் பெருவுடையார் கோயிலைக் கட்டினார்; தம் கால வரலாற்றுச் செய்திகளைக் கல்வெட்டுக்களின் மூலம் நிலைபெறச் செய்தார்.

இராசராசருக்குப் பிறகு கங்கை கொண்ட சோழர் என்னும் முதலாம் இராசேந்திர சோழரும், கலிங்கத்துப் பரணிக்குத் தலைவரான முதற் குலோத்துங்க சோழரும் சோழ நாட்டில் சிறந்த ஆட்சி புரிந்துள்ளனர்.

சோழர்கள் ஆட்சிக்காலத்தில் நாடு மண்டலங்களாகவும், மண்டலங்கள் வளநாடுகளாகவும், வள

நாடு கூற்றங்களாகவும் பிரிக்கப்பட்டது. கூற்றங்களில் பல சிற்றூர்கள் இடம் பெற்றன. சோழர் காலத்தில் ஊராட்சி முறையும், குடவோலை முறையில் ஊராட்சி மன்றத்தினரைத் தேர்ந்தெடுத்த முறையும் குறிப்பிடத்தக்கனவாகும்.

சோழர் ஆட்சியில் கல்வியும் கலையும் சிறந்து விளங்கின. தேவாரமும், நாலாயிர திவ்வியப் பிரபந்தமும் தொகுக்கப் பெற்றன. கலிங்கத்துப் பரணி, பெரிய புராணம். சீவகசிந்தாமணி, கம்ப ராமாயணம் முதலிய சிறந்த தமிழ் நூல்கள் சில சோழர் ஆட்சிக் காலத்தில் பாடப்பெற்றன. ஒட்டக் கூத்தரும் புகழேந்திப் புலவரும் சோழர் அவைப் புலவராக இருந்து சிறப்பித்துள்ளனர்.

**பாண்டிய நாடு**

பாண்டிய நாடு என்பது இக்காலத்தில் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்கள் சேர்ந்த பகுதியாகும். இந்நாட்டில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐவகை நில அமைப்புக்களும் காணப்படும். வையையாறும், தாமிரவருணியாறும், பழையாறு என வழங்கும் பறளியாறும் பாய்ந்து இந்நாட்டைச் செழுமைப்படுத்தி வருகின்றன.

பாண்டிய நாட்டின் தலைநகரம் மதுரை. கொற்கை, காயல் என்பன இந்நாட்டின் துறைமுகங்களாக முன்பு இருந்தன. அரேபியர், யவனர், சீனர், கிழக்கிந்தியர் முதலிய வெளிநாட்டவர் தங்கித் தமிழ் நாட்டுடன் வாணிகம் செய்து வந்தனர். முச்சங்கம் நிறுவி, முதுபெரும் புலவர் மணிகளைப் போற்றி,

முத்தமிழ் வளர்த்த பெருமை பாண்டியர்களுக்கு உரித்தாகும். அரசர்களும் கவிபாடும் புலமை பெற்றிருந்தனர். முத்துக்குளித்தலில் பாண்டிய நாடு முதன்மை பெற்றிருந்தது.

பாண்டிய மன்னருள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்கள் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியர், பூதப்பாண்டியர், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியர் என்பவர்கள் ஆவார்கள்.

திருவாரூருக்கு வடக்கே ஏறத்தாழப் பதின் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் உள்ள தலையாலங் காடு என்னுமிடத்தில் சேர சோழரைப் போரில் வென்று சிறப்புப் பெற்றவர் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியர்.

பூதப்பாண்டியர் தமிழ்ப் புலமை பெற்றவர். அவர் தேவியார் கவிபாடும் திறமையுற்றவர். இவ் விருவர்களையும் புறநானூற்றில் காணலாம்.

ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியர் ஊழ்வினை யின் காரணமாக ஆராயாது கோவலனைக் கள்வ னெனக் கொல்வித்து அரியணையிலிருந்தவாறே ஆருயிர் நீத்து வளைந்த கோலைச் செல்லுயிர்கொண்டு நிமிர்த்திய செங்கோலினர் ஆவர்.

**கொங்கு நாடு**

சேலம், கோயம்புத்தூர், நீலகிரி மாவட்டங்கள் அடங்கிய பகுதி கொங்கு நாடெனப்பட்டது. மேற் குத் தொடர்ச்சி மலையும் கிழக்குத் தொடர்ச்சி மலையும் இந்நாட்டில் ஒன்று கூடுகின்றன. சவ்வாது மலை, கொல்லிமலைத் தொடர்கள் இங்கே அமைந்

துள்ளன. கொங்கு என்னும் சொல்லுக்குத் தேன் என்பது பொருளாகும். இங்குத் தேன் மிகுதியாகக் கிடைப்பதால் இது கொங்கு நாடு எனப்பட்டது. கொல்லிமலைத் தொடரை ஆண்டு வந்தவர்கள் மழவர் எனப்பட்டனர். தகடூர்ப் பகுதியை அதியமான் நெடுமானஞ்சியும், முதிரமலைப் பகுதியைக் குமண வள்ளலும் ஆண்டுள்ளனர்.

நடுநாடு

வடவெள்ளாறு முதல் பாலாறு வரையிலும் உள்ள தென்னார்க்காட்டின் பகுதியும், வடார்க்காடு மாவட்டத்தின் பகுதியும் சேர்ந்தது நடுநாடாகும். இந்த நாட்டை ஆண்ட மன்னர்களுக்குத் திருக்கோவலூர் தலைநகரமாய் அமைந்திருந்தது. இங்குப் பெண்ணையாறு பாய்ந்து வளந்தருகிறது. இந் நாட்டை ஆண்டவர்களுள் சிறப்பாகக் கூறத்தக்கவர் மலையமான் திருமுடிக்காரி என்னும் வள்ளல் ஆவார். இக்கொடை மன்னரைப் புலவர்கள் பலர் புகழ்ந்து பாடியுள்ளனர்.

தொண்டை நாடு

தொண்டைமான்கள் என்ற மன்னர்களால் ஆளப்பட்ட நாடு 'தொண்டை நாடு' எனப்பட்டது. திருப்பதி முதல் தெற்கே பாலாறுவரை இது பரவியுள்ளது. இதன் தலைநகரம் காஞ்சிபுரம். இது பல்லவர் காலத்தில் சிறப்புற்று விளங்கியது. பல்லவப் பேரரசர்களில் சிறந்தவர்கள் மகேந்திர வர்மரும், நரசிங்க வர்மரும் ஆவார்கள். நரசிங்க வர்மர் பெயராலேயே 'மாமல்லபுரம்' என வழங்கும் துறை முகப்பட்டினம் அமைக்கப்பட்டது.

'கலங்கள் இயங்கும் கடன் மல்லை'

எனத் திருமங்கை ஆழ்வார் இதனைச் சிறப்பித்துப் பாடியுள்ளார். இத்துறைமுகத்தில் ஏராளமான குதிரைகள் வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி யாயின.

இங்ஙனம் பலவகை வளங்களும் நிறைந்து பாரதப் பண்பாட்டிற்கு வழிகாட்டியாய் விளங்கிய பழந்தமிழ் நாட்டைப் போற்றிக் காப்பாற்ற வேண் டியது நம் எல்லாருடைய கடமையாகும். வெல்க பாரத நாடு! வளர்க நம் தமிழகம்!

## அருஞ்சொற் பொருள்

வரை, அறுத்து-அளவிட்டு. உரு ஆவதற்கு-தோன்று வதற்கு. மலைபடு பொருள்கள்-மலையில் தோன்றும் பொருள் கள். வேழம் - யானை. சுரந்த-பெருகிய. கிட்டியுள்ளன- கிடைத்துள்ளன. வான்-மழை. கமுகு-பாக்கு மரம். அரி அணை-சிங்கமுக இருக்கை. அவை-சபை. வென்று-வெற்றி பெற்று. தேவியார்-அரசியார்; மனைவியார். ஆர் உயிர்- அரிய உயிர். கோல்-செங்கோல்; நீதிநெறி. மழவர்-வீரர். இயங்கும்-செல்லும்.

## வினாக்கள்

1. பாரத நாட்டின் முப்பெரும் பிரிவுகள் யாவை?
2. தமிழ்மொழி பேசப்பட்டு வந்த இடங்களாக ஆராய்ச்சியாளர் கூறும் எல்லை யாது?
3. பழந்தமிழ் நாட்டில் அடங்கியிருந்த பகுதிகள் யாவை?
4. இன்றைய தமிழ் நாட்டின் நிலப்பகுதி யாது?
5. பழந்தமிழ் நாடு எவ்வெவற்றில் தலைசிறந்து இருந்தது?

6. சேர நாட்டின் இயல்புகளைத் தொகுத்தெழுதுக.
7. சேர மன்னர்களுள் சிறந்தவர்கள் யாவர்?
8. சேர வேந்தர்களின் சிறப்பைத் தெரிவிக்கும் நூல் யாது? அதில் கூறப்பட்டுள்ள செய்திகள் யாவை?
9. சோழ நாட்டின் சிறப்புக்களைத் தொகுத்தெழுதுக.
10. சோழ நாட்டின் தலைநகர்கள் யாவை?
11. குறிப்பு எழுதுக: கரிகாற் சோழர், இராசராசர்.
12. சோழர் கால ஆட்சியில் குறிப்பிடத்தக்கவை எவை?
13. சோழர் காலத்திய நூல்கள் யாவை?
14. பாண்டிய நாட்டின் சிறப்புக்களைத் தொகுத்தெழுதுக.
15. பாண்டிய நாடு எதில் முதன்மை பெற்றிருந்தது?
16. பாண்டிய மன்னர்களுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள் யாவர்?
17. கொங்கு நாட்டைப் பற்றி நீவிர் அறிந்தவற்றை எழுதுக.
18. நடுநாட்டைப் பற்றி நீவிர் அறிவன யாவை?
19. காஞ்சிபுரத்தைத் தலைநகராகக் கொண்ட நாடு எது? அதன் சிறப்புக்களை வரைக.
20. பழந்தமிழ் நாடு எதற்கு வழிகாட்டியாய் விளங்கியது?

## 2. மனோன்மணீயம்

திருமகளும் கலைமகளும் திகழும் நம் தமிழகத்தில் முடியுடை மூவேந்தர்கள் முச்சங்கம் வைத்தும் புலவர்களைப் போற்றியும் முத்தமிழை வளர்த்து வந்தனர். பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும், ஐம்பெருங் காப்பியம், ஐஞ்சிறு காப்பியம், பெரிய புராணம், இராமாயணம், பாரதம் முதலிய பல தமிழ் நூல்களும் தமிழுக்கு அணி செய்து உள்ளன. முத்தமிழில் ஒன்றாகிய நாடகத் தமிழ் வளங்குன்றிய காலத்தில் அதனை ஈடு செய்ய எழுந்த நூல், 'மனோன்மணீயம்' என்பதாகும். இஃது ஐந்து அங்கங்களையும், இருபது களங்களையும், 4052 செய்யுள் அடிகளையும் உடைய நூலாகும்.

'மனோன்மணீயம்' ஆசிரியர் சுந்தரம் பிள்ளை என்பவராவர். அவர் மலையாள நாட்டில் வாழ்ந்தவர் என்பதைக் 'கொடுமலையாளக் குடியிருப் புடையேன்' என்று அவரே கூறியிருப்பதால் நன்கு அறியலாம். இவர் எம். ஏ. பட்டம் பெற்றுத் தத்துவப் பேராசிரியராகத் திருவனந்தபுரம் அரசர் கல்லூரியில் பணி புரிந்து வந்தார்; தமிழ் மொழிப் பற்றும் ஆழ்ந்த மொழிப் புலமையும் அமையப் பெற்றிருந்தார்; தமிழும் சைவமும் தழைத்தினிதோங்க அரும்பாடு பட்டார்; தமிழ் இலக்கிய நூல்களாகிய திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை, மதுரைக் காஞ்சி ஆகிய மூன்று நூல்களையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார். அவர் தமிழுக்கு அளித்த கற்பனை

இலக்கியமே 'மனோன்மணீயம்' என்னும் நாடகத் தமிழ் நூலாகும். அதன் கதையை ஈண்டுக்காண்போம்:

பாண்டிய நாட்டின் தலைநகரான மதுரைமா நகரி லிருந்து சீவகன் என்னும் அரசன் ஆட்சி புரிந்தான். மன்னன் கள்ளமில்லா உள்ளம் உடையவன். சீவக னுக்குக் குடிலன் என்னும் அமைச்சன் ஒருவன் இருந் தான். குடிலன் நயவஞ்சகன்; சூழ்ச்சிக்காரன்; தன்னலம் ஒன்றையே கருதுபவன். அவன் நல்ல வனைப் போல நடித்து மன்னனைத் தன்வயப்படுத்திக் கொண்டான். மன்னன் மதுரையைத் தலைநகராகக் கொண்டிருந்தது குடிலன் தன் செல்வத்தையும் செல் வாக்கையும் பெருக்கிக் கொள்வதற்குப் பெருந் தடை யாக இருந்தது. அதனால் அவன் திருநெல்வேலியே தலைநகரமாக இருப்பதற்கு ஏற்ற இடமாகும் என்று தந்திரமாக மன்னனுக்குக் கூறினான்; அவ்வாறே திருநெல்வேலியில் கோட்டை கொத்தளங்களை அமைத்தான். மன்னன் மகிழ்ச்சியாக இருப்பதற்கு ஏற்ற அரண்மனையை அழகுற அமைத்துக் கொடுத் தான். அரசன் குடிலனை முழுமையாக நம்பி ஆட்சிப் பொறுப்பு அனைத்தையும் அவனிடம் ஒப்படைத் திருந்தான்.

சீவக வழுதியின் குலகுரு சுந்தரமுனிவர் ஆவர். அவர் குடிலனின் சூழ்ச்சியை நன்கு அறிந்தவர். மன்ன னுக்கு உற்றுழியுதவும் நற்றுணையாக இருக்க எண்ணிச் சுந்தரமுனிவர் திருநெல்வேலிக்குப் பக்கத்தில் ஓரிருக்கைஅமைத்துக்கொண்டுஅங்கேதங்கியிருந்தார்.

சுந்தரமுனிவர் திருநெல்வேலிக்கு அருகில் எழுந் தருளி இருப்பதைச் சீவகன் அறிந்தான். முனிவரை

மன்னன் தன் அவைக்கு அழைப்பித்தான். புதிதாகக் கட்டப்பட்ட கோட்டை, அரண்மனே முதலியவற்றை முனிவர்க்குக் காட்டினன். தொண்டைமான் படைக் கலங்களைப் பார்வையிட்ட ஒளவையாரைப் போலச் சீவகன் காட்டிய கோட்டையைப் பார்த்து முனிவர் யாதொரு வியப்பும் அடைந்திலர். அப்பொழுது முனிவர் மன்னனின் வெள்ளை யுள்ளத்தையும் மந்திரி யின் நயவஞ்சகச் செயலேயும் எண்ணிக் கொண் டிருந்தார். மன்னன் தன்னுள் மகிழ்ந்திருந்தான். அரசனது அறியாமையை அறிந்த முனிவர் அவன் குடும்பத்திற்கும் கோட்டைக்கும் நன்மை யுண்டா கும்படியாகச் சில கிரியைகள் செய்யவேண்டுமென்று கூறி, அவ்வரண்மனையில் ஓர் அறையைத் தமக்கெனக் கேட்டுப் பெற்றுக்கொண்டார். அதன் பிறகு அவர் தங்கியிருந்த இடத்திற்குச் சென்முர்.

சீவகனுக்கு மனேன்மணி என்னும் மகள் ஒருத்தியே இருந்தாள். அவள் தாயற்றவளாக இருந்தமையால் மன்னன் தாயாகவும் தந்தையாக வும் இருந்து மனேன்மணியைக் கண்ணின் மணி யெனக் காத்துவந்தான். மனேன்மணி நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்தாள். அழகிலும், நற்குண நற்செயல்களிலும் சிறந்து விளங்கினள். அவளுக்கு வாணி என்ருெரு நற்ருேழி இருந்தாள். வாணி தன் பெயருக்கேற்ப அறிவும் நல்லொழுக்கமும் நிறைந்திருந்தாள்.

வாணி, நடராசன் என்னும் நல்லவனைத் தன் வாழ்க்கைத் துணைவனுகத் தேர்ந்தெடுத்தாள். வாணியின் தந்தை சகடன் என்பவன் பொருளாசை

பிடித்தவன். தன் மகளைக் குடிலன் மகன் பலதேவ னுக்கு மணமுடித்துவிட்டால் பெருஞ் செல்வமும் மதிப்பும் ஏற்படுமென்று மனக்கோட்டை கட்டினன்; மன்னனிடத்தில் இதனைக் கூறி, அவன் இசைவையும் பெற்ருன்; திருமணம் நடத்தவும் முற்பட்டான். தந்தையின் முடிவையறிந்த வாணி மிகவும் வருந்தி ஞள். மனேன்மணி அவள் வருத்தத்தை ஒருவாறு ஆற்றிவந்தாள்.

ஒரு நாள் இரவு மனேன்மணி கனவு ஒன்று கண்டாள். அக் கனவில் முன்வினைப் பயனுல் பேரழ குடைய அரசிளங் குமரனைக் கண்டு பேரன்பு கொண் டாள். கனவு ஏற்பட்ட நாளிலிருந்து மனேன்மணி படிப்படியாக இளைத்து வந்தாள். மன்னன் மனேன் மணியின் உடல் வாட்டங் கண்டான்; மனவாட்டங் கொண்டான்; சுந்தரமுனிவரிடங் கூறினுன். முனிவர், 'மனேன்மணிக்கு மணவினை நிகழ்த்த வேண்டும்' என்ருர். மேலும் மனேன்மணிக்கு ஏற்ற கணவன் சேரநாட்டரசன் புருடோத்தமனே யென்றும், மண வினையை இனிது நிறைவேற்றவல்லவன் நடராசனே யென்றும் அவர் அறிவுறுத்தினுர். வாணியின் தந்தை யாகிய சகடன் நடராசன்மேல் கோள்மொழிகளைக் கூறியிருந்தமையால் நடராசன்மீது நல்லெண்ணங் கொள்ளாமல் மன்னன் குருமொழி கொள்ளாச் சீட ஞகிக் குடிகெடுக்கும் குடிலனேடு ஆராய்ந்தான்.

சேரமன்னனுக்கும் மனேன்மணிக்கும் திருமணம் நிறைவேறினுல் தன் எண்ணம் ஈடேருமல் போய் விடும் என்பதைக் குடிலன் நினைத்தான். அதனுல் அத்திருமணம் நிறைவேருமல் செய்வதுடன் மனேன்

மணியை அவன் மகன் பலதேவனுக்கு மணமுடித்து விட்டால் அரச செல்வம் தனக்குச் சேர்ந்து விடும் என்னும் பேராசையுங் கொண்டான். தன் கருத்தை நிறைவேற்றுவதற்கு நடராசனைத் தூது விடுக்காமல் பலதேவனை அனுப்ப ஏற்பாடு செய்தான்.

மனோன்மணி கனுக் கண்டது போலவே சேர வேந்தன் புருடோத்தமன் தொடர்ச்சியாகத் தன் கனவில் ஒரு காரிகையைக் கண்டான்; அவள் யார் என்றறியாமல் மனம் அழுங்கினான். மனக் கலக்கம் நீங்கப் போர்மேற் செல்லுதலை அவாவினான். அவ் வேளையில் பலதேவன் வந்தான்; சேரனை இழித்தும் பழித்தும் பேசினான். சேரன் சினங் கொண்டான். பாண்டிய நாட்டின்மேல் படையெடுத்தான். சீவக வழுதியும் தன் படையுடன் சேரர் படையை எதிர்த் துப் போரிட்டான்; பாண்டியனுடைய படை வீரர் களுக்குள் குழப்பம் ஏற்பட்டது. பலதேவன் ஒரு வீரனால் தாக்கப்பட்டான். படை சிதறியதால் பாண்டியன் தப்புவதே அரிதாயிற்று. அவ்வேளையில் கோட்டைக் காவலிலிருந்த நாராயணன் ஒரு குதிரை மீது விரைந்து வந்து மன்னனைக் காப்பாற்றிக் கோட் டைக்குள் கொண்டு வந்தான்.

சீவகன் தனக்கு நேர்ந்த மானக்கேட்டினால் மனம் புழுங்கினான். நாராயணன் மன்னனை ஒரு வாறு தேற்றினான். அவ்வேளையில் சேரன் விடுத்த தூதுவன் ஒருவன் வந்தான். போரில் தோற்றதற்கு அறிகுறியாக ஒருகுடம் தாமிரவருணி நீரும், ஒரு வேப்பந்தாரும் தந்தால்போரை நிறுத்துவதாகவும், இன்றேல் மறுநாள் போர்புரிந்து கோட்டை முதலிய

வற்றை அழித்துவிடுவதாகவும் தன் அரசன் கூறிய வாறு அறிவித்தான். சீவகன் அதற்கு உடன்பட வில்லை. போருக்கு ஆயத்தமானுன். அவனது கோட்டை ஒருநாள் முற்றுகைக்கும் தாங்காத நிலையி லிருப்பதைக் கண்டான். அதன் அழிவுக்குரிய காரணம் யாதெனக் குடிலனை வினவினுன். அவ் வேளையில் அமைச்சன் தன் எண்ணம் ஈடேறுதபடி மன்னனைக் காப்பாற்றிய நாராயணனைப் பழிவாங்க நினைத்தான். கோட்டைக் காவலிலிருந்த நாரா யணன் அரச கட்டளையை மீறிப் போர்க்களம் புகுந்ததே குழப்பத்திற்கும் கோட்டை அழிவுக்கும் காரணம் எனப் பொய்க் கதை சொல்லி மன்னனை நம்பவைத்தான். ஆராயும் அறிவற்ற அரசன் அமைச்சன் மொழிந்ததை அப்படியே நம்பி நாரா யணனைக் கழுவேற்றுமாறு கட்டளையிட்டான். அவ் வேளையில் சுந்தரமுனிவர் அழைக்கப்பட்டமையால் நாராயணன் உயிர்தப்பினுன்.

சுந்தர முனிவர் அரண்மனையில் தாம் பெற் றிருந்த அறையிலிருந்து தமது ஆசிரமம் வரையில் சுருங்கை ஒன்றை அமைத்திருந்தார். அவர் அதனைக் கூறி மன்னனையும் மகளையும் அவ்வழியே தப்பி வருமாறு கூறினுர். ஆனுல், மன்னன் தன்னிலையில் தாழாமையும் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் ஆகிய மானமே பெரிதென மதித்தான். அன்று நள் ளிரவில் அவருடன் மனோன்மணியை மட்டும் அனுப்பி வைக்க உடன்பட்டான்.

முனிவர் சென்றதும் அரசன் தன் முடிவை அமைச்சரிடம் கூறினுன். குடிலன் மணமுடிக்காமல்

மனோன்மணியை அனுப்பிவைப்பது பழிப்புக்கு இட மாகுமெனக் கூறினன். இறுதியாகக் குடிலனின் அறிவுரைப்படி மனோன்மணியைப் பலதேவனுக்கு மணமுடித்து இருவரையும் முனிவர் உரைத்த சுருங்கை வழியே அனுப்பி வைக்க முடிவு செய்தான். மன்னன் தான் செய்த முடிவை மனோன்மணியிடம் கூறினன். அச்சொல் அவள் காதில் காய்ச்சின வேலைப் பாய்ச்சியது போல் இருந்தது. எனினும், தன் தந்தைக்கு நேர்ந்த இடையூற்றை எண்ணினள்; கால நிலைக்கேற்ப நடந்து தந்தையை மகிழ்விப்பதே தன் தலையாய கடமை என உணர்ந்தாள்; தந்தை சொல்லுக்கு உடன்பட்டாள்; மன்னன் மகிழ்ந்தான். அப்பொழுது மனோன்மணி தந்தையை வணங்கி வாணி நடராசனை மணக்கவும், நாராயணன் கழு வேற்றப் படாமலிருக்கவும் வரம் கேட்டாள். அரசன் அவள் விருப்பத்தை நிறைவேற்றினன். மணவினைக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் உடனடியாகக் கவனித் தான். இதனையறிந்த நடராசனும் சுந்தர முனிவரும் பெருவியப்புற்றனர். இறுதியாகச் சுந்தர முனிவர் மணச்சடங்கியற்றினர். மணவறை சுந்தர முனிவர் அறைக்குப் பக்கத்திலேயே இருந்தது. குடில னைத் தவிர ஏனைய யாவரும் மணவிழா நிகழ்ச்சியில் குழுமியிருந்தனர். இந்த வேளையிலும் அமைச்சன் நாட்டைக் காக்கும் பொருட்டு நாளைய போருக்கு வேண்டிய ஆயத்த வேலையில் ஈடுபட்டு உழைப்பதாக மன்னன் எண்ணி வியந்தான்; மகிழ்ந்தான்.

வஞ்சகக் குடிலன் முனிவர் கூறிய சுருங்கை வழி யைக் காண விழைந்தான்; அவர் அறைக்குள் நுழைந்

தான். அதன் வழியாகவே நடந்தான்; சேரன் தங்கியிருந்த பாசறைக்குப் பக்கமான ஓரிடத்தை அடைந்தான். சுருங்கையின் வழியே சேரமன்னனை அழைத்துச் சென்று பாண்டியனைச் சிறைப் பிடித்துக் கொடுத்து விட்டால் பிறகு சேரன் தன்னையே அரசனாக்கக் கூடுமெனத் தப்புக் கணக்குப் போட்டான். குடிலன் துணிந்து சேரனிடம் சென்றான்; தன்னைத் தானே அறிமுகப்படுத்திக் கொண்டான். தன் திட்டத்தைச் சேரனிடம் வெளியிட்டான்; சேரன் காவலரை அழைத்தான்; குடிலன் காலிலும் கைகளிலும் தளை பூட்டுமாறு ஆணையிட்டான்; பிறகு குடிலனை நோக்கி, "வஞ்சியான் எவரையும் வஞ்சியான்; அவனுக்கு விருப்பு வெற்றி மட்டுமன்று; உன்னைப் போன்ற அரசத் துரோகிகளைக் கண்டுபிடித்துப் பகையரசரைக் காப்பதும் குறிக்கோள்" என்று கூறினான். சுருங்கை வழியே நடக்குமாறு பணித்தான். குடிலன், விதிவழியே மதி சென்றது எனக் கவன்றான்; அரசன் ஆணைப்படியே வழிகாட்டி நடந்தான். அவ்வழியே சுந்தர முனிவர் அறைக்கு அனைவரும் சென்றனர். அதன் பக்கத்திலே பலதேவன் மணவறையில் வீற்றிருந்தான். மனோன்மணி மாலையுங் கையுமாகக் கண்ணில் நீர் மல்க மெல்ல அடிமேல் அடிவைத்து நடந்து வந்துகொண்டிருந்தாள்.

சுருங்கை வழி வந்த சேரன் புருடோத்தமன் தான் தன் கனவிற் கண்ட காரிகையைக் கண்ணெதிரே கண்டான்; அவள் முன்னே சென்று நின்றான். மங்கை மனோன்மணியும் தன் கனவிற் கண்ட அரசன் எதிரே நிற்பதைக் கண்டு அவன் கழுத்

தில் மாலையைச் சூட்டிப் பரவசமடைந்து உணர் விழந்து, அவன் தோள்மேல் சாய்ந்து மூர்ச்சித்தாள்.

நள்ளிரவில் அயலான் உட்புகுந்ததையும் அறி முகமில்லா அவனுக்கு மனோன்மணி மாலை சூட்டித் தன்னுணர்வற்றதையும் கண்டிருந்த சீவக வழுதி துணுக்குற்றான்; உள்ளங் கொதித்தான்; போருக் கெழுந்தான். சுந்தர முனிவர் கையமர்த்திச் சமாதானப் படுத்தினர். சேரவேந்தன் புருடோத் தமன், குடிலன் தன்னிடம் வந்து உரைத்த சூழ்ச்சி உரைகளையும் அதற்குத் தான் உடன்படாது அவனைத் தளையிட்டுச் சீவகனிடம் ஒப்படைக்க உடன்கொண்டு வந்ததையுங் கூறி, குடிலனை அவர்முன் நிறுத்தினன். புருடோத்தமனது அருங்குணத்தையும் பெருஞ் செய லையும் அறிந்து அனைவரும் பாராட்டினர். குடில னின் சூழ்ச்சியை மன்னன் அப்பொழுதுதான் அறிந்தான்.

''மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில்''

என்னும் பொய்யா மொழிக்குக் குடிலன் எடுத்துக் காட்டானான். சீவகன் முனிவர் ஆணைக்கிணங்க மண மக்களை வாழ்த்தினன். எல்லாரும் இன்பக் கடலில் மூழ்கித் திளைத்தனர்.

### அருஞ்சொற் பொருள்

திருமகள்-இலக்குமி. கலைமகள்-சரசுவதி. முடி-கிரீடம். ஈண்டு-இங்கு. படைக்கலம் - போர்க் கருவிகள். கிரியை-சடங்கு; காரியம். இசைவு-சம்மதம். வாட்டம் - தளர்வு; சோர்வு. சீடன்-மாணவன். காரிகை-பெண். அழுங்கினன்-வருந்தினன். அவாவினன் - விரும்பினன். தார் - மாலை.

ஆசிரமம்-தவசிகள் வசிக்கும் சிறு குடில். இடையூறு-துன்பம். குழுமி-கூடி. பாசறை-படைவீடு. தளை-விலங்கு. வஞ்சியான்-வஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரியும் சேர நாட்டரசன் புருடோத்தமன். வஞ்சியான்-வஞ்சிக்க மாட்டான். குறிக்கோள்-கொள்கை; இலட்சியம். மதி-அறிவு. கயவர்-கீழ்மக்கள். பொய்யாமொழி-திருக்குறள்.

### வினாக்கள்

1. தமிழுக்கு அணி செய்து விளங்கிய தமிழ் நூல்கள் யாவை?
2. 'மனோன்மணீய'த்தை இயற்றியவர் யார்? அவரைப் பற்றி நீவிர் அறிந்தவற்றை எழுதுக.
3. திருநெல்வேலியில் குடிலன் கோட்டை அமைக்கக் காரணமென்ன?
4. சீவக வழுதியின் குலகுரு யார்?
5. இடஞ்சுட்டி விளக்குக:
   (1) 'வஞ்சியான் வஞ்சியான்.'
   (2) 'தொண்டைமான் படைக்கலங்களைப் பார்வையிட்ட ஔவையாரைப் போல.'
6. சுந்தரமுனிவர் அரண்மனையில் அறை பெற்றுக் கொள்ளக் காரணம் என்ன?
7. சகடன் தன் மகள் வாணிக்கு யாரைக் கணவனாகத் தேர்ந்தெடுத்தாள்? ஏன்?
8. மனோன்மணியின் மெலிவைக் கண்ட சுந்தர முனிவர் சீவகனுக்கு அறிவுறுத்தியது யாது?
9. குடிலன் பலதேவனைத் தூது அனுப்பக் காரணமென்ன?
10. போர்க்களத்தில் சீவகனைக் காப்பாற்றியவன் யாவன்?
11. சேர நாட்டுத் தூதுவன் சீவகனிடம் கூறியதென்ன?

12. குடிலன் சீவகனிடம் கூறிய பொய்க் கதையினை வரைக.
13. மனோன்மணி திருமணம் குறித்து மன்னன் செய்த முடிவு யாது?
14. எச்சொல் யார்க்குக் காய்ச்சின வேலைப் பாய்ச்சியது போல் இருந்தது?
15. சீவகனிடம் மனோன்மணி வேண்டிய வரம் யாது?
16. குடிலன் செய்த வஞ்சகச் செயல் யாது?
17. குடிலனிடம் புருடோத்தமன் யாது கூறினன்?
18. புருடோத்தமனை அனைவரும் பாராட்டக் காரண மென்ன?
19. குடிலன் எக்குறளுக்கு இலக்கானன்?
20. 'மனோன்மணீய'த்தின் கதையினைச் சுருக்கிப் பதினைந்து வரிகளில் எழுதுக.

## 3. புரட்சிக் கவிஞர்

'கவிஞர்கள் ஆக்கப்படுபவர் அல்லர். அவர்கள் இயற்கையாகவே பிறக்கின்றனர்' என்று அறிஞர்கள் கூறியுள்ளனர். காலத்திற்கேற்ற நல்ல கருத்துக் களைத் தம் பாடல்களில் அமைத்துக் கண்ணுடிபோலக் காட்டவல்லவர்கள் கவிஞர்கள். அவ்வக் காலங் களிலே நாட்டில் நடக்கும் நிகழ்ச்சிகள்தாம் அவர்கள் கவிகளில் இடம் பெறும்; என்ருலும், மக்கள் வாழ்க் கையில் ஏற்படும் குறைகளையும், அறியாமைக் கருத் துக்களையும் மூட நம்பிக்கைகளையும், அச்சமின்றி எடுத்துக் கூறித் திருத்த முற்படுபவர் ஒரு சிலராகவே உள்ளனர். அவர்களுள் சிறந்த ஒருவரே புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் ஆவர்.

இவ்விருபதாம் நூற்ருண்டின் இணையற்ற கவிஞர் களாகக் குறிப்பிடத் தக்கவர்கள் நால்வர் ஆவார்கள். அவர்கள் தேசிய கவி சுப்பிரமணிய பாரதியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர் வே. இராமலிங்கம் பிள்ளை என்பவர்களே.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் புதுச்சேரியில் பெருவணிகராய் வாழ்ந்த கனகசபை அவர்கட்கு மைந்தராய் 1891ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 17ஆம் நாள் பிறந்தார். இவருக்குப் பெற்ரேர்கள் இட்ட பெயர் சுப்புரத்தினம் என்பதாகும். தந்தை யாரது பெயரின் ஒரு பகுதியும் சேர, இவர் கனக

சுப்புரத்தினம் என்று அழைக்கப்பட்டார். இவர் சுப்பிரமணிய பாரதியாரின் கவித்திறனைக் கண்டு அவர் மீது அளவிலாப் பற்றுக் கொண்டார். அவரிடம் தமக்குள்ள அன்பின் அறிகுறியாகப் 'பாரதி தாசன்' என்று பெயர் அமைத்துக் கொண்டார். அப் பெயரே அவருக்கு நிலைத்துவிட்டது.

புதுச்சேரியை அக்காலத்தில் பிரெஞ்சுக்காரர் கைப்பற்றி ஆண்டு வந்தனர். பிரெஞ்சு மொழியையே ஆட்சிமொழி யாக்கினர். பிரெஞ்சுமொழி கற்பிக்கும் பள்ளிகளே அங்கு மிகுதியாக இருந்தன. அதனால் நம் கவிஞர் இளமையில் பிரெஞ்சு மொழியைக் கற்றார். பிறகு தமிழ்ப் புலவர்களை அடுத்துத் தமிழ்க் கல்வியைப் பயின்றார். பங்காரு பத்தர் என்பவரிடம் தமிழ் இலக்கியங்களைப் பாடங் கேட்டார். இளமையில் இவரிடம் தமிழ் ஆர்வம் மிகுந்திருந்தது. இவர் இளமையிலேயே சிறு சிறு பாடல்கள் இயற்றித் தமது நண்பர்களிடம் படித்துக் காட்டி மகிழ்வார்.

பாரதிதாசன் நாட்டுடு பள்ளியில் பத்து ஆண்டுகள் கல்வி கற்றார். அப்பள்ளியின் ஆசிரியர் திருப்புளிசாமி ஐயா என்பவராவார். பாரதிதாசன் பள்ளியில் படிக்கும்பொழுதே திருக்குறள், நிகண்டு, சதகம், அந்தாதி முதலிய தமிழ் நூல்களைப் பாடஞ் செய்து ஒப்பித்து வந்தார். நாட்டுப் பள்ளியில் படித்த பிறகு புதுவைத் தமிழாசிரியர் பள்ளியில் மூன்று ஆண்டுகள் தமிழ் பயின்றார். இப்பள்ளியில் படித்த நாற்பது மாணவர்களில் நம் கவிஞரே முதன்மையாகத் தேர்ச்சி பெற்றார். இவர் தமது பதினெட்டாவது வயதில் காரைக்காலுக்குப் பக்கத்திலுள்ள

'நிரவி' என்ற ஊரில் அமைந்த அரசாங்கப் பள்ளிக்குத் தமிழாசிரியராகச் சென்றார். இவர் பிள்ளைகளுக்கு நல்ல முறையில் தமிழைக் கற்பித்தார். மாணவர்களைத் தமது சொல் ஆற்றலாலும் கவிதைச் சிறப்பாலும் மகிழவைத்தார். அவர்கள் தேன்மலரை மொய்க்கும் வண்டுகள்போல் இவரைச் சூழ்ந்து கொண்டனர். பிறகு இவர் புதுவை கல்வே கல்லூரியில் தமிழ் ஆசிரியராகப் பணி புரிந்து வந்தார்.

சென்னையில் செய்தித்தாள் ஆசிரியராக இருந்து இந்திய விடுதலைக்கான எழுச்சிப் பாடல்கள் பல பாடி, அவற்றை வெளியிட்டு வந்த சுப்பிரமணிய பாரதியார் ஆங்கில ஆட்சியின் கொடுமைக்கு ஆற்றாது புதுவைக்குச் சென்று குடியேறினார். அங்குப் பத்தாண்டுகள் அவர் வாழ நேரிட்டது. அப்பொழுது கனக சுப்புரத்தினம் பாரதியாரிடம் நெருங்கிப் பழகும் வாய்ப்புப் பெற்றார். இவர் தம் பாக்களாலும், சீர்திருத்தக் கொள்கைகளாலும் பாரதியார் உள்ளத்தைக் கொள்ளை கொண்டார். அப்பொழுது பாதியாரைப் போலவே இவரும் பக்திப் பாடல்களையும், விடுதலைப் பாடல்களையும், சமூக சீர்திருத்தப் பாடல்களையும் பாடிவந்தார்.

பாரதியார் 1921ஆம் ஆண்டு இயற்கை எய்தினார். அதன் பிறகு பாரதிதாசன் பாரதியார் கவிதைகளைப் போலவே எளிய இனிய முறையில் பாடல்கள் இயற்றினார். இவர் முதன் முதல் இயற்றிய பாடல் 'சுப்பிரமணியர் துதியமுது' என்பதாகும். அதன் பிறகு தீண்டாமை, சாதிவேறுபாடு, பெண்ணடிமை, இளமை மணம், கல்வியின்மை, மூடநம்பிக்கை, உலக

ஒற்றுமை முதலிய பொருள் பற்றிப் பாடினர். பாரதியார் நாட்டு விடுதலைக்குப் பாடியதுபோலவே, பாரதிதாசன் சமுதாய சீர்திருத்தப் பாடல்களைப் பாடி மக்கள் மனத்தில் நீங்கா இடம் பெற்றார்.

இவருடைய பாடல்களைத் தொகுத்துப் 'பாரதி தாசன் கவிதைகள்' என்ற தலைப்பில் நூலாக வெளி யிட்டனர். பின்னர், அழகின் சிரிப்பு, தமிழ் இயக்கம், பாண்டியன் பரிசு, இருண்ட வீடு, குடும்ப விளக்கு, இசையமுது, முல்லைக்காடு, இளைஞர் இலக்கியம் முதலிய செய்யுள் நூல்கள் பல செய்துள்ளார்.

கவிஞர், நாட்டிலுள்ள குறைகளை எவர்க்கும் அஞ்சாமல் எடுத்துக் கூறித் திருத்த முற்பட்டார். 'தேச சேவகன்,' 'ஆத்ம சக்தி,' 'புதுவை முரசு,' 'கவிதா மண்டலம்,' 'குயில்' என்னும் பத்திரிகைகள் இவரால் நடத்தப்பட்டன.

பாரதிதாசன் தாகூரைப் போன்று நடிப்பதிலும் சிறந்து விளங்கினர். நல்ல இசையோடு பாடும் வன்மையும் இவருக்கு இருந்தது. பொன்முடி, படித்த பெண்கள், சேர தாண்டவம் என்னும் நாடகங்களையும் இவர் இயற்றியுள்ளார். 'பொன் முடி' என்ற படக்காட்சி ஒன்றும் வெளிவந்துள்ளது. 'அமைதி' என்னும் ஊமை நாடக நூல் ஒன்றும் இவரால் இயற்றப் பெற்றுள்ளது.

இவருடைய பாடல்கள் எளிமையாகச் சிறுவர் களும் படித்துப் பொருள் உணரும்படியாக அமைந் திருக்கும். அவற்றைப் படித்தால் கோழையும் வீரனவான். பகுத்தறிவுக்குப் பொருத்தமான கருத் துக்களையே இவரது பாடல்களில் காண முடியும்.

யாராவது ஏதேனும் எண்ணிக்கொள்வார்களோ என்ற அச்சம் இவருக்குக் கிடையாது. தம் மனத்திற்கு உண்மை என்று தோன்றுகின்ற எந்தக் கருத்தையும் துணிவாகக் கூறும் தன்மை இவரிடம் இருந்ததால் இவருக்குப் 'புரட்சிக் கவிஞர்' என்ற பெயர் உண்டாயிற்று. இவரது பாடல்களில் ஒன்றுக்குப் 'புரட்சிக் கவி' என்ற பெயரும் உண்டு.

பாரதிதாசன் தனியே இருந்து எதனையும் நன்கு சிந்தித்துத் தங் கருத்தை வெல்லுஞ் சொல் இன்மையறிந்து வெளியிடுவார். தமிழ் ஆசிரியராகப் பணி புரிந்து ஓய்வு பெற்ற பிறகு சென்னையில் சிறிது காலம் தங்கி வாழ்ந்தார். இவருடைய மனைவியார் பழனி அம்மாள் என்பராவர். இவர்கட்கு மன்னர்மன்னன் என்னும் ஒரே மகனும், சரசுவதி, வசந்தி, இரமணி என்னும் மூன்று பெண்களும் உள்ளனர்.

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் 21—4—'64 செவ்வாய்க்கிழமை காலை 8-30 மணியளவில் சென்னை அரசினர் பொது மருத்துவமனையில் இருதய நோய்க்கு இரையானார். இவருடைய உடலைப் புதுவைக்கு எடுத்துச் சென்று அங்கு அடக்கம் செய்தனர். பாவேந்தர் பாரதிதாசனாரின் தமிழ்த் தொண்டும் சமூக சேவையும் என்றும் தமிழர் உள்ளங்களில் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.

அருஞ்சொற் பொருள்

இணை-நட்பு. மைந்தர்-மகன். இயற்கை எய்தினார்-மறைந்தார். அமுது - அமுதம். சமுதாயம்-மக்கள் கூட்டம். இரை-உணவு. புதுவை-புதுச்சேரி; மரூஉ.

## வினாக்கள்

1. கவிஞர்கள் குறித்து அறிஞர்கள் கூறியுள்ள கருத்து யாது?
2. பாரதிதாசனார் எத்தகையோருள் ஒருவரானவர்?
3. இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞர்கள் யாவர்?
4. பாரதிதாசன் எப்போது, யாருக்கு மகனாகப் பிறந்தார்?
5. சுப்புரத்தினம், 'பாரதிதாசன்' என்னும் பெயரை அமைத்துக் கொண்டமைக்குக் காரணமென்ன?
6. பாரதிதாசனின் பள்ளிப் படிப்பைக் குறித்து எழுதுக.
7. பாரதிதாசன் மாணவர்களை எவ்வாறு மகிழ வைத்தார்?
8. பாரதிதாசனின் ஆசிரியப் பணி பற்றி எழுதுக.
9. பாரதியார்க்கும் பாரதிதாசனுக்கும் உள்ள தொடர்பை விளக்குக.
10. பாரதிதாசன் முதன் முதலில் இயற்றிய நூல் யாது?
11. பாரதிதாசன் இயற்றியுள்ள நூல்கள் யாவை?
12. பாரதிதாசனால் நடத்தப்பெற்ற பத்திரிகைகள் யாவை?
13. பாரதிதாசனுக்குப் 'புரட்சிக் கவிஞர்' என்னும் சிறப்புப் பெயர் உண்டாகக் காரணம் என்ன?
14. பாரதிதாசன் குடும்பங் குறித்து நீவிர் அறிந்தவற்றை எழுதுக.
15. பாரதிதாசன் எங்கு, எப்போது உயிர் நீத்தார்?

## 4. புரட்சிக் கவிஞர்

தாசனும் பார திக்குப்
பாரதி தாச னன்னேன்
ஆசையோ தமிழில் வற்று
அன்பெலாந் தமிழர் வாழ்வில்
மீசையோ விழியின் நோக்கோ
வீரனைக் கோழை யாக்கும்
ஏசலும் புகழும் பாரான்
உண்மையை இயம்பும் மேலோன். 1

புதுப்புதுப் பாட லுவமை
நயமோ புதுவிருந்து
முதுபெரு மான்றோர் வியக்கக்
கருத்துப் புரட்சி மூட்டி
எதற்கும் கலங்கா தெழுதும்
புரட்சிக் கவியரசைப்
புதுவை யுலகிற் களித்துப்
புகழ்நிலை நாட்டியதே. 2

முற்றி முதிர்ந்த புலமைத்
தெளிவை விழிவிளக்கும்
சுற்றம் பகையெனப் பாரார்
நடுநிலைச் சொல்விளக்கும்
பற்றோ தனித்தமிழ் நாடு
மினமும் செயல்விளக்கும்
வெற்றி வலம்வரு மாசான்
கவிக்கடல் வாழியவே! 3

—வித்துவான் வாணிதாசன்.

### அருஞ்சொற் பொருள்

1. வற்ரு-குறையாத. கோழை-மனவலிமை யில்லாத வன். ஏசல்-திட்டுதல். இயம்பும்-கூறும்.

2. கலங்காது-அஞ்சாது. அளித்து-கொடுத்து.

3. முற்றி முதிர்ந்த - பழுத்த. புலமை - அறிவு. தெளிவை-உள்ளக் குறிப்பை. பற்று-ஆசை.

### விஞக்கள்

1. பாரதிதாசனின் ஆசை, அன்பு, நோக்கு ஆகியவை யாவை?
2. புரட்சிக் கவியரசைப் புதுவை யுலகிற்கு அளித்துப் புகழ்நிலை நாட்டியது எவ்வாறு?
3. கவியரசரின் விழி, சொல்; பற்று, செயல் ஆகிய வற்றை எவற்ருல் அறியலாம்?

## 5. தங்க மோதிரம்

பூங்குன்றம் என்னும் ஊரில் குடியானவன் ஒருவன் வாழ்ந்து வந்தான். அவன் பெயர் பொன்னன். பொன்னனுக்குத் தங்கம் என்ருெரு மனைவி இருந்தாள். பொன்னனும் தங்கமும் வயல் வேலை செய்து வாழ்ந்து வந்தனர். அவர்களுக்குச் செல்வி என்ருெரு பெண்ணும் செந்தில் என்ருெரு மகனும் இருந்தனர்.

பொன்னன் பொன்போன்ற உள்ளம் உடையவன். ஏழை எளியவர்களிடத்தில் என்றும் இரக்கம் உடையவனாக இருந்தான். அவ்வாறே விலங்கு, பறவை முதலிய உயிரினங்களிடத்தும் அன்பு செலுத்தும் பண்புடையவனாக இருந்தான். அவன் மனைவியும் மக்களும் அவனைப்போலவே ஈவிரக்கம் கொண்டவர்களாகவே இருந்தனர். எந்த உயிர்க்கும் எவ்வகைத் துன்பமும் எஞ்ஞான்றும் இழைக்காமல் தம் உயிர் போலவே மன்னுயிர் போற்றி வாழ்ந்தனர்.

பொன்னனுக்கு வயது ஐம்பதிருக்கும். அவன் எவர்க்கும் கைகட்டி வாழாமல் உழைத்துப் பயிர் செய்து சுதந்தரமாக வாழ்ந்து வந்தான். தன் மகளையும் மகனையும் உயர்கல்வி கற்க வைத்தான். நாள் தோறும் விடியுமுன் எழுந்து வயலுக்குச் செல்வது அவன் வழக்கம்.

ஒருநாள் காலையில் பொன்னன் வழக்கம்போல் வயலுக்குச் சென்ருன். உழுது பயிர் செய்த வயலில்

தோன்றிய களையைப் பறித்து எறிந்தான். வேண்டிய அளவு நீரைத் தேக்கினன். மேலும் ஒருமுறை வயலினைச் சுற்றிப் பார்த்துவிட்டு வீட்டுக்கு வந்தான். தான் போட்டிருந்த பெரிய சட்டையைக் கழற்றினன். குடிசையின் ஒரு மூலையில் மாட்டி வைத்தான் இளவேனிலும் முதுவேனிலும் சென்றன; முன்பனிக் காலமும் பின்பனிக் காலமும் கழிந்தன; கார்காலமும் குளிர்காலமும் வரத் தொடங்கின.

ஒருநாள் வானம் இருண்டது; காற்று விசையுடன் வீசிற்று; மேகங்கள் மத்தளம்போல் முழங்கின. மின்னல் கண்ணைப் பறித்தது. பற்கள் பறை கொட்டும் அளவுக்குக் குளிர் உண்டாயிற்று. மழை 'சோ' வெனப் பெய்தது. குளிர் பொறுக்காமல் பொன்னன் அன்றொருநாள் மாட்டி வைத்த சட்டையை எடுக்கச் சென்றான்.

பொன்னன் சட்டையை மாட்டிச் சில மாதங்கள் சென்றமையால் அவனது பெரிய சட்டைப் பையில் சின்னஞ் சிறிய சிட்டுக் குருவி ஒன்று தங்கிற்று. யாராலும் எந்தவிதமான இன்னலும் இல்லாமல் அங்கேயே முட்டையும் இட்டது. அதன் பிறகு அழகிய இரண்டு குஞ்சுகளோடு கூடிக்குலாவி மகிழ்ந்து வாழ்ந்தது.

குடியானவன் சட்டையை எடுத்தபொழுது சத்தம் எழுந்ததைக் கேட்டான். அப்படியே வெளியே வந்து வெளிச்சத்தில் பார்த்தான். இரண்டு உயிர்கள், 'என்னைக் காப்பாற்று! என்னைக் காப்பாற்று!' என்று கெஞ்சுவது போன்ற ஒலியை அவன் கேட்டான். அவ்

வேளையில் தாய்ப்பறவை அதனைப் பார்த்துவிட்டது. 'ஐயய்யோ! என் குஞ்சுகளுக்கு என்ன தீங்கு வருமோ? ஏது தீங்கு நேருமோ?' என்று கதறிப் பதறித் துடித்துத் துவண்டு அங்கும் இங்கும் பறந்து அலைந்து திரிந்து அல்லல் உற்றது. தாய்ப் பறவையின் துடிப்பையும், பார்ப்புக்களின் பரிதாப நிலையையும் பார்த்தான் பொன்னன். கழிபேரிரக்கங் கொண் டான். "சின்னஞ் சிறிய சிட்டுக் குருவியே, அழாதே! உன் குஞ்சுகளுக்கோ உனக்கோ எவ்விதத் தீங்கும் ஏற்படாது. இந்தச் சட்டையை உனக்கே கொடுத்து விடுகிறேன். அழாதே! அழாதே!" என்று சொன்னான். சொன்னபடியே சட்டையை இருந்த இடத்தில் இருந்தபடியே மாட்டிவிட்டான்.

நாட்கள் சில சென்றன. சட்டைப் பையிலிருந்த இரண்டு குஞ்சுகளுக்கும் இறக்கை வளர்ந்தன. அவை அங்கிருந்து வெளியே பறந்துவிட்டன. அவை சென்றன சென்றனவே. திரும்பி வந்ததை எவரும் கண்டிலர்.

உயிர்க்கருணை மிகுந்த அந்தக் குடியானவன் குருவிகள் அங்கு இல்லாமையை அறிந்தான். அவை பறந்து சென்று விட்டதென உணர்ந்தான். அவன் மாட்டி வைத்த சட்டையை எடுத்தான். சிட்டுக் குருவிகள் குடியிருந்த பையைப் பையப் பார்த்தான். சிட்டுக் குருவியின் குஞ்சுகள் அங்கு இல்லை. ஆனால், 'தக தக'வெனத் தங்க மோதிரம் ஒன்று ஒளிவீசித் திகழ்வதைக் கண்டான்; பெரு வியப்புக் கொண் டான்.

உதவி செய்தால் உதவி அடைவாய்.

## அருஞ்சொற் பொருள்

எஞ்ஞான்றும்-எப்பொழுதும். இமைக்காமல்-செய்யாமல். சுதந்தரம்-உரிமை. நாள்தோறும்-ஒவ்வொருநாளும். பறித்து-பிடுங்கி. விசை-வேகம். இன்னல்-துன்பம். அல்லல்-துன்பம். பார்ப்பு-குஞ்சு. கழிபேரிரக்கம்-மிக்க கருணை. திகழ்வதை-விளங்குவதை. பெருவியப்பு-பேராச்சரியம்.

### I. வினாக்கள்

1. பொன்னனின் மனைவி மக்கள் பெயர்களைக் கூறுக.
2. பொன்னனின் குணநலங்களை எழுதுக!
3. பொன்னன் தன் சட்டையைக் கழற்றி வைத்த பிறகு சென்ற காலங்களைக் குறிப்பிடுக.
4. பொன்னன் தன் சட்டையை ஏன் எடுக்கச் சென்றான்? சட்டைப் பையில் என்ன கண்டான்?
5. பொன்னன் தன் சட்டையை எடுக்கும்பொழுது தாய்ப்பறவை அடைந்த துயரைக் கூறுக.
6. தாய்ப்பறவையின் துயரைக் கண்ட பொன்னன் என்ன கூறினான்?
7. சிட்டுக்குருவிகள் குடியிருந்த பையில் என்ன இருந்தது?
8. 'உதவி செய்தால் உதவி அடையலாம்' என்பதைப் பொன்னனின் கதையை கொண்டு விளக்குக.

## 6. லூயி பாஸ்டியர்

லூயி பாஸ்டியர் பிரான்சு நாட்டிலுள்ள ஆர்பாய்சு என்னும் நகரில் 1822ஆம் ஆண்டு பிறந்தார். அவருடைய தந்தை தோல் பதனிடும் தொழிலாளி. தாய் காய்கறிகள் பயிரிட்டு விற்பவரின் மகள். லூயி பாஸ்டியரின் தந்தை போர் வீரர்களின் வரலாறுகளையும் நெப்போலியனது வீர வாழ்க்கை வரலாற்றையும் சொல்லி வந்தார். இளமையில் அவருடைய தாய் உழைப்பு, உழைப்பில் நாட்டம், வெற்றி ஆகியவற்றைக் கற்பித்து அஃறிணைப் பொருள்களிடத்தும் அன்பு செலுத்தும் பண்பையும் விளக்கினர்.

லூயி பாஸ்டியர் எளிய பெற்றோர்க்குப் பிறந்தவர். அவர் ஆல்பாய்சில் தம் முயற்சியினல் தொடக்கக் கல்வியை முடித்துக் கல்லூரியில் சேர்ந்து படித்தார். அதன் பிறகு பாரிசு நகரம் சென்றார். அங்கு ஒரு கல்லூரியில் சேர்ந்து பேரார்வத்துடன் கல்வி பயின்றார். அவருக்குக் கல்வி பின்பால் இருந்த ஊக்கத்தையும் விரைவையுங் கண்டு ஆசிரியர்கள் அவரிடம் அன்பு செலுத்தினர். அவர் இரசாயன சாத்திரத்தில் விருப்புற்றிருந்தார். பூதக் கண்ணுடிகளைக் கொண்டு அவர் பல சோதனைகளைச் செய்து வந்தார். அந்நகரில் அடிக்கடி நிகழும் விஞ்ஞானச் சொற்பொழிவுகளைக் கேட்டுத் தம் அறிவைப் பெருக்கிக்கொண்டார். ஒரு பொருளைப்பற்றி ஆராய்வதில் அவர் மனம் ஈடுபட்டால் ஐயம் தீர்கிறவரையில்

அதே கருத்தாக இருப்பார். இவ்வாறு ஏழாண்டுகள் பாரிசில் படித்துப் பட்டம் பெற்ருர். அவர் படித்து வந்த காலத்திலேயே இரசாயனத் துறையில் சில உண்மைகளைத் தம் ஆராய்ச்சி முடிவில் கண்டறிந்தார். அவர் தம் அறிவாற்றலால் 'ஸ்ட்ராஸ் பர்க்' கல்லூரியின் விஞ்ஞானப் பேராசிரியர் பதவியை ஏற்ருர். அக்கல்லூரி முதல்வரின் மகளை லூயி பாஸ்டியர் திருமணம் செய்துகொண்டார். அதன் பிறகு லில்லி மாநகரத்திலிருந்த கல்லூரியில் விஞ்ஞானப் பேராசிரியராகப் பணியாற்றும் வாய்ப்பைப் பெற்ருர். அவர் மாணவர்களிடம் அன்பும் ஆர்வமும் காட்டி வந்தார். அவர் மாணவர்க்குக் கல்வி கற்பிப்பதோடு தம் ஆராய்ச்சியிலும் இடைவிடாது ஈடுபட்டு வந்தார்.

பிரான்சு நாடு பட்டு நெசவுக்கும் சாராயம் காய்ச்சுதலுக்கும் பெயர் பெற்றது. அந்நாட்டிலுள்ள லீல் என்ற நகரிலும் அதனைச் சுற்றியுள்ள ஊர்களிலும் சிறந்த முறையில் சாராயம் காய்ச்சும் தொழிலில் பலர் ஈடுபட்டிருந்தனர், இந்தத் தொழிலால் நாட்டின் வருவாயும் பெருகியது. திராட்சை, பீட், கருப்பஞ்சாறு ஆகியவற்றைக் கொண்டு மது தயாரித்து வந்த அவர்கள் தொழிலுக்கு ஓர் இடையூறு ஏற்பட்டுவிட்டது. அதனல் ஏற்பட்ட பொருள் இழப்பிற்கு அளவே இல்லை. இத்தொழிலில் ஈடுபட்ட பைகோ என்பவர் லூயிபாஸ்டியரிடம் வந்தார். பைகோவின் ஆலையில் கருப்பஞ்சாறு ஊற்றி வைக்கப்பட்ட சால்களில் சில புளிப்படைய வில்லை. சில புளித்து நல்ல மதுவாயின. இதற்குரிய காரணத்தை

ஆராயுமாறு கேட்டுக் கொண்டார். அப்பொழுது அதைப்பற்றி ஆய்வு நடத்துவதற்குப் போதிய ஒய்வு இல்லையாயினும், நாட்டின் பொருள் வருவாய் குறைவதைப் போக்க எண்ணி அதனை ஒப்புக்கொண்டார்.

லூயிபாஸ்டியர் பைகோவின் ஆலைக்குச் சென்ருர்; சால்களை ஆராய்ந்தார்; புளித்த சாற்றையும் புளிக்காத சாற்றையும் தனித்தனியே எடுத்துக் கொண்டு தமது ஆய்வுக் கூடத்திற்கு வந்தார். அங்கு அவற்றைப் பூதக் கண்ணுடி கொண்டு ஆராய்ந்தார். புளித்த சாற்றில் 'ஈஸ்ட்' என்னும் பொருள் இருப்பதைக் கண்டார். ஈஸ்ட் வேரோ விதையோ இல்லாமல் வளரக் கூடியது. ஈஸ்ட் வளர்ந்து பெரிதானவுடன் அதிலிருந்து இன்னெரு ஈஸ்ட் தோன்றும். இவ்வாறே ஈஸ்ட் ஒன்றன்பின் ஒன்ருய் வளர்ந்து கொண்டே போகும். ஈஸ்ட் இல்லாத சாறு புளிப்பதில்லை.

பாஸ்டியர் பல நுண்ணிய ஆராய்ச்சிகளைச் செய்தார். பால் தயிராவதற்கும் சாராயம் புளிப்பதற்கும் வானில் மிதக்கும் கண்ணுக்குப் புலப்படாத நுண்ணிய உயிர்ப் பிராணிகளே காரணம் என்பதைக் கண்டறிந்தார். இவ்வுயிர்ப் பொருள்கள் ஒருமுறை புளித்த பொருள்களில் தோன்றி வானில் பரவுகின்றன. அவையே மறுபடியும் பாலையும் கருப்பஞ்சாற்றையும் புளிக்கச் செய்கின்றன என்பதையும் ஆராய்ந்தார். அதன் பிறகு திரவப் பொருள்கள் கெடுவதற்குரிய காரணங்களையும் அவை கெடாமலிருப்பதற்குரிய வழிகளையும் வகுத்துரைத்தார். இதனுல் தொழிலாளர் துயர் துடைக்கப்பட்டது.

நாட்டின் வருவாய் பெருகிற்று பாஸ்டியர் கண்ட இம்முறையை உலகம் இன்றும் பின்பற்றுகிறது. இதற்குப் பாஸ்டியர் முறை என்பது பெயர். இவ் வாராய்ச்சியினுல் பாஸ்டியர் உலகறியும் ஒருவ ராஞர்.

லூயிபாஸ்டியர் தம் ஆராய்ச்சியை மேலும் தொடர்ந்தார். காற்றில் நுண்ணிய கிருமிகள் கலந் திருப்பதைக் கண்டார். அக்கிருமிகள் காற்றி லிருப்பது மட்டுமின்றி உணவிலும் நீரிலும் மற்றும் எல்லாவிடங்களிலும் பரவி இருப்பதை அறிந்தார். நாம் தண்ணீரைக் காய்ச்சுவதும் பாலைக் கொதிக்க வைப்பதும் எதற்காகத் தெரியுமா? அவற்றிலுள்ள கிருமிகளை அழிப்பதற்காகத்தான். இம் முறையைப் பின்பற்றியே புண்களைக் கொதிநீரால் கழுவு கின்றனர். அறுவை செய்யும் கருவிகளைக் கொதி நீரில் போடுகிருர்கள். லூயிபாஸ்டியர் முதன் முதல் இவ்வுண்மையைக் கூறியபொழுது மக்கள் ஏற்றுக் கொள்ள மறுத்தனர்.

ஒருநாள் லூயிபாஸ்டியர் பாரிசுமாநகரில் இதனை விளக்குவதற்கென்று ஓர் ஏற்பாடு செய்தார். மண்டபமொன்றில் மக்கள் குழுமி இருந்தனர். அவர் கள்முன் திரையில் பலவகைப்பட்ட கிருமிகளும் காட்டப்பட்டன. திடீரென எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டன. திரையை நோக்கி அடியிலிருந்து ஒளிக்கதிர் ஒன்று சென்றது. அதில் தூசிகள் நிறைந்து காணப்பட்டன. இதனை நீங்களும் காண லாம். கூரை வழியே சூரிய வெளிச்சம் உள்ளே வருவதைப் பார்த்தால் அவ்வெளிச்சத்தின் ஊடே

எண்ணற்ற தூசிகள் கைக்கு அகப்படாதவாறு செல்வதைக் காணலாம். இதனையே லூயிபாஸ்டியர் அன்று அங்குக் காட்டினர். அப்பொழுது அவர், "பெருமக்களே! ஒளிக் கற்றையை உற்று நோக்குங்கள். அதில் காணப்படும் தூசிகள் உண்மையில் தூசிகளே அல்ல. அவையே காற்றில் கலந்திருக்கும் கிருமிகள் ஆகும். நோய்கள் பரவுவதற்கு அவையே காரணமாகும்; அவை காற்றிலும், நீரிலும், உணவிலும், உடையிலும் கலந்திருக்கும். அவற்றிலிருந்து நாம் தப்பவேண்டுமாயின் சுற்றுப்புறங்களைத் துப்புரவாக வைத்துக்கொள்ள வேண்டும். உடையையும் உடம்பையும் நீரினல் தூய்மைப்படுத்த வேண்டும். சமைத்த உணவை மூடி வைத்திருக்க வேண்டும்." என்று அரியதொரு சொற்பொழிவையே ஆற்றினர். அதன் பிறகு மக்கள் அவருரையே உண்மையென உணர்ந்தனர்.

பிரான்சு நாட்டின் தெற்குப் பகுதி பட்டு உற்பத்தியில் சிறந்து விளங்கிற்று. அங்கு மல்பரி மரங்களும் நிறைந்திருந்தன. அவற்றின் இலைகளே பட்டுப் பூச்சிகளுக்கு இரையாகும். ஒரு சமயம் பட்டுப் பூச்சிகளுக்கு நாடெங்கும் நோய் ஏற்பட்டது. அதனல் பட்டுத் தொழில் கெட்டுப் போயிற்று. பட்டு நூல்களெல்லாம் அறுந்து போயின. பாஸ்டியரே அதற்கும் உதவி செய்தார். பட்டுப் பூச்சிகளுக்கு நோய் வருவதன் காரணத்தைக் கண்டார். அந்நோய் ஒரு பூச்சியிலிருந்து மற்றொரு பூச்சிக்குப் பரவுவதைக் கண்டார். நோயுற்ற பூச்சியைக் கொன்றுவிடச் செய்தார். அதன்பின் நோயற்ற பூச்சிகளால் மறுபடியும் பட்டுத் தொழில் சிறப்படைந்தது.

இவ்வாறு நோய்களுக்குக் காரணமான நுண்ணிய பிராணிகளைப் பற்றிய அறிவு நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வந்தது. அக்காலத்தில் பிரான்சுக்கும் செருமானிக்கும் போர் மூண்டது. ஐம்பது வயதினராயிருந்த பாஸ்டியர் தம் நாட்டு வீரர்களுக்காகப் போர்க்களம் புகுந்து சிகிச்சை செய்தார். போர் வீரர்கள் புண்களாலும் வேறு நோய்களாலும் படும் இன்னல்களைக் களைந்தார்; அந்நோய்கள் பரவாமலிருப்பதற்கு வேண்டிய தடுப்பு வழிகளையும் ஆராய்ந்தார்.

ஆடு மாடு குதிரை போன்ற விலங்குகள் தொத்து நோய் கண்டு மடிவதைத் தடுக்க ஐரோப்பியர்களிற் சிலர் அக்காலத்தில் முயன்று வந்தனர். அவர்களுள் டாக்டர் காக் என்னும் செருமானியரும் ஒருவராவார். "நோய் ஏற்பட்ட ஒரு விலங்கின் உடலிலிருந்து நோய்க்கிருமிகளை எடுத்து, நோயற்ற மற்றொரு விலங்கின் உடலில் செலுத்தினுல், அப்படிப் பாய்ச்சப் பெற்ற விலங்கு எக்காலத்திலும் அந்த நோயைப் பெறுவதில்லை" என்று ஆராய்ச்சியால் கண்டார். அவர் உரையைக் கேட்டு அக்காலத்தவர் எள்ளி நகைத்தனர். ஆனுல், பாஸ்டியர் அவர் உரைத்த உண்மையை உணர்ந்தார். அவர் வழியிலேயே தமது ஆராய்ச்சியைத் தொடர்ந்தார். புதிய முறைகள் பலவற்றைக் கண்டார். விலங்குகளுக்கு ஏற்படும் பல நோய்களைத் தடுப்பதற்கு வேண்டிய முறைகளை யெல்லாம் அவர் கண்டறிந்தார். இறுதியாக வெறி நாய் கடித்துவிட்டால் சாதலன்றி வேறு வழியில்லை என்றிருந்த குறையையும் தமது ஆராய்ச்சியினுல் நீக்கினுர்.

இன்று உலகெங்கும் பாஸ்டியர் முறையைப் பின்பற்றி ஆராய்ச்சி செய்யும் கழகங்களும், மருத்துவச் சாலைகளும் மலிந்துள்ளன. அவற்றால் எண்ணற்ற மக்களும் விலங்குகளும் நன்மை பெறுவதை நாம் காணலாம். பாஸ்டியர்,

"தோன்றிற் புகழொடு தோன்றுக"

என்னும் வள்ளுவர் வாய் மொழிக்கேற்பப் புகழுடையவர் ஆனார்.

இரஷ்ய மன்னர் சார் பாஸ்டியருக்கு வைரச் சிலுவை யொன்றைப் பரிசாக அனுப்பினார். அத்துடன் விஞ்ஞான ஆய்வுக் கூடம் அமைப்பதற்கென ஓர் இலட்சம் பிராங்குகளையும் அனுப்பி வைத்தார். இவ்வாறு பலரும் பாஸ்டியருக்குப் பொருள் அனுப்பினர். அப்பொருளைக் கொண்டு, "பாஸ்டியர் ஆய்வுக் கூடம்" என்னும் பெயரில் அவர் ஓர் ஆய்வுக் கூடத்தை ஏற்படுத்தினார்.

பாரிசுப் பல்கலைக் கழகம் பாஸ்டியரின் எழுபதாவது பிறந்தநாள் விழாவைப் பெருஞ்சிறப்பாகக் கொண்டாடிற்று. அன்று உலகமே அவரைப் பாராட்டி மகிழ்ந்தது.

பாஸ்டியர் அல்லும் பகலும் அயராது உழைத்தார்; ஊண் உறக்கத்தையும் மறந்தார்; மக்களுக்கும் விலங்குகளுக்கும் ஏற்படும் நோய்களைத் தடுக்கவும், அவை பரவாமல் இருக்கவும் வழிகளைக் கண்டார். நம்மைச் சுற்றிலும் நம் கண்ணுக்குத் தெரியாமல் நிறைந்து இருக்கும் நோய்க் கிருமிகளைக் கண்டறிந்து கூறினார். அவர் 1895ஆம் ஆண்டு மறைந்தார். எனினும், அவர் மேற்கொண்ட உழைப்பையும், முயற்

சியையும் நாமும் மேற்கொள்வோமாக! அவர் உரையைப் பொன்போல் போற்றிச் சுற்றுப்புறத்தைத் தூய்மையாக வைத்துக்கொண்டு நோய்க்கிடங்கொடாமல் வாழ்வோமாக!

### அருஞ்சொற் பொருள்

பேரார்வம்-மிக்க விருப்பம். சோதனை-ஆய்வு. ஐயம்-சந்தேகம். இடைவிடாது-இடை நடுவில் விட்டுவிடாமல்; தொடர்ந்து. வருவாய்-வருமானம். இடையூறு-துன்பம். இழப்பு-நட்டம். நுண்ணிய-மிகச் சிறிய. வான்-ஆகாயம். அறுவை-அறுத்தல். குழுமி-ஒன்று கூடி. எண்ணற்ற-அளவற்ற. ஒளிக்கற்றை-ஒளித்தொகுதி. உற்றுநோக்குதல்-கூர்ந்து பார்த்தல். துப்புரவு-தூய்மை. எள்ளி-இகழ்ந்து. அயராது-சோர்வடையாது.

### வினாக்கள்

1. லூயி பாஸ்டியர் எந் நகரில் எவ்வாண்டில் பிறந்தார்?
2. லூயி பாஸ்டியரின் தந்தையும் தாயும் அவருக்கு இளமையிற் கற்பித்தன யாவை?
3. லூயி பாஸ்டியர் எத்தனை யாண்டுகள் எவ்வாறு எங்கே படித்துப் பட்டம் பெற்றார்?
4. ஈஸ்ட் என்ற பொருளின் இயல்பைக் கூறுக.
5. பாஸ்டியர் முறை என்று எதற்குப் பெயர்?
6. லூயி பாஸ்டியர் எவ்வுண்மையைக் கூறியபொழுது மக்கள் ஏற்றுக் கொள்ள மறுத்தனர்?
7. காற்றில் நுண்ணிய கிருமிகள் கலந்திருப்பதை லூயி பாஸ்டியர் எங்ஙனம் விளக்கிக் காட்டினார்?
8. தூசிகளைப்பற்றி லூயி பாஸ்டியர் பாரிசு நகரில் ஆற்றிய சொற்பொழிவின் கருத்தைக் கூறுக.
9. பட்டுப் பூச்சிகளுக்கு ஏற்பட்ட நோயை லூயி பாஸ்டியர் எங்ஙனம் தடுத்தார்?
10. டாக்டர் காக் என்னும் செருமானியர் கண்ட உண்மை யாது?
11. இரஷ்ய மன்னர் பாஸ்டியருக்குச் செய்த உதவியைக் கூறுக.

## 7. புல்

[புல் தனது வரலாற்றைத் தானே கூறுகின்றது.]

பசும்புல் என்பெயர் பட்டபா டெல்லாம்
ஒருபெருங் கதையாம் உரைப்பதும் எளிதோ
விரிவிடம் படுமொரு வீட்டின் முன்றிலில்
வளர்ந்தேன் அங்குள மனிதரோ கொடியர்
தத்தம் மக்களும் தாமுமே என்றும்
பெற்றுப் பெருகிப் பெருங்குடி யாகி
வாழக் கருதுவர் வகுத்திட லென்னவர்
வாயிற் படியில் வாடி வணங்கி
வயிற்றிற் கின்றிநா வறண்டு தண்ணீர்
தண்ணீர் என்று தவித்துத் தவித்து
வாணு ளெல்லாம் வருந்தி நொந்தேன்
குடிக்க நீரும் கொடுத்திலர் பாவிகள்
விண்ணி லிருப்பினும் மண்ணில் யான்படும்
வருத்தமும் வாட்டமும் கண்டவ் வானம்
அளித்த தமுதம் ஆர வுண்டனன்
விசும்பில் துளிகள் வீழி னல்லால்
பசும்புல் தலையிப் பாரிற் காணுமோ
மனிதரும் போற்றி வாழ்வமோ யாமும்
சேளீர் கதையினும் கிடைத்த நீரை
அருந்திப் பலநாள் அயர்வும் நீங்கித்
தெளிந்து நிமிர்ந்தேன் சிறிதென் உடலில்
பச்சையும் பிடித்தது பார்த்தனர் பாவிகள்
தரிக்கிலர் உள்ளம் தழைக்கும் தலையைக்

காலால் மிதித்தனர் கழுத்தையும் அறுத்தனர்
ஆட்டையும் மாட்டையும் அடித்து மேய்த்தனர்
படர்ந்த இடமெலாம் பாழே யாக்கினர்
இருந்த இடமும் இல்லா தியற்றினர்
உயிரும் உடலும் குறுகி ஒருசிறு
வேராய்த் தரையுள் வெகுநா ளாக
ஒளித்திருந் தேனவ் வுறைவிடந் தேடி
வான்மழைத் தோழன் வந்தெனைக் கண்டு
மனிதன் செயலால் வலியிழந் தனையோ
என்துணை யிருக்க இடருனக் குண்டோ
அறிவிலி போலுநீ அஞ்சேல் அஞ்சேல்
யாவையும் காப்பவன் ஈசன் என்றெலாம்
தேற்றிய மொழியெனக் கூற்றமும் உறுதியும்
பெரிதும் அளித்தது பெயர்த்தும் மெலமெலத்
தலையெடுத் தேனதைத் தறுகணர் கண்டு
பிடித்தனர் வெட்டினர் பிடிங்கி எறிந்தனர்
சாணியைக் கரைத்துத் தலையிற் கொட்டினர்
துடைப்பங் கொண்டு துரத்தி யடித்தனர்
யாவும் சகித்தங் கிருந்தன னென்செய்வேன்
தளர்ச்சி யுற்றிலேன் தகும்நற் காலம்
வருமெனச் சற்று மறைந்து தங்கினேன்
ஐவரை விடயான் அதிபல சாலியோ
மறைந்து சின்னாள் வாழுங் காலை
ஒருதினம் வீட்டி லுள்ளா ரனைவரும்
உறவினர் இருக்கும் ஒரூர் சென்றனர்
வெகுநா ளாகியும் மீண்டிலர் யானும்
இதுவே தருணம் என்று நினைத்து
விரைவின் வளர்ந்து விரும்பிய படியெலாம்

தழைத்துச் செழித்துச் சார்விட மெங்கும்
படர்ந்து பற்றிப் பல்கிளை யாகி
வாய்த்தவிவ் வித்தாம் மக்களைப் பெற்று
வாழ்ந்திருக் கின்றேன் மற்றவர் வாழும்
வீட்டையும் இடித்து விடும்வலி இந்நாள்
எனக்குண் டாயினும் இழிவென விடுத்தேன்
இணங்கி யிருப்பவர் பிணங்கிப் பிரியவும்
பிணங்கிப் பிரிந்தவர் இணங்கிக் கூடவும்
செய்வினை என்போல் செய்ய வல்ல
மந்திர வாதியிவ் வையகத் துண்டோ
செய்பிழை யாவும் தெரிந்து பொறுத்தேன்
பொறுத்தவர் என்றும் பூமி யாள்வார்
எனக்குச் சொந்த மில்லா இடமெதாம்
புல்லே யாயினும் புல்லிய குணமிலை
அற்பர் இகழினும் அறிவால் பொறுப்பேன்
தலையில் மிதிப்பினும் தயவால் சகிப்பேன்
முயற்சி கைவிடேன் முயற்சி கைவிடாத்
திறமுடை யோரைத் திருமகள்
பெரிதும் உவந்து பேணமுன் நிற்குமே.

—கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை.

## அருஞ்சொற் பொருள்

முன்றில்-முற்றம்: வாசல். வாணாள்-வாழும் நாள். அமுதம்-மழைநீர். விசும்பு-மேகம். தரிக்கிலர்-பொறுத்திலர். இடர்-துன்பம். அஞ்சேல்-பயப்படாதே. ஊற்றம்-வலிமை. பெயர்த்தும்-மீண்டும். தறுகணர்- வன்கண்மை உடையவர். வலி-வலிமை. இழிவு-கேவலம். பிணங்கி-ஊடி. பிழை-குற்றம். திருமகள்-இலக்குமி.

## வினாக்கள்

1. புல் தான் வளர்ந்திருந்த வீட்டினர் இயல்பை எங்ஙனம் கூறுகிறது?
2. மழைத்துளியில் தழைத்த புல்லை மக்கள் என்ன செய்தனர்?
3. வான்மழை புல்லுக்கு, கூறிய அறிவுரை யாது?
4. மீண்டும் வளர்ந்த புல்லை மக்கள் எங்ஙனம் அழித்தனர்?
5. புல்லேயானாலும் தனக்குப் புல்லிய குணமில்லை என்பதைப் புல் எங்ஙனம் கூறுகிறது?
6. புல்லின் வரலாற்றைத் தொகுத்துப் பதினைந்து வரிகளுள் சுருக்கி எழுதுக.

# 8. பாரத ரத்தினம்
# டாக்டர் எஸ். இராதாகிருட்டினன்

" பாருக்குள்ளே நல்ல நாடு—எங்கள்
பாரத நாடு "

என்று சொல்லிக்கொள்வதில் நாம் பெருமையடைகிருேம். இந்த நல்ல நாட்டில் பழமைக்குப் பழமையாயும் புதுமைக்குப் புதுமையாயும் விளங்குவது தமிழ்நாடு. தமிழ்நாட்டின் எல்லையில் முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள திருத்தணிகையிலே சர்வ பள்ளி வீராசாமி ஐயருக்கும் சீதம்மாவுக்கும் கி. பி. 1888ஆம் ஆண்டு செப்டம்பர்த் திங்கள் 5ஆம் நாள் இராதாகிருட்டினன் தோன்றினுர். இவரே இப்பொழுது இந்திய நாட்டின் குடியரசுத் தலைவராகத் திகழ்கிருர்.

டாக்டர் இராதாகிருட்டினன் அவர்கள் அளப்பரும் அறிவினர்; அருங்கலை விநோதர்; சிந்தனைச் சிற்பி; செஞ்சொற் கொண்டல்; அமைதியின் சின்னம்; ஆசிரிய மாமணி; சமரச ஞானி; தத்துவ மேதை; சமூக சீர்திருத்தவாதி; நன்மையை எண்ணி நாட்டுக் குழைப்பவர்; விடுதலை வீரர்; ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கியவர்; நல்ல மனிதர். அருங் குணங்கள் பலவும் ஒருங்கமைந்த டாக்டர் இராதாகிருட்டினன் அவர்கள் யாவரும் கேளிர் என்ற எண்ணத்தோடு மனிதகுலத்தின் நல்வாழ்வுக்காகப் பாடுபட்டு வருகிருர். எதிர்கால உலகில் எல்லாரும் மனிதர்

களாய் வாழவும், சாதி சமயச் சண்டைகள் நீங்கவும், கல்வி சுகாதாரம் ஓங்கவும், ஆன்ம சக்தி, ஆன்ம அமைதி அடையவும் பெருநோக்கத்தோடு பொது மக்கட்குத் தொண்டு புரிந்துவரும் நல்லவரின் வாழ்க்கை வரலாறு தமிழக மாணவர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாகும். சிறிய ஆலம் வித்தில் பெரிய ஆலமரம் பொதிந்து இருப்பதைப்போல, இன்று மாணவராக இருப்பவர்களில் எவர் நாளைய உலகில் பாரத ரத்தினமாக ஒளிவீசித் திகழப் போகிறார் என்பது இன்று நமக்குத் தெரியாமல் இருக்கலாம்; எனினும், வருங்காலத்தில் எத்தனையோ இரத்தினங்கள் ஒளிவீச இருக்கின்றன. டாக்டர் இராதாகிருட்டினன் அவர்களுடைய வரலாறு மாணவர்களுக்குச் சிறந்த வழிகாட்டியாக அமையும்.

இராதாகிருட்டினன் இளமையில் திருத்தணிகையிலும் திருப்பதியிலும் கல்வி பயின்றார். தனித்திருப்பதும் சிந்தனை செய்வதும் அவருக்குப் பழக்கமாயிருந்தன.

இராதாகிருட்டினன் பதினைந்தாவது வயதில் சென்னைக் கிறித்தவக் கல்லூரியில் சேர்ந்தார்; எம்.ஏ. வகுப்பு வரையில் படித்தார்; தேர்வுகளில் முதல்வராகத் தேறினார்; கல்லூரியில் தத்துவ பாடத்தைச் சிறப்பாகக் கற்றார்; இராமகிருட்டின பரம அம்சரின் சீடரான சுவாமி விவேகாநந்தரின் கட்டுரைகளை விரிவாகக் கற்றார்; இந்து மதத்தின் உண்மைகளை நன்கு உணர்ந்தார்.

இராதாகிருட்டினன் அவர்கள் பெற்றோர்களின் விருப்பத்திற்கேற்ப இளமையிலேயே சிவகாமு

அம்மா என்னும் பெயர் பூண்ட பெண்ணை மணந்தார். இவர்கட்கு ஐந்து பெண்களும் ஒரு மகனும் உண்டு. இவர் மகன் கோபால் என்பவர் டாக்டர் பட்டம் பெற்றவர்; நல்ல அறிஞர். இவர் தில்லியிலுள்ள இந்திய கலாச்சாரக் கழகத்தில் சரித்திரப் பகுதியில் உதவி இயக்குநராகப் பணிபுரிகின்றார்.

இராதாகிருட்டினன் அவர்கள் கல்லூரிப் படிப்பை முடித்த பிறகு முதன் முதலாகச் சென்னை மாநிலக் கல்லூரியில் தத்துவ நூல் உதவிப் பேராசிரியராகப் பணிபுரிந்தார். தாம் கற்பிக்கும் தத்துவத்தில் தாமே தெளிவு பெற்றிருந்தார்; மேலும் ஆங்கில மொழியில் சிறந்த தேர்ச்சியும் அடைந்திருந்தார். இவற்றால் இவர் மாணவர்களுக்கு விளங்கும்படியாகவும் விரும்பும்படியாகவும் எளிமையாகவும் இனிமையாகவும் கற்பித்தார். ஆசிரியர் இராதாகிருட்டினன் மாணவர்களுக்குக் கற்பிக்குங் காலத்திலும் இடைவிடாது படித்துவந்தார். தாம் படித்த அளவு சிந்திப்பதில் கவனம் செலுத்தினர். சிந்தித்துத் தெளிந்ததைத் தெள்ளமுதாக வடித்தெடுத்தார். அதைப் பேச்சாலும் எழுத்தாலும் பிறருக்கு வழங்கினர். சமய வாழ்வு, தத்துவ ஞானங்களைப் பற்றி ஐரோப்பிய செய்தித்தாள்களிலே எழுதி வந்தார். இவர் கவியரசர் இரவீந்தரநாத் தாகூரின் இலக்கியங்களைப் படித்தார். 'தாகூரின் தத்துவம்' என்றொரு நூல் எழுதித் தாகூரின் பாராட்டுரையையும் பெற்றார்.

மைசூர்ப் பல்கலைக் கழகத்தில் தத்துவ நூல் பேராசிரியராக மூன்று ஆண்டுகள் பணிபுரிந்த

இராதாகிருட்டினன் அவர்கள், 'தற்காலத் தத்துவத்தில் மதத்தின் நிலை' என்றொரு நூலை எழுதினர். அந்நூல் அமெரிக்கப் பேராசிரியரின் பாராட்டுதலைப் பெற்றது.

1921ஆம் ஆண்டில் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தின்ஆசிரியராகச் சென்ருர்; பிறகு துணை வேந்தராகவும் ஆனர். அப்பொழுது 'இந்தியத் தத்துவம்'என்னும் பொருளில் ஆராய்ச்சி நூல் ஒன்று எழுதினர். இங்கிலாந்தில் அச்சிடப்பட்ட அந்நூல் மேனுடுகளில் மிகுதியாக விற்பனையாயிற்று. 'இராமன் விளைவு' இந்திய விஞ்ஞான அறிவை உலகறியச் செய்ததைப் போல, இராதாகிருட்டினன் அவர்கள் எழுதிய 'இந்தியத் தத்துவம்' இந்திய மக்களின் ஆன்ம அமைதியையும் உண்மையையும் உலகறியச் செய்தது.

1926ஆம் ஆண்டில் இங்கிலாந்து நாட்டுக் கேம்பிரிட்சு நகரில் நடைபெற்ற பல்கலைக் கழகப் பேராளர் மாநாட்டிற்குக் கல்கத்தாப் பல்கலைக் கழகச் சார்பில் சென்ருர். அப்பொழுது ஆக்சுபோர்டிலுள்ள மான்செஸ்டர் கல்லூரியில் ஓர் அரிய சொற்பொழிவு ஆற்றினர். ஆங்கிலேயரும் அதிசயிக்கத்தக்க முறையில் ஆங்கிலத்தில் ஆற்றிய சொற்பொழிவைக் கேட்ட அனைவரும் வியப்பும் திகைப்பும் அடைந்தனர்.

இங்கிலாந்திலிருந்து அனைத்துலகத் தத்துவ நூல் பேராசிரியர் மாநாட்டுக் கூட்டத்திற் கலந்து கொள்ள அமெரிக்காவுக்குச் சென்ருர். அங்குச் சிக்காக்கோப் பல்கலைக் கழகத்தில் சொற்பொழிவாற்றும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார். சிரிக்க வைத்துச் சிந்திக்க வைக்கும் இவரது சொல்வன்

மையைக் கண்டு அமெரிக்கப் பேரறிஞர்கள் பெரிதும் பாராட்டினர்.

மேல் நாடுகளில் பேரும் புகழும் சீரும் சிறப்பும் பெற்ற இராதாகிருட்டினன் 'கல்கி அல்லது நாக ரிகத்தின் எதிர்காலம்' என்னும் ஆராய்ச்சி நூல் ஒன்று எழுதினர். இந் நூலில் விஞ்ஞானம் மனித னுக்கு என்ன செய்துள்ளது என்பதை இவர் விளக்கி யுள்ளார்.

மேனாடு சென்று திரும்பியதும் ஆந்திரப் பல் கலைக் கழகம் இராதாகிருட்டினன் அவர்களுக்கு 'டாக்டர்' பட்டம் அளித்துச் சிறப்பித்தது; இந்திய அரசு 'நைட்கூட்' என்னும் பட்டத்தை அளித்துச் சிறப்பித்தது.

டாக்டர் இராதாகிருட்டினன் ஆந்திரப் பல் கலைக் கழகத்தில் ஐந்தாண்டுகள் துணைவேந்தராக இருந்து அரும் பணியாற்றினர். இங்கிலாந்து ஆக்சு போர்டு பல்கலைக் கழகத்தினரின் வேண்டுகோளுக் கிணங்க அங்கு மூன்று ஆண்டுகள் சமய தத்துவக் கலையைப் பயிற்றி வந்தார். அப்பொழுது இங்கி லாந்தில் ஆற்றிய சொற்பொழிவுகளைத் தொகுத்துக் 'கீழ்நாட்டு மதங்களும் மேல் நாட்டு எண்ணமும்' என்ற பெயரில் ஒரு நூலாக வெளியிட்டார். இந் நூலைக் குறித்து ஆக்சுபோர்டு மலர் இதழில், 'ஓர் அருமையான மனத்திலிருந்து ஓர் அருமையான புத்தகம் எழுந்தது' என வெளியிடப்பட்டுள்ளது. இவர் 1939 ஆம் ஆண்டில் காசி இந்துப் பல்கலைக் கழகத் தலைவர் பொறுப்பை ஏற்றுப் பணியாற்றினர். இவர் இந்தியாவிலுள்ள பல்கலைக் கழகங்களிலெல்

லாம் பட்டமளிப்பு விழாச் சொற்பொழிவாற்றுமாறு அழைக்கப்பட்டார்.

இந்திய நாட்டு விடுதலை வேட்கை கொண்ட இவர் ஆங்கிலேயர் அளித்த 'சர்' பட்டத்தைத் தாமே துறந்தார். நாடு விடுதலையடைந்து ஆட்சிப் பொறுப்பை இந்தியர் ஏற்ற நேரத்தில் 1948 ஆம் ஆண்டு முதல் 1956 ஆம் ஆண்டுவரை இவர் உருசியாவில் இந்தியத் தூதராக இருந்து பணியாற்றினர். இதன் பிறகு குடியரசுத் தலைவர் டாக்டர் இராசேந்திரப் பிரசாத் அவர்களுக்குத் துணையாக இருந்து பணியாற்றக் கேட்டுக் கொள்ளப்பட்டார். இப்பொழுது இந்தியக் குடியரசுத் தலைவராகத் தொண்டு புரிந்து வருகிறார். 1954 ஆம் ஆண்டில் இந்திய அரசு இவருக்குத் தலைசிறந்த 'பாரத ரத்தினம்' என்னும் பட்டத்தை வழங்கியுள்ளது. தலைவர் நேருவுக்குப்பின் அமைதியின் சின்னமாகவும், அறிவின் பெட்டகமாகவும், அன்பின் உருவாகவும், அடக்கத்தில் முனிவராகவும், சிந்தனையின் தலைவராகவும், காட்சிக்கு எளியராகவும், கடுஞ்சொல் அற்றவராகவும் விளங்கும் பெரியார் டாக்டர் இராதாகிருட்டினன் அவர்கள், இந்தியாவுக்கும் உலகுக்கும் சிறந்த அறிவுரைகளை நல்க நோயற்ற வாழ்வுடன் நீடூழி வாழ்க என இறைவனை இறைஞ்சுவோமாக!

அருஞ்சொற் பொருள்

கொண்டல்-மேகம். ஊன்-தசை. பாரதரத்தினம்-இந்திய அரசினர் வழங்கும் உயரிய பட்டம். திகழ்தல்-விளங்குதல். பெயர் பூண்ட-பெயர் தரித்த. தத்துவம்-உண்மை இயல்பான அமைப்பு; பொருள்களின் குணம். நல்க-தர.

### வினாக்கள்

1. இராதாகிருட்டினன் எங்கு, எப்பொழுது தோன்றினார்?
2. டாக்டர் இராதாகிருட்டினனிடம் அமைந்துள்ள சிறப்புக்கள் யாவை?
3. இடஞ்சுட்டி விளக்குக:
   (1) 'சிறிய ஆலம் வித்தில் பெரிய ஆலமரம்.'
   (2) 'இராமன் விளைவு.'
4. இராதாகிருட்டினன் எங்குக் கல்வி கற்றார்? அவருக்கிருந்த பழக்கம் என்ன?
5. இராதாகிருட்டினன் பாடங் கற்பித்த முறை யாது?
6. இராதாகிருட்டினன் அவர்கள் எழுதியுள்ள நூல்களின் பெயர்களைக் கூறுக.
7. டாக்டர் இராதாகிருட்டினன் அவர்கள் பணியாற்றிய பல்கலைக் கழகங்கள் யாவை?
8. இராதாகிருட்டினன் அவர்களின் சொற்பொழிவு ஆற்றலை எதனால் அறியலாம்?
9. இராதாகிருட்டினன் அவர்களுக்குக் கிடைத்துள்ள பட்டங்களும், அவை யாரால் வழங்கப்பட்டன என்பதையும் கூறுக.

# 9. லிவிங்ஸ்டன்

உலகில் ஆசியாக் கண்டத்திற்கு அடுத்தபடி யாகப் பெரியது ஆப்பிரிக்காக் கண்டமே. ஏறக் குறைய இரண்டு நூற்றாண்டுகட்கு முன் ஆப்பிரிக் காக் கண்டத்தை இருண்ட கண்டம் என்று மக்கள் வழங்கினர். அவ்வாறு அவர்கள் அழைத்ததற்குக் காரணம் அதுவரையில் அந்நாட்டின் உட்பகுதிகள் கண்டறியப்படாமல் இருந்தமையே யாகும்.

அக்காலத்தில் ஆப்பிரிக்காக் கண்டத்தின் உள் நாடுகளைக் கண்டறிய எண்ணியவர் பலர்; முயன் றவர் சிலர்; வென்றவர் இலர் என்று சொல்லும்படி யாக இருந்தது. ஆப்பிரிக்காவின் கடற்கரை யோரங் களில் வெப்பக் காடுகள் மிகுதியாக உண்டு. அக் காடுகளில் கொடிய விலங்குகள் வாழும். அங்கு வாழ்ந்த முரட்டு மக்கள் பார்க்க வருபவர்களுக்கு இன்னல்கள் பல இழைத்தார்கள். சிலர் நோய்வாய்ப் பட்டு வருந்தினர். இவ்வாறு துன்பங்கள் பல நேர்ந் தாலும் புதுமை காணும் முயற்சியில் சிலர் துணிந்து ஈடுபட்டனர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் (கி. பி. 1813ஆம் ஆண்டில்) இங்கிலாந்திலே லிவிங்ஸ் டன் என்னும் அறிஞர் ஒருவர் தோன்றினார். அவர் மதக் கல்வியைக் கற்றார்; மருத்துவக் கலையில் தேர்ச்சி பெற்றார். அவர் புதியன காணவேண்டுமென்ற ஆவலும், விடா முயற்சியும் உடையவர்; இன்னலை

எதிர்த்து நிற்கும் ஆற்றலும், பொறுமையும், மன உறுதியும் கொண்டிருந்தார்.

லிவிங்ஸ்டன் ஆப்பிரிக்காவிலுள்ள நீக்கிரோவர்களுக்காக உழைக்க முன்வந்தார். அவர் ஆப்பிரிக்காக் கண்டத்தில் பட்ட அல்லல்களுக்கு எல்லேயே இல்லே. அவர் அவற்றைத் தாங்கிக்கொண்டு அந்நாட்டு மக்களுக்குப் பல நன்மைகளேப் புரிந்தார். அவர் அதுவரையில் ஐரோப்பியர்கள் கேட்டும் அறியாத பல புதிய இடங்களேக் கண்டறிந்தார். உலகத்திலுள்ள நீர்வீழ்ச்சிகளுள் மிகப் பெரிதான விக்டோரியா நீர்வீழ்ச்சி விழும் இடத்தைக் கண்டுபிடித்தவர் அவரே. 'சாம்பெசி நீர்வீழ்ச்சி' என்பது அதன் பழம் பெயராகும். ஆப்பிரிக்காவிலுள்ள தங்கநிகா, நியாசா போன்ற ஏரிகளேக் கண்டுபிடித்து உலகுக்குத் தெரிவித்தவரும் லிவிங்ஸ்டனே ஆவார். அவர் தாம் கண்ட புதுமைகளேயும் அடைந்த துன்பங்களேயும் தாமே எழுதி வைத்துள்ளார். அவற்றுள் ஒரு சிறு நிகழ்ச்சியைப் பற்றி இங்கே படித்து அறிந்து கொள்வோம்:

"நாங்கள் 'சோபு' என்னும் நதியின் அருகில் வசித்து வந்த மக்களின் தலேவனுடைய விருந்தினராகச் சில நாட்கள் இருந்தோம். பின்னர் 1853 ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பதினேராந் தேதி சோபு நதியில் தோணியில் புறப்பட்டோம். இந் நதி சாம்பெசி நதியின் உபநதிகளுள் ஒன்று. நாங்கள் புறப்படும் வேளேயில் எல்லாம் ஒழுங்காக உள்ளனவா என்று அறியத் தலேவன் அங்கு வந்தான். அவன் தனது சிறு படகினேயும் எனக்குத் தந்தான்.

அது நான் இதற்கு முன் உபயோகித்தவற்றை விடச் சற்றுப் பெரியதாக இருந்தது.

"சோபு நதியில் 'கிப்போ' என்னும் நீர்யானைகள் நூற்றுக் கணக்கில் கூட்டங் கூட்டமாக வசிக்கின்றன. அவை தம்மைப் பிறர் துன்புறுத்தாதிருப்பின் ஒன்றும் செய்வதில்லை. ஆயினும், கூட்டத்தினின்றும் விலகிய ஆண் நீர்யானைகள் அபாயம் விளைவிக்கின்றன. அவை நதியிற் செல்வோர் படகைத் தாக்கிக் கவிழ்த்து இன்புறுகின்றன. நீர்யானைக் கூட்டம் பகலில் நதியின் மத்தியிலும், இரவில் கரையோரத்திலும் தங்கும் இயல்புடையனவாயிருந்தன. நதியிற் செல்பவர் தங்கள் படகைப் பகலில் கரையோரத்திலும், இரவில் ஆற்றின் மத்தியிலும் செலுத்தி அவற்றிடமிருந்து தப்புகின்றனர்.

"ஒருகால் நீர்யானையால் படகு தாக்கப்பட்டு உடைந்து கவிழ்ந்தால் சிறிது நேரம் தண்ணீருக்குள்ளேயே மூச்சை யடக்கி மூழ்கியிருந்த பின்பு மேலே வரவேண்டும் என்று என்னுடனிருந்த ஆப்பிரிக்கா நாட்டினர் எனக்குக் கூறினர். ஏனெனில், நீர்யானை படகைக் கவிழ்த்த பின்பு நீர் மட்டத்திற்கு மேல் காணப்படும் மனிதரைத் தாக்கக் காத்திருக்குமாம். சிறிது நேரம் சென்றால் ஒருவருமில்லை என்று கருதிப் போய்விடுமாம். அதற்காகவே அவ்வாறு செய்ய வேண்டும் என்றனர். நீர்யானைகள் நீரினுள்ளே மூழ்கியிருக்கும் போது அவற்றை நாம் காண முடியாது. அவை மூச்சுவிட வெளியே வரும்போது தான் அறியலாம். நீர்யானையின் குட்டிகள் தங்கள் தாய் யானைகளின் முதுகுகளில் அமர்ந்திருக்கும். இக்

குட்டிகளால் நீண்ட நேரம் நீர்க்குள் தங்கி யிருக்க இயலாதாதலின் தாய் யானைகள் அடிக்கடி வெளியே வரும்.

"நீர் யானைகளைத் தவிர இந்நதியில் முதலைகளும் அதிகம். அவை கிப்போக்களை விட அதிக துன்பத்தை விளைப்பனவாகும். ஆண்டுதோறும் பல சிறுவர்களும் கன்றுகளும் இந்த ஆற்றிற் காணமற் போவது வழக்கமாம். சிறுவர்களும் கன்றுகளும் தண்ணீர் அருகே செல்லும்போது கரையில் தங்கியிருக்கும் முதலைகள் இழுத்துச் சென்றுவிடுமாம். முதலை மனிதனையும் மாட்டையும் முதலில் தன் வாலால் கடுமையாகத் தாக்கித் தண்ணீருக்குள் மூழ்கச் செய்து, பிறகு இழுத்துச் செல்லும் வழக்க முடையதாம்.

"ஒருநாள் ஓர் ஆப்பிரிக்கன் ஒரு முதலையால் பிடிக்கப்பட்டபோது அவன் அதனிடமிருந்து தப்பி வந்த விதத்தைக் காண மிகவும் வியப்பாக இருந்தது. முதலை அவனுடைய துடையைப்பற்றி ஈர்த்துச் சென்றதாம். அது தரைமட்டம் செல்லும் வரையில் அவன் வாளாவிருந்தானும். பிறகு தன் கையிலிருந்த 'பிச்சுவா' என்னும் கத்தியால் அதன் கழுத்தருகே பலமாகக் குத்தினனும். அம் முதலை, நோய் பொறுக் காமல் அவனை விட்டுவிட அவன் மேலே வந்து விட்டான். அவன் துடையில் பெரிய காயம் இருந்தது. இந்தச் செய்தி மிகவும் வியப்பாயிருக்கிறதன்றோ?"

இவை போன்ற சுவையான நிகழ்ச்சிகளை யெல்லாம் கேட்க கேட்கப் பெருவிருப்பாகவும் வியப் பாகவும் இருக்கும்,

### அருஞ்சொற் பொருள்

இன்னல்-துன்பம். உபநதி-துணை ஆறு. விருப்பு-ஆசை. வியப்பு-ஆச்சரியம்.

### வினாக்கள்

1. 'இருண்ட கண்டம்' என்று எதற்குப் பெயர்? காரணம் யாது?
2. ஆப்பிரிக்க நாட்டின் தன்மை யாது?
3. லிவிங்ஸ்டன் அவர்களின் குணநலன்கள் யாவை?
4. லிவிங்ஸ்டன் கண்டுபிடித்த நீர்வீழ்ச்சியும் ஏரிகளும் எவை?
5. சோபு நதியிலுள்ள நீர்யானைகளின் தன்மை யாது?
6. சோபு நதியில் பயணம் செல்கின்றவர்கள் நீர்யானைகளிடமிருந்து எவ்வாறு தப்புகின்றார்கள்?
7. தாய் யானைகள் அடிக்கடி நீருக்குமேல் வரக் காரணம் என்ன?
8. சோபு நதியில் காணப்படும் முதலைகளால் ஏற்படும் துன்பங்கள் யாவை?
9. முதலையிடம் அகப்பட்ட ஆப்பிரிக்கன் ஒருவன் உயிர் தப்பியது எங்ஙனம்?

## 10. உவகைச் செலவு

பூவிருந்தவல்லி
15-10-'66

அன்புகெழுமிய நண்பன் திரு மா. அருட்செல்வனுக்குப் பாண்டுரங்கன் வணக்கம். நலம்; நலமறியும் ஆவலன். நெடுநாட்களாகக் கடிதம் எழுதாமைக்கு வருந்துகிறேன். நான் பத்தாம் வகுப்பு 'அ' பிரிவில் படித்து வருகின்றேன். சென்ற மாதம் 10-9-'66இல் எங்கள் வகுப்பு மாணவர்கள் இருபதின்பர் நீலகிரிக்குச் சென்று வந்தோம். எங்கள் வகுப்பாசிரியர் திருவாளர் சக்திவேல் பி.ஏ.,பி டி. அவர்கள் எங்களை அழைத்துச் சென்றார். நீலகிரி உவகைச் செலவில் யானறிந்தவற்றைச் சுருக்கமாக உனக்கு எழுதுகின்றேன்.

நீலகிரிப் பயணம் என் மனத்துக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளித்தது. அதைப்பற்றி எத்தனை பக்கங்கள் வரைந்தாலும் போதமாட்டா. ஆயினும், என்னால் இயன்றவரை எடுத்துரைக்கின்றேன்.

தென்னிந்தியாவிலுள்ள கிழக்குத் தொடர்ச்சி மலைகளும் மேற்குத் தொடர்ச்சி மலைகளும் இணைந்து நிற்கின்ற இடமே நீலகிரியாகும். இம்மலை நிலமட்டத்திற்குச் சுமார் எண்ணாயிரம் அடி உயரத்தில் உள்ளது. இம்மலைச் சிகரங்களில் மிக உயர்ந்ததற்குத் 'தொட்டபெட்ட' என்பது பெயர். இம்மலையின் மீது எப்பொழுதும் மேகங்கள் யானைக்கூட்டம் போல் தவழ்ந்து சென்று கொண்டேயிருக்கும்.

மைசூர், மேட்டுப்பாளையம் ஆகிய இரண்டிடங்களிலிருந்தும் இம்மலைக்கு வரும் வழிகள் உண்டு. மேட்டுப்பாளையத்திலிருந்து புகை வண்டியும் மோட்டார் வண்டியும் செல்வதற்கேற்ற பாதைகள் அமைக்கப் பெற்றுள்ளன. மலையடிவாரத்திலிருந்து மேலே செல்லச்செல்ல, ஒருபுறம் அச்சமும் மறுபுறம் உவகையும் இரவும் பகலும் போல மாறிமாறி உண்டாகும். மேலும், வழியின் இருமருங்கும் பார்வைக்கு எட்டாத பள்ளத்தாக்கும் அண்ணாந்து நோக்கினும் காணமுடியாத சிகரங்களும் காட்சியளிக்கின்றன. அவை நாட்டுமக்களின் பொருளாதாரக் கீழ்மட்டத்தையும் மேல் மட்டத்தையும் எடுத்துக் காட்டுவது போல் தோன்றின.

சில இடங்களில் மலைச்சாரல்களைச் செம்மைப் படுத்திக் காப்பி, தேயிலை பயிரிட்டுள்ளனர்; உருளைக் கிழங்கு, கோசுக்கீரை ஆகியவைகளும் அங்குப் பயிர் செய்யப்படுகின்றன. யூகலிப்டஸ் மரங்கள் மலையின்மேல் உயர்ந்து வானளாவ ஓங்கி வளர்ந்திருக்கின்றன. மேட்டுப்பாளையத்திற்கும் உதகமண்டலத்திற்குமிடையில் பன்னிரண்டு புகைவண்டி நிலையங்கள் உள்ளன. இருப்புப்பாதையில் இரண்டு தண்டவாளங்களுக்கும் இடையில் பற்கள் அமைக்கப் பட்ட தண்டவாளம் ஒன்றும் உண்டு. மலைமேல் வண்டிகளை இழுத்துச்செல்ல முன்னும் பின்னும் என்ஜின்கள் பொருத்தப்பட்டுள்ளன.

மேட்டுப்பாளையத்திலிருந்து செல்லும் பொழுது குன்னூர் என்னும் வனப்புடைய சிறு நகரைக் காணலாம். சமமான தட்பவெப்ப நிலையை விரும்பு

கின்றவர்கள் அங்குத் தங்கி வாழ்கின்றனர். நாய்க் கடிக்குச் சிகிச்சை பெற இது சிறந்த இடமாக உள் ளது. குன்னூரை அடுத்து அருவங்காடு முதலிய நான்கு நிலையங்களைக் கடந்தால் உதகமண்டலத்தை அடையலாம்.

உதகமண்டலத்தில் நீலநிற மலைகள் நிமிர்ந்து நிற்கும்; மேகங்கள் தவழ்ந்து தவழ்ந்து செல்லும்; ஆங்காங்கே வெண்ணிறக் கட்டடங்கள் தோன்றும்; பன்னிறப் பூக்கள் மலர்ந்து கண்ணுக்கு விருந்தூட்டும். இங்குச் சென்னை யரசாங்கக் கட்டடமான கவர்னர் மாளிகை யொன்றும், அதன் எதிரில் அழகிய பூங்கா வொன்றும் அமைந்திருக்கின்றன.

உதகமண்டலத்தைச் சூழ்ந்துள்ள சிறுசிறு குன்றுகளில் தொதுவர், படகர் என்னும் இனத்தினர் வாழ்கின்றனர். தொதுவரினும் படகர் சிறிது நாகரிகம் பெற்றுள்ளனர். இவர்கள் சிறுசிறு குடிசை களில் வாழ்கின்றனர். இருளர், குறும்பர் எனப் படுவோரும் இங்கு உள்ளனர்.

நீலகிரி மக்கள் பயிர்த்தொழில் செய்கின்றனர்; சிறந்த எருமைகளை வளர்க்கின்றனர். படகர்கள் பழமையான கன்னட மொழியையும், தொதுவர் கன்னடமும் தமிழும் கலந்த மொழியையும் பேசு கிறார்கள்.

கிணற்றுத் தவளைபோல் புத்தகப் பூச்சியாக இல்லாமல் பல இடங்களுக்கும் சென்று நேரில் காண்பது புதிய அறிவையும் தெளிவையும் அளிக்கும் என்பதில் ஐயமில்லை. இப் பயணத்தில் நாங்கள்

மேட்டூரில் கண்ட செய்திகளை அடுத்த மடலில் வரைகின்றேன். இத்தகைய உவகைச் செலவில் நீயும் சென்று கண்டுவரும் செய்திகளைத் தெளிவாக எழுது.

அன்பன்,
மு. பாண்டுரங்கன்.

முகவரி:

மா. அருட்செல்வன்,
பத்தாம் வகுப்பு 'ஆ' பிரிவு,
பச்சையப்பன் உயர்நிலைப்பள்ளி,
சிதம்பரம்.

### அருஞ்சொற் பொருள்

கெழுமிய-பொருந்திய; நிறைந்த. ஆவலன்-ஆசையுடையேன். மட்டற்ற-அளவு கடந்த. இயன்றவரை-முடிந்த அளவு. இணைந்து-சேர்ந்து. அச்சம்-பயம். உவகை-மகிழ்ச்சி. இருமருங்கும்-இரண்டு பக்கங்களும்; வனப்பு-அழகு.

### வினாக்கள்

1. நீலகிரி எங்குள்ளது?
2. 'தொட்ட பெட்ட' என்று எதற்குப் பெயர்?
3. நீலகிரி மலைக்குச் செல்லும் வழிகள் எவை?
4. மலைமேல் செல்லும் பொழுது காணக்கூடிய காட்சிகள் யாவை?
5. மலைச்சாரல்களில் பயிர்செய்யப்படுவன யாவை?
6. குன்னூரைப் பற்றித் தெரிந்துகொள்வன யாவை?
7. உதக மண்டலத்தில் வாழக்கூடிய மக்கள் யாவர்?
8. நீலகிரி மக்களின் தொழில்கள் யாவை?
9. நீலகிரி உவகைச் செலவு குறித்துப் பதினைந்து வரிகளில் சுருக்கி எழுதுக.

# 11. சோழநாட்டு மறைந்த மாநகரங்கள்

## I

### காவிரிப்பூம்பட்டினம்

இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சோழநாட்டில் புகார் என்னும் காவிரிப்பூம் பட்டினம் சோழர் தலைநகரமாக இருந்தது. அஃது இயற்கைவளம் நிறைந்து, இறைமணங் கமழ்ந்து, கலையழகு சிறந்து, பொருள்வளம் மிகுந்து திகழ்ந்தது. இந் நகர் நெடுங்காலத்திற்கு முன்பே கடலால் கொள்ளப்பட்டது. ஆதலால், இது மறைந்த மாநகர் என்னும் பெயருக்கு உரியதாகிறது. சிலப்பதிகாரத்தில் இந்நகர்ச் சிறப்பை நன்கு காணலாம்.

காவிரிப்பூம்பட்டினத்திற்குச் சம்பாபதி, புகார், காகந்தி என்றும் வேறு பெயர்களும் உண்டு. ககந்தன் என்னும் மன்னனுல் ஆளப்பட்டமையால் 'காகந்தி' யென்றும், பகைவர் எவரும் படையெடுத்து இந் நகருள் புகுந்ததில்லை என்பதைக் குறிக்கப் 'புகார்' என்றும் பெயரிட்டு அழைத்தனராம். காவிரி கடலில் புகுமிடத்தில் இந்நகர் அமைந்திருந்ததால் காவிரி புகும் பட்டினம் காவிரிப்பூம்பட்டினம் ஆயிற்று என்றும் சிலர் கருதுகின்றனர். சம்பாபதி என்னும் பெண் நகரைக் காவல் காத்துத் தவம் புரிந்தமையால், 'சம்பாபதி' என்றும் இந்நகருக்குப் பெயர் வந்ததாம்.

இந்நகருள் வான் பொய்ப்பினும் தான் பொய்யாக் காவிரியாறு பாய்ந்து வளம் பெருக்கியதால், தெங்கு, கமுகு, மா, பலா, வாழை முதலிய தோப்புக்களும், மஞ்சள், இஞ்சித் தோட்டங்களும், கரும்பு, செந்நெல் முதலியவை நிறைந்து காணப்படும் கழனிகளும் சூழ்ந்திருந்தன. இலவந்திகைவனம், உய்யானவனம், சம்பாபதிவனம், கவேரவனம், உவவனம் என்னும் ஐந்து மலர்ப்பொழில்கள் அங்கு இருந்தன. இவற்றுள் ஒன்றில் மட்டுமே மக்கள் உலாவுவர்.

காவிரிப்பூம்பட்டினம், பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் என்னும் இரண்டு பிரிவுகளாக விளங்கிற்று. பட்டினப்பாக்கம் அகநகராகும்; மருவூர்ப்பாக்கம் புறநகராகும். அகநகரில் அரசன் அரண்மனை விளங்கியது. அதனை அடுத்து அரச காரியம் பார்ப்பவர்களும், பல்வேறு தொழில் புரியும் மக்களும் வாழ்ந்து வந்தனர். புறநகரான மருவூர்ப்பாக்கம் கடலோரத்தில் அமைந்திருந்தது, கப்பலில் வந்த பொருள் மூட்டை மூட்டையாய்க் குவிந்து கிடக்கும் மாடங்களையுடைய வீதிகள் பல நிறைந்திருந்தன. யவனர், சாவகர், சோனகர், சீனர், எகிப்தியர் முதலிய வேற்றுநாட்டு வணிகர்களும் அங்குத் தங்கியிருந்தனர். மருவூர்ப்பாக்கத்தில் கடலிற் செல்லுங் கலங்கள் இரவில் துறையறிந்து வருவதற்காகக் கலங்கரைவிளக்கம் ஒன்றும் அமைக்கப்பட்டிருந்தது. அத்துறையில் ஏற்றுமதி இறக்குமதியாகும் பொருள்களின்மீது புலி முத்திரையிட்டனர். சுங்கச்சாவடி ஒன்றும் அங்கிருந்தது. பகலில் வாணிகம் செய்யும் இடம் 'நாளங்காடி' யென்றும், இரவில் வாணிகம்

நிகழும் இடம் 'அல்லங்காடி' யென்றும் பெயர் பெற்றன.

இந்நகரில் இந்திரவிழா மிகச் சிறப்பாக நடைபெற்று வந்தது. பல்வகைச் சமயத்தினரும் அவரவர் சமயத்தை ஆராய்ந்து வந்தனர். கலை மன்றங்களும், பட்டி மண்டபமும் அங்கிருந்தன. தமிழரின் தலை சிறந்த வாழ்வுக்கு இடமாகவும், கரிகாற் சோழனின் ஆட்சிச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாகவும் திகழ்ந்த காவிரிப்பூம்பட்டினம் இன்று மண்ணுக்குள் புதைந்து கிடக்கின்றது.

## II

### கங்கைகொண்ட சோழபுரம்

சோழவளநாட்டைச் சிறப்புடன் ஆண்டு வந்த இராசராச சோழனுக்குப் பிறகு கி. பி. 1012ஆம் ஆண்டில் இராசேந்திர சோழன் முடிசூட்டிக்கொண்டான்.

இராசேந்திர சோழன் முடிசூட்டிக் கொண்டதும் துங்கபத்திரை, கிருஷ்ணை நதிகளைச் சார்ந்த இடங்களையும், வடக்கே ஒட்டரநாடு, வேங்கி, கலிங்கம் என்பவற்றையும் கைப்பற்றினன். கடற்போர் புரிந்து இலங்கையையும் வென்றான். மேலும், ஒரிசா, வங்காளம், மத்திய மாகாணம் முதலிய இடங்களிலிருந்த அரசர்களையெல்லாம் வென்று கங்கைக் கரையை எய்தினன். அங்கிருந்து கங்கை நீரைக் குடங்களில் நிரப்பிப் பகைவர் தலைமேல் சுமத்திக் கொண்டுவந்தான். இவ்வெற்றியின் காரணமாகவே இராசேந்திர சோழனுக்குக் கங்கை கொண்ட

சோழன் என்னும் சிறப்புப் பெயர் எழுந்தது. மன்னனும் அப்பெயரையே மிக விரும்பினன். அப் பெயராலேயே புதிய நகரொன்றையும் அமைத் தான். அந்நகர் இப்பொழுது சிற்றூராகக் காட்சி யளிப்பினும், அக்காலத்தில் பெரிய நகரமாகவே இருந்துள்ளது.

கங்கைகொண்ட சோழபுரம் திருச்சிராப்பள்ளி மாவட்டத்தில் உடையார்பாளையம் தாலுக்காவில் உள்ளது.

இராசேந்திர சோழன் நீர் நிலைகளை உண் டாக்கினன்; ஆறுகளிலிருந்து வாய்க்கால்கள் வெட்டு வித்தான்; நிலத்தை அளந்து பகிர்ந்து கொடுத்தான்; பயிர்த் தொழிலாளருக்கு முன் உதவி புரிந்தான்; வேளாண்மைத் தொழிலை மேம்படுத்தினன்; காடு களை வெட்டிக் கழனிகளாக மாற்றினன். நாடு செழுமை பெற்றது. விளையுளுள் ஆறில் ஒரு கடமை கொண்டான்; அதனல் வரும் பொருளையும் மக்கள் நலனுக்கே செலவிட்டான். 'சோழ நன்னடு சோறுடைத்து' என்னும் முன்னேர் மொழி பொன் மொழியாயிற்று.

தஞ்சையில் இராசராசன் எடுப்பித்த பெரிய கோயிலைப் போலவே, இராசேந்திரன் கங்கை கொண்ட சோழபுரத்தில் ஒரு கோயில் கட்டுவித் தான்; 'கங்கை கொண்ட சோழீச்சுரம்' என்பது அதன் பெயராகும். தஞ்சைப் பெரிய கோயிலைவிடச் சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்துள்ளது இக்கோயில். கங்கைகொண்ட சோழீச்சுரம் இப்பொழுது பெரிதும் இடிந்து உருமாறிக் கிடக்கின்றது. தஞ்சைப் பெரிய

கோயிலைப் பாடிச் சிறப்பித்த 'கருவூர்த்தேவர்' இக் கோயிற் பெருமானையும் 'திருவிசைப்பா' என்னும் அருட் பாடலில் ஒரு பதிகமாகப் பாடியுள்ளார்.

இப்பொழுது பொன்னேரி என வழங்கப்பட்டு வரும் ஏரியே இராசேந்திரன் வெட்டுவித்த 'சோழ கங்கம்' என்னும் ஏரியாகும். இது கங்கைகொண்ட சோழபுரத்திற்கு வடக்கே மணல் கொண்டு மேடாக வுள்ளது. இவ்வேரி தெற்கு வடக்காக ஏறத்தாழ இருபத்தாறு கிலோமீட்டர் நீளமுள்ளதாக இருந் துள்ளது. இவ்வேரிக்கு நீர் வருவதற்காகத் தெற்கே கொள்ளிடத்திலிருந்து ஏறத்தாழ 98 கிலோ மீட்டர் நீளத்திற்கு ஒரு கால்வாயும், வடக்கே வெள்ளாற்றி லிருந்து ஒரு கால்வாயும் வெட்டப்பட்டன. அக் கால்வாய்களின் கரைகள் இன்றும் காணக்கூடிய நிலையிலுள்ளன. மேடான இடத்தில் இவ்வளவு பெரிய ஏரியை அமைத்து வன்மையான கரைகளை எழுப்பிப் பள்ளமான இடத்திலிருந்து நீரைக் கொண்டுவந்து ஏரியை நிரப்பி வேளாண்மையைப் பெருக்கிய மன்னனின் பேராற்றலைக் கண்டு தற்காலப் பொறியியல் வல்லுநர்களும் பெருவியப்படை கின்றனர். தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள வீர நாரணன் ஏரி 'சோழகங்கம்' ஏரியின் வடிகாலாக இருந்ததென்பர்.

கங்கைகொண்ட சோழீச்சுரத்திற்கு ஏறத்தாழ ஒரு கிலோமீட்டர் தொலையில் 'மாளிகைமேடு' என் னும் திடர் ஒன்று இருக்கிறது. அவ்வூர் மக்கள் சோழ அரசர்களுடைய அரண்மனை அங்கிருந்ததாகக் கூறு கிறார்கள். அரண்மனையின் சில பாகங்களை அவர்கள்

குறிப்பிட்டுக் காட்டுகிருர்கள். அந்த மாளிகை மேட்டின் அடியில் கட்டடத்தின் பாகங்களும் அவற்றின் அடையாளங்களும் இன்றும் காணப் படுகின்றன. இவ்விடத்தில் காணப்படும் மாளிகை மேட்டை அகழ்ந்தெடுத்தால் பலவுண்மைகளை நாம் அறிந்துகொள்ளக்கூடும்.

## III

### பழையாறை மாநகரம்

காவிரிப்பூம்பட்டினம், கங்கைகொண்ட சோழ புரம் போலவே பழையாறையும் இன்று ஒரு சிற் றூராகக் காட்சியளிக்கிறது. இவ்வூர் கும்பகோணத் திற்குத் தென்மெற்கே ஏறத்தாழ ஐந்து கிலோ மீட்டர் தொலையில் பழையாறு என்னும் பெயருடன் இருக்கின்றது. சோழமன்னர் பல்லவர்கட்கு அடங் கிய சிற்றரசராக இருந்தகாலத்தில் இப் பழையாறை மாநகரில் வாழ்ந்தார்கள். இதனை அக்காலக் கல் வெட்டுக்களும் இலக்கியங்களும் எடுத்துரைக்கின்றன.

பழையாறை மாநகரம் என்பது பழையாறை, நாதன்கோயில், திருமத்தடி, பட்டீச்சுரம், திருச்சத்தி முற்றம், சோழமாளிகை, ஆரியப் படையூர், பம்பைப் படையூர், புதுப்படையூர், மணப்படையூர், சுந்தரப் பெருமாள் கோயில், தாராசுரம், இராசராசேந்திரப் பேட்டை, அரிச்சந்திரபுரம், கோணப்பெருமாள் கோயில் என்று இந்நாளில் இருக்கின்ற சிற்றூர்கள் அனைத்தும் சேர்ந்த ஒன்றே என அறிஞர்கள் கூறி யுள்ளார்கள்.

பழையாறை மாநகரம் அரிசிலாற்றுக்கும் முடி கொண்டான் ஆற்றிற்கும் இடையில் ஏறத்தாழ எட்டுக் கிலோமீட்டர் நீளமும் ஐந்து கிலோ மீட்டர் அகலமுங் கொண்டதாக இருந்திருக்க வேண்டு மெனத் தெரிகிறது.

அக்காலத்தில் சிறப்புற்று விளங்கிய கோயில்கள் பல இப்பெருநகரில் இருந்துள்ளன. திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், திருமங்கை ஆழ்வார் ஆகிய வர்கள் பழையாறை வடதளி, பட்டீச்சுரம், நந்திபுர விண்ணகரம் என்னும் கோயில்களைப் பற்றிப் பாடி யுள்ளனர். கி. பி. எட்டாம் நூற்றாண்டில் இரண் டாம் நந்திவர்மன் என்ற பல்லவன் பழையாறையைக் கைப்பற்றி அதற்கு 'நந்திபுரம்' எனப் பெயரிட்டான்; அங்கு ஓர் அரண்மனையைக் கட்டினான்; 'நந்திபுர விண்ணகரம்' என்னும் பெருமாள் கோயில் ஒன் றையும் கட்டுவித்தான்.

பல்லவப் பேரரசு கி. பி. 9ஆம் நூற்றாண்டின் இறுதியில் வீழ்ச்சியுற்றது. பழையாறை மீண்டும் சோழர்க்கு உரித்தாயிற்று. தஞ்சை, கங்கைகொண்ட சோழபுரம் ஆகியவை தலைநகரங்களாக இருந்த காலங் களிலும் சோழமன்னர்களின் குடும்பங்கள் பழை யாறையில் தங்கியிருந்தன. முதலாம் இராச ராசனுடைய தந்தையான சுந்தர சோழனும், அவன் மகளான குந்தவைப் பிராட்டியாரும், அவ ருக்குப் பாட்டியாரான செம்பியன்மாதேவியும் பழையாறை அரண்மனையில் தங்கி வாழ்ந்தனர்.

கங்கைகொண்டசோழனான இராசேந்திரன் பழையாறைக்கு 'முடிகொண்ட சோழபுரம்' எனப்

பெயர் சூட்டினுன்; அந்நகரின் தெற்கில் முடி கொண்டசோழப்பேராறு ஒன்றை வெட்டுவித்தான்; பழையாறையில் அவன் தங்கியிருந்தபோது பல கல் வெட்டுக்களேயும் செப்பேடுகளேயும் வெளிப்படுத் திஞன். முதற் குலோத்துங்க சோழனும், அவன் மகஞன விக்கிரம சோழனும் பழையாறையில் தங்கி யிருந்து தானங்கள் பல வழங்கியுள்ளனர்.

பெரிய புராணம் என்னும் திருத்தொண்டர் புராணத்தை இயற்றியருளிய சேக்கிழார் பெருமான் பழையாறையைப்

''பாரில் நீடிய பெருமைசேர் பதிபழை யாறை''

எனச் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

இரண்டாம் இராசராசன் பழையாறைக்கு இராச ராசபுரம் எனப் பெயரிட்டான்; இராசராசேசுவரம் என்னும் கோயிலொன்றைக் கட்டினுன். அக் கோயி லுள்ள இடம் இன்று தாராசுரம் என வழங்கப் படுகிறது.

முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் என் பவன் சோழ நாட்டைக் கைப்பற்றிக்கொண்டு பழை யாறையில் விஜயாபிஷேகமும், வீராபிஷேகமும் செய்து கொண்டான். இவ் வரலாறுகளால் பழையாறை பழங்காலத்தில் கங்கைகொண்ட சோழ புரத்திற்கு அடுத்த நிலேயில் இரண்டாம் தலேநகராக இருந்து வந்தது என அறியக்கிடக்கின்றது. இவ்வாறு மறைந்த மாநகரங்களெல்லாம் நம் முன்னேர்களின் வரலாற்றுப் புதைபொருள்களாக உள்ளன.

## அருஞ்சொற் பொருள்

புகார்-நுழையார். கமுகு-பாக்குமரம். அகம்-உள். புறம்-வெளி. கலங்கரை விளக்கம்-கடலில் வழி தெரியாமல் செல்லும் கப்பலைக் கரைக்கு அழைக்கும் விளக்கு. சுங்கம்-வரி. நாளங்காடி-பகல் கடை. பட்டி மண்டபம்-சொற் பொழிவாற்றுமிடம். விஜயாபிஷேகம்-வெற்றி பெற்ற பின் நீராடுதல். வீராபிஷேகம்-வீரத்தைச் சிறப்பிக்க நீராடுதல்.

## வினாக்கள்

1. காவிரிப்பூம்பட்டினத்திற்கு வழங்கிய வேறு பெயர்கள் யாவை?
2. சோழநாட்டின் வளப்பங்கள் எவை?
3. காவிரிப்பூம்பட்டினத்தின் அகநகர் புறநகர்களின் அமைப்பையும், அங்கு நிகழும் செய்திகளையும் கூறுக.
4. இராசேந்திர சோழன் கைப்பற்றிய நாடுகள் எவை?
5. கங்கைகொண்ட சோழன்-பெயர்க்காரணம் வரைக.
6. கங்கைகொண்ட சோழபுரம் எங்குள்ளது?
7. கங்கைகொண்ட சோழன் செய்த சீர்திருத்தங்கள் யாவை?
8. இராசேந்திரசோழன் கட்டிய கோயில் எது? அஃது எங்குள்ளது?
9. 'சோழகங்கம்' என்பது யாது?
10. 'மாளிகை மேடு' என்று எதற்குப் பெயர்? அங்குக் காணப்படுவன யாவை?
11. 'பழையாறை'—எங்குள்ளது?
12. பழையாறையில் அடங்கிய ஊர்கள் எவை?
13. பழையாறையைப் பாடியவர்கள் யாவர்?
14. பழையாறையின் சிறப்புக்கள் யாவை?

# 12. வானவூர்தி

மனிதனின் அறிவாற்றலால் உலகில் கண்டு பிடிக்கப்பட்ட பொருள்கள் பலவாகும். அவன் நிலம், நீர், வானம் ஆகிய மூன்றையும் தன் நல்வாழ்வுக்கு ஏற்றவாறு பயன்படுத்தி வருகின்முன். முதலில் ஓரிடத்திலிருந்து மற்ரோரிடத்திற்குக் காலால் நடந்து சென்ற மனிதன், கழுதை, குதிரை, ஆடு, மாடு, நாய், ஒட்டகம் முதலியவற்றின் உதவியை நாடினன். மாட்டு வண்டி, குதிரை வண்டிகளில் பயணம் செய்த அவன், மிதிவண்டி, பொறிவண்டி, புகைவண்டி முதலியவற்றின் துணையினல் நெடுந் தொலைவு சென்று வரலானன். இவ்வாறே மரக் கட்டை, தோணி, பாய்மரக் கப்பல், நீராவிக் கப்பல் ஆகியவற்றின் துணைகொண்டு ஆழமான கடல்களில் நீண்ட தூரம் சென்று வருகின்முன். நிலத்திலும் நீரிலும் பயணம் செய்து வந்த மனிதன், வான வீதியில் எவ்வாறு உலாவத் தொடங்கினன்? இஃது ஒரு பெருவிந்தையன்ருே?

புறநானூற்றில் 'வானவூர்தி' என்னும் சொல் காணப்படுகிறது. அவ்வூர்தியும் ஆள் செலுத்தாமல் தானே இயங்கக்கூடியது என்றும் தெரிகிறது.

'வலவனேவா வானவூர்தி'

என்னுந் தொடரே அப்பொருளைத் தந்து நிற்ப தாகும். வானத்தில் ஊர்ந்து செல்லும் எண்ணம்

மிகப் பழங்காலத்திலேயே உருவாகியுள்ளதை அறி கிறோம். 'புட்பக விமானத்தின் உதவியால் இராமன், இலக்குவன், சீதை, வானர வீரர்கள், வீடணன் ஆகியவர்களோடு அயோத்திக்குக் குறித்த நேரத்தில் வான்வழியாக வந்தான்' எனக் கம்பர் தாமியற்றிய இராமாயணத்தில் கூறியுள்ளார். ஏமாங்கத நாட்டு மன்னன் சச்சந்தன் தன் அமைச்சன் கட்டியங்காரன் சூழ்ச்சிக்கு ஆளானபோது கருவுற்றிருந்த தன் மனைவி விசயை என்பாளை மயிற்பொறியில் அமர்த்தி வான்வழியே அனுப்பி வைத்த வரலாற்றைத் திருத் தக்கதேவர் சீவக சிந்தாமணிக் காவியத்தில் கூறி யுள்ளார். கோவலன் மகள் மணிமேகலையை ஒரு தெய்வம் வான்வழியே எடுத்துச் சென்று மணி பல்லவத் தீவில் சேர்த்ததாகவும், அங்கிருந்து மந்திர வலிமையால் மீண்டும் அவள் காவிரிப்பூம்பட்டினம் வந்ததாகவும் சீத்தலைச்சாத்தனுர் மணிமேகலை என்னும் நூலில் கூறியுள்ளார். இத்தகைய கதைகள் உலகில் பல இடங்களிலும் வழங்கியுள்ளன. இந்தக் கதைகளெல்லாம் மனிதனின் முயற்சிக்கு ஊக்கம் அளித்துள்ளன என்று கொள்ளலாம். விமானம் உண்டான விதத்தை இங்குத் தெரிந்து கொள்வோம்.

பிரான்சு நாட்டவரான ஜோசப்பு மாண்ட் கால்பியர், எடினி என்ற சகோதரர் இருவர் காகிதப் பந்தில் வெப்பக்காற்றை அடைத்து வானில் பறக்க விட்டனர். அதுதான் முதன்முதலில் வானிற் பறந்த புகைக் கூண்டு என்பர். அஃது ஏறத்தாழ 21 மீட்டர் உயரம் பறந்து காற்றுக் குளிர்ந்ததும் கீழே இறங்

கியது. பிறகு அவர்களே துணியைக் கொண்டு புகைக் கூண்டு செய்து உயரத்தில் பறக்கவிட்டனர். இதன் பிறகு வேறு சிலரும் புகைக்கூண்டு செய்து பறக்கவிட்டனர். அவர்கள் ஜலவாயுவைக் கூண்டினுள் நிரப்பிப் பறக்கவிட்டனர். பின்னுளில் பிலடர் டி. ரோஸியர்ஸ் என்பவரும் மார்க்விஸ் டி. ஆர். லண்டஸ் என்பவரும் அனல்வாயுவின் உதவியால் மேற்செல்லும் கூண்டொன்றை அமைத்துத் தாமும் விண்ணில் மிதந்தனர். அக்கூண்டு 900 மீட்டர் உயரத்தில் பாரிசு நகரைக் கடந்து சென்றது. அது சீன் நதிக்கு மேலே பறந்தபோது மெதுவாகக் கீழே இறங்கித் தரையை அடைந்தது. அவ்விருவரும் இடையூறின்றி உயிர் பிழைத்தனர்.

கி. பி. 1785ஆம் ஆண்டில் ஓர் அமெரிக்கரும் பிரெஞ்சுக்காரர் ஒருவரும் ஜலவாயுக் கூண்டொன்றை அமைத்து, டோவரிலிருந்து கலே பட்டணத்திற்கு விண்வழியே பறந்தனர். அது கண்ட பிலடர் டி. ரோஸியர்ஸ் என்பார் தாமும் அங்ஙனம் செல்லக் கருதினர். ஜலவாயுக் கூண்டொன்று அமைத்து, அதனடியிலே தீத்தொட்டி ஒன்றை வைத்தனர். அதற்கும் கீழே வைத்திருந்த தொட்டியில் அவர்கள் அமர்ந்துகொண்டு விண்ணிற் சென்றனர். அப்பொழுது ஜலவாயு தீப்பற்றிக்கொண்டது. அதனுல் 900 மீட்டர் உயரத்திலிருந்து அவ்விருவரும் கீழே விழுந்து உயிர் நீத்தனர். இவ்வாறு உண்டான வெற்றியும், தோல்வியும், உயிரிழப்பும் ஆகாயக் கூண்டின் அமைப்பிலே பல சீர்திருத்தங்களைத் தோற்றுவித்தன.

நாளடைவில் பறவைகளைப் போன்ற வடிவ முடைய விமானங்களை அமைத்துப் பெட்ரோலின் உதவியால் வானில் இறங்க முயன்றனர். கர்னல் காடி என்பவர் மனிதனைச் சுமக்கத்தக்க பெரிய பட்டம் ஒன்று செய்து அதனுதவியால் 'இங்கிலீஷ் சானல்' என்னும் கால்வாயின்மேற் பறந்து சென்றார். இன்னுஞ் சிலர் பறவைகள் பறக்கும் விதத்தை ஆராய்ந்து அம்முறையில் புதிய இயந்திரங்களை அமைத்துப் பறந்து வெற்றிபெற்றனர். அந் நாளி லிருந்தே வானவூர்திகள் சிறகுகளோடு அமைந்தன. இம் முயற்சியிலே, அமெரிக்கரும் ஐரோப்பியரும் இறங்கினர்; பலதிறப் பயனும் பெற்றனர்.

வானவூர்தி ஆராய்ச்சியில் முழு வெற்றி கண்டு உலகுக்குணர்த்தியவர்கள் வில்பர் ரைட்டு, ஆர்வில் ரைட்டு என்ற இரு சகோதரர் ஆவர். இவர்கள் அமெரிக்க நாட்டைச் சேர்ந்த டேட்டன் நகரில் பிறந்தவர்கள். இருவரும் ஓர் அச்சியந்திரசாலையிற் கூட்டாளிகளாய் இருந்து அதனை நடத்தி வந்தனர். அவர்கள் மிதிவண்டி செய்யும் தொழிலையும் மேற் கொண்டிருந்தனர். சகோதரர் இருவரும் வானவூர்தி அமைக்கும் வேலையை விளையாட்டுப் பொழுது போக்காகவே முதலில் தொடங்கினர்; அப்புதுத் தொழில் முறையைப்பற்றி வெளிவந்த புத்தகங் களைப் படித்தனர்; முன்னவர்களின் முயற்சியில் ஏற்பட்ட குறைகளை அறிந்து அவற்றைப் போக்கினர். 17-12-1903ஆம் நாளில் ரைட் சகோதரர்கள் இரு வரும் தாமியற்றிய விமானத்திலேறிப் பறந்து காட்டினர்.

வானவூர்தி காற்றிலே எழுந்து உயரப் பறக்க வேண்டியிருப்பதால் அதனை மிக இலேசான பொருளாலேயே அமைத்துள்ளனர். வானவூர்திகள் ஏறக்குறைய 8 மீட்டர் நீளம் உடையனவாய் அமையும். அவற்றிற்கு இரண்டு பக்கங்களிலும் நீண்ட சிறகுகள் இருக்கும். விமானத்தின் நடுப்பாகம் பருத்தும், தலைப்பக்கமும் வால் பக்கமும் சிறுத்து மிருக்கும். வானவூர்தியின் முன்புறத்தில் கைகள் போன்ற இரண்டு உறுப்புக்கள் காணப்படும். அவற்றிற்குச் 'சுழல் கைகள்' என்று பெயர். அவற்றிற்குப் பின்புறத்தில் இயந்திரங்கள் பொருத்தப்பட்டிருக்கும். அங்கு விமானி அமர்ந்திருப்பார். விமானத்தின் நடுப்பகுதியில் பயணிகள் அமர்ந்திருப்பர். விமானத்தில் பணிப்பெண்களும் உள்ளனர்.

வானவூர்தியின் அடியில் இரண்டு சக்கரங்கள் இருக்கும். விமானி வானவூர்தியைப் பெட்ரோலினால் இயக்குவார். முதலில் சுழல் கைகள் மிக வேகமாகச் சுழலும். வானவூர்தி முதலில் சிறிது தூரம் தரையில் ஓடிப் பிறகு படிப்படியாக வானில் எழும்பிப் பறக்கும். அஃது எவ்வளவு உயரம் வேண்டுமானாலும் பறக்கும். ஆனால், விமானிகள் பொதுவாக ஏறத்தாழ 4500 மீட்டருக்குமேல் செலுத்துவதில்லை. அது மணிக்கு முந்நூற்று இருபது கிலோமீட்டர் வேகத்திற்கு மேலும் செலுத்தப்படுகிறது.

வானவூர்தியை உயர்த்தவும் தாழ்த்தவும் திருப்பவும் சில கருவிகள் உண்டு. அவற்றிற்கான பிடிகளெல்லாம் விமானி உட்காருமிடத்தில் அமைக்கப்பட்டிருக்கும்.

இக்காலத்தில் வானவூர்திகள் உலகெங்கும் இயங்குவதைக் காணலாம். இவை காலம், இடம் ஆகியவற்றின் நீட்சியைக் குறுக்கிவிட்டன. வான வூர்தியின் உதவியினுல் இன்று உலக முழுவதையும் விரைவாகவும் எளிதாகவும் சுற்றி வந்துவிடலாம். கடிதங்களை மிக விரைவில் கொண்டு செல்லவும், பரந்த கடலையும் விரிந்த பாலைவனத்தையும் கடக்க வும் வானவூர்தி உதவுகிறது. மேலும், உணவுப் பொருள்களும் இன்றியமையாத மருந்து வகைகளும் மிக விரைவில் ஒரு நாட்டிலிருந்து இன்னொரு நாட்டிற்கு எடுத்துச் செல்ல இஃது உதவுகிறது.

*1914—1918* ஆம் ஆண்டுகளில் நடைபெற்ற உலகப் பெரும்போரில் பகைவர்கள் இருப்பிடங்களைக் கண்டறியப் பயன்படுத்தப்பட்ட வானவூர்திகள், *1939—1945* ஆம் ஆண்டுகளில் நடந்த இரண்டாவது உலகப் பெரும்போரில் பகைவர்கள்மீது குண்டுகளை வீசவும், துருப்புக்களையும் போர்க்கருவிகளையும் கொண்டு செல்லவும் பயன்படுத்தப்பட்டன.

தற்காலத்தில் உலகிலுள்ள எல்லா முக்கிய நகரங்களுக்கும் வானூர்திகள் பயணிகளையும்அஞ்சல் களையும் எடுத்துச் செல்கின்றன. நம் பாரதநாட்டில் சென்னை, பம்பாய், கல்கத்தா, டில்லி, ஆமதாபாத், நாகபுரி, ஐதராபாத், விசாகப்பட்டினம், மங்களூர், பங்களூர், திருவனந்தபுரம், திருச்சிராப்பள்ளி, மதுரை முதலிய நகரங்களெல்லாம் ஆகாய வழி களால் இணைக்கப்பட்டுள்ளன.

பங்களூரில் வானவூர்திகள் செய்யும் தொழிற் சாலை ஒன்று அரசினரால் நிறுவப்பட்டிருக்கிறது.

### அருஞ்சொற் பொருள்

இயங்குதல்-செல்லுதல். மயில்பொறி-மயில் வடிவாகச் செய்யப்பட்ட யந்திரம். இடையூறு-துன்பம். சுழலும்-சுற்றும். பயணி-பிரயாணம் செய்பவர்.

### வினுக்கள்

1. வானவூர்தி கண்டு பிடிப்பதற்குமுன் தமிழ்நாட்டில் வழங்கியுள்ள கதைகள் யாவை?
2. முதன்முதலில் வானிற் பறந்த புகைக்கூண்டு யாரால் பறக்க விடப்பட்டது?
3. பாரிசு நகரில் பறந்து சென்றவர்கள் யாவர்?
4. விண்ணிற் பறக்கும் முயற்சியில் ஈடுபட்டு உயிர் துறந்தவர்கள் யாவர்?
5. 'இங்கிலீஷ் சானல்' கால்வாயின்மேற் பறந்து சென்றவர் யாவர்?
6. வானவூர்தியின் அமைப்பினை விளக்கி எழுதுக.
7. வானவூர்தியின் பயன்கள் யாவை?
8. பாரத நாட்டில் ஆகாய வழிகளால் இணைக்கப் பட்டுள்ள நகரங்கள் யாவை?
9. பாரதத்தில் வானவூர்தித் தொழிற்சாலை எங்குள்ளது?
10. முதல் உலகப் போரில் வானவூர்திகள் எதற்குப் பயன்படுத்தப்பட்டன?
11. இரண்டாம் உலகப் போரில் வானவூர்திகள் எவ் வெவற்றுக்குப் பயன்படுத்தப்பட்டன?
12. வானவூர்தி அமைப்பதில் முழு வெற்றி கண்டவர்கள் யாவர்? அவர்களைப்பற்றி நீவிர் அறிந்தவற்றை எழுதுக.
13. 'ஒரு பெருவிந்தை'—எது?
14. 'வானத்தில் ஊர்ந்து செல்லும் எண்ணம் மிகப் பழங்காலத்திலேயே உருவாகியுள்ளது' என்பதை எதனுல் அறியலாம்?

## 13. பார்வையிழந்தவர் பள்ளி

சென்னை மாநகரிலிருந்து பெங்களூர் செல்லும் நெடுஞ்சாலையில் 22 கிலோ மீட்டர் தொலைவில் பூவிருந்தவல்லி என்னும் ஒரூர் உண்டு. அவ்வூரில் பார்வை யிழந்தவர்களின் நல்வாழ்வுக்கான பள்ளி யொன்று உள்ளது. அப்பள்ளியின் தோற்ற வளர்ச்சி யையும், அங்குப் பயிலும் மாணவ மாணவியர்களின் வாழ்வியலைப் பற்றியும் இங்குக் காண்போம்.

சென்னைப் பார்வையிழந்தோர் கழகம், வெற்றி நினைவுக் கழகம் ஆகியவற்றின் கூட்டு முயற்சியினால் இப்பள்ளி தொடங்கப்பட்டது. வெற்றி நினைவுக் கழகமானது அதனிடமுள்ள பணத்தைப் பார்வை யிழந்தோர் நலனுக்காக இயன்றவளவு பயன்படுத்த லாம் என்று கருதியது. ஆகவே, அது சென்னைப் பார்வையிழந்தோர் சங்கத்தைச் சில கட்டுப்பாட்டுக் களுடன் தங்களிடம் பணம் தருமாறு கேட்டுக் கொண்டது. சென்னைப் பார்வையிழந்தோர் சங்கம் அக்கட்டுப்பாட்டுக்களை ஒத்துக்கொள்ளுமிடத்து ஏற் படக் கூடிய சில நெருக்கடிகளை உணர்ந்தது. அக் கட்டுப்பாட்டுக்களில் ஒன்று பள்ளிக்கு 'விக்டரி மிமோ ரியல் பார்வை யிழந்தோர் பள்ளி' எனப் பெயரிட வேண்டும் என்பதாகும்.

விக்டரி மிமோரியல் பள்ளி சென்னை மாநிலத் தின் பார்வை யிழந்தவர்களுக்கென 1930-31ஆம் ஆண்டில் ஏற்படுத்தப்பட்டது. உயர்திரு 'பெல்' என் பவருடைய தலைமையில் இது தொடங்கப் பெற்றது.

திரு.பெல் அவர்கள் ஸ்காட்லாந்து நாட்டினர்; பயிற்சி பெற்ற சிறந்த ஊக்கம் நிறைந்த உழைப்பாளி. அவருக்கு ஒத்துழைப்புத் தருவதற்குச் செல்வாக்கு நிறைந்த ஆட்சிக்குழு ஒன்றிருந்தது. அக்குழுவிற்குச் சென்னை மாநிலஆளுநர் (கவர்னர்) தலைவராக இருந்தார். சென்னைப் பாதிரியாரும், சென்னை மாநகராட்சி ஆணையாளரும் (கமிஷனரும்), பெருந்தகையாளர் சிலரும் அதன் உறுப்பினர்கள் ஆவார்கள். சர் கொன்ரான் ஸ்மித் என்பவரின் முயற்சிகள் மிகவும் பாராட்டற்குரியனவாகும். பார்வை யிழந்தோர்களின் பிரச்சினைகளைப் பலர் அறியவும் அவர்களுக்குப் பரிவு காட்டவும் அவர் தம்மாலியன்றதைச் செய்தார்.

சென்னை மாநகராட்சியின் மூடப்பட்ட பார்வை யிழந்தோர் பள்ளியிலிருந்து அழைத்துவரப்பட்ட பதினேழு மாணவர்களைக் கொண்டு பள்ளி தொடங்கப்பெற்றது. திரு. பெல் அவர்கள் கைத்தறி, பிரம்பு வேலை ஆகியவற்றைத் தொடங்கினர். அப்பொழுது மேலும் இப்பள்ளியில் இருபத்தெட்டு மாணவர்களை மேற்பயிற்சிக்கும் வேலை வாய்ப்புக்கும் தகுதியுள்ளவர்களாக்கப் பாளையங்கோட்டைப் பள்ளி கருதியது. அவ்வப்போது அத்தகைய மாணவர் குழு இப் பள்ளிக்கு வருகை புரிந்தது.

1941ஆம் ஆண்டில் திரு. பெல் அவர்கள் போர் முனைச் சேவைக்கு அழைக்கப் பெற்றார். எனவே, இப் பார்வையிழந்தோர் பள்ளியை நடத்துவதில் அனுபவம் பெற்ற திருமதி பெல் அவர்கள் பொறுப்பேற்று 1946ஆம் ஆண்டு வரை நடத்திவந்தார்கள். பின்னர் அவர்கள் தம் தாயகம் திரும்பினார்கள். அதன் பிறகு

திரு. ஜோசப் என்பவர் இரண்டாண்டுகள் இப்பள்ளியின் முதல்வராக நியமிக்கப்பட்டார். இவர் காலத்தில் பள்ளி ஆட்சிக்குழுவினர் இப்பள்ளியை அரசியலாரே ஏற்று நடத்துமாறு வேண்டினர். அரசியலாரும் பார்வையிழந்தோரின் நலன் கருதி இக்கருத்தை ஏற்றனர்; திருவாளர் பி. என். வேங்கடராவ் என்னும் நல்லாசிரியர் ஒருவரை இப்பள்ளியின் முதல்வராக்கினர். அதன் பின்னர், பார்வையிழந்தவர் பள்ளியின் பொறுப்புக்கள் அனைத்தையும் அரசியலாரிடம் ஒப்புவித்தனர். இவ்வாறாகப் பார்வையிழந்தோர் பள்ளி முழு அரசினர் பள்ளியாகிக் கல்வித் துறையினரின் நேரடிப் பார்வையின்கீழ் அமைந்தது.

அரசியலார் இப்பள்ளியைத் திறம்பட நடத்த முழுத் தகுதியுள்ள ஆசிரியர்களை விரும்பினர். எனவே, அரசியலார், மாநிலக் கல்லூரி உளவியல் துறைத் துணைப் பேராசிரியராகப் பணியாற்றி வந்த உயர்திரு. பி. ஏ. நந்தகோபால் அவர்களைப் பார்வையிழந்தோரின் கல்வி, நலம், நிருவாகம் ஆகியவற்றில் சிறப்புப் பயிற்சிபெற ஸ்காட்லாந்து நாட்டிற்கு அனுப்பி வைத்தனர். ஸ்காட்லாந்திலிருந்து திரும்பியவுடன் அவரே இப்பள்ளியின் முதல்வரானார்.

1930ஆம் ஆண்டில் பதினேழு மாணவர்களைக் கொண்டு தொடங்கப் பெற்ற இப்பள்ளியில் இன்று 190 ஆடவரும், 98 மகளிருமாக இருநூற்றெண்பத்தெட்டுப் பேர் உள்ளனர். இவர்களுக்குக் கல்வியும் தொழிலுங் கற்பிக்க ஆசிரியர்கள் ஆண்கள் பதின்மூவரும் மகளிர் பதினெண்மரும் பணிபுரிகின்றனர். இப் பள்ளியில் மாணவ மாணவியர்களுக்கு எழுத்துக்

கல்வி அளிக்கப்படுவதுடன், தொழிற் கல்வியும் அளிக்கப்படுகிறது.

இவர்கள் படிப்பதைப் பார்த்தால் மாயமோ மந்திரமோ என்று எண்ணவேண்டியிருக்கும். 'பிரெயிலி' என்ற பார்வையிழந்த ஒருவர் தம் போன்றவருக்கு எழுத்துப் பயிற்றுவிக்கும் முறையைக் கண்டு பிடித்தார். ஆறு புள்ளிகள் குத்தக்கூடிய கட்டங்களை யுடைய உலோகச் சட்டம் ஒன்றும் தடிப்பான காகிதத்தை அழுத்தமாகத் தாங்கி நிற்க உதவும் மரப் பலகையும் அவர்களுக்குத் துணைக் கருவிகளாகும். அம் மரப்பலகைக்குப் 'பிரெயிலி சட்டம்' என்று பெயர். அச்சட்டத்தில் காகிதத்தைப் பொருத்திய பிறகு ஓர் ஊசியைக் கொண்டு குறிப்பிட்ட எண்ணிக்கை கொண்ட துவாரங்களில் குத்துவார்கள். இதனால் தடித்த அத்தாளின் மறு பக்கத்தில் சிறு புள்ளி மேடுகள் ஏற்படும். அப்புள்ளிகளை விரல் நுனியினால் தடவி அவை என்னென்ன எழுத்துக்கள் என்பதைத் தெரிந்து கொள்கிறார்கள். புள்ளிகளின் எண்ணிக்கை வேற்றுமையைக் கொண்டு அவர்கள் பல்வேறு எழுத்துக்களை அறிந்து கொள்ளுகிறார்கள். 'தன் கையே தனக்கு உதவி' என்னும் பழமொழிக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக இவர்கள் திகழ்கின்றார்கள்.

அமெரிக்காவில் பார்வையிழந்ததோடு கைகளும் பயன்படாமற்போன வில்லியம் மெக்பர்ஸன் என்பவர் கல்வி கற்பதில் பேரூக்கம் கொண்டார். எவ்வாறாயினும் கல்வி கற்றே தீருவது என்று உறுதி பூண்டார். அவர் தம் நாவினால் எழுத்துப் புள்ளிகளைத் தடவி, அவை என்ன எழுத்து என்பதை

அறிந்தார். இவ்வாறே சில ஆண்டுகள் முயன்று கல்வியில் தேர்ச்சி பெற்ருர்.

ஹெலன் கெல்லர் என்ற பெண்மணி 1880ஆம் ஆண்டு சூன் மாதம் 27ஆம் நாளில் வட அமெரிக்கா வைச் சேர்ந்த வட அலபாமா மாகாணத்திலுள்ள டஸ்கும்பியா என்னும் சிறிய நகரில் தோன்றினுர். இளமையிலேயே பேரறிவுடன் தோன்றிய அப்பெண் பத்தொன்பது மாதம் வரையில் இவ்வுலகக் காட்சி களைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்தாள். பிறகு திடீ ரென ஏற்பட்ட நோயினுல் கண்ணுங்காதும் திறக்கப் படாமல் போயின. அப்படியும் அப் பெண்மணி, கல்வியை அக்கறையுடன் முயன்று கற்று, உலகினர் போற்றும் பெருமக்களுள் ஒருவராகத் திகழ்கிருர் எனில், கண்ணிருந்தும் குருடர்களாய்க் கல்வியற்ற வராய் வாழ்வதென்பது எவ்வளவு இழிவானதாகும்?

'பூவிருந்தவல்லி விக்டரி மிமோரியல் பள்ளி' இப் பொழுது உயர்நிலைப் பள்ளியாக விளங்குகிறது. இங்குப் படிப்பவர்கள் நூற்றுக்கு நூருகப் பள்ளி யிறுதி வகுப்பு அரசாங்கப் பொதுத்தேர்வில் தேர்ச்சி பெறுகின்றனர். இப் பள்ளியில் பணி புரியும் ஆசிரி யர்களுக்கு அப் பள்ளிக்கூடத்திற்கு அண்மையிலேயே வீடுகள் குறைந்த வாடகைக்கு விடப்பட்டுள்ளன. ஊக்கமுள்ள மாணவர்கள் ஆசிரியர்கள் வீட்டிற்கும் சென்று கல்வி கற்கின்றனர். பள்ளி வேலை நேரம் என்பது மட்டுமன்றி, இரவு பகலாக ஆசிரியர்கள் பார்வையிழந்தோர் நலனுக்காகப் பாடுபடும் சேவை பாராட்டுதற்குரிய ஒன்ருகும்.

பத்து வயதுக்குமேல் பள்ளியில் சேரும் பையன் களுக்குப் பிரம்பு வேலையாக நாற்காலி, மேசை, கூடை, தட்டு முதலிய பொருள்கள் செய்யக் கற்றுத் தரப்படுகிறது. பெண்கள் துணி நெய்தல், பாய் பின் னுதல் ஆகிய வேலைகளைச் செய்கின்றனர். பார்வை யிழந்தோர் தங்களுக்கு வேண்டிய புடைவை, வேட்டி, துண்டு, சட்டைத் துணி, சமுக்காளம் போன்ற வற்றைத் தாங்களே நெய்து கொள்ளுகின்றனர்.

சென்னையில் கிண்டியிலே இப் பள்ளியைச் சார்ந்த சிறு கைத்தொழில்கள் கற்பிக்கும் சிறு பொறியியற் கூடம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. பார்வையிழந்த மாணவர்கள் மற்றைய தொழிற் சாலைகளில் வேலை செய்ய உதவியாக இருக்குமாறு இங்குப் பயிற்சி பெறுகின்றனர்.

இங்குப் படித்தவர்களில் பலர் காடுவெட்டி வச்சிரக் கம்பெனி, அம்பத்தூர் சைகிள் தொழிற் சாலை, டியூப் பாக்டரி, எண்ணூர் அசோகா லேலாண்ட் போன்ற பிற தொழிற்சாலைகளில் வேலை செய்கின்றனர். நல்ல வருமானத்தோடு வாழ் கின்றவர்களில் சிலர் மனைவி மக்களோடு கூடி மகிழ் வுறுகின்றனர்.

இன்று எழுத்துக் கல்வி கற்கும் மாணவர்கள் ஐம் பத்தாறு பேர் உள்ளனர். 'எஸ்.எஸ்.எல்.ஸி.' படித்து முடித்த பின்னர், சென்னை மாநிலக் கல்லூரி, கிறித் தவக் கல்லூரி, கலைக் கல்லூரி ஆகியவற்றில் சேர்ந்து படிக்கின்றனர். இங்கு உதவி ஆசிரியராகப் பணி யாற்றிய பார்வையிழந்த ஒருவர் இப்பொழுது அமெரிக்காவில் பயிற்சி பெற்று வருகின்றார். இப்

பள்ளி மாணவர்கள் சென்னை மாணவர் மன்றத்தினர் நடத்தும் வள்ளுவர் வள்ளலார் போட்டிகளிலும், ஏனைய கதை, கட்டுரை, பேச்சுப் போட்டிகளிலும் கலந்துகொண்டு பார்வையுடைய மாணவர்களை வென்று வருகின்றனர்.

ஏனைய பள்ளிகளைப் போலவே இப்பள்ளியும் இயங்கி வருகின்றது. இப் பள்ளி மாணவர்கள் எல்லா விழாக்களையும் சிறப்பாகக் கொண்டாடு கின்றார்கள். பள்ளி இலக்கிய மன்ற வாயிலாகச் சிறந்த கேள்வியறிவை வளர்த்துக் கொள்ளுகின் றனர். அவர்கள் தமிழ் இலக்கியச் சுவையில் திளைத்து மகிழ்வுறுகின்றனர். ஆண்டுதோறும் வானொலி நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளு கின்றனர். உல்லாசப் பயணம் செல்கின்றனர். படக் காட்சிகளுக்கும் போகின்றனர். ஆண் பெண் இரு பாலாரும் சாரணர் இயக்கத்திற் சேர்ந்துள்ளனர். இங்கு மாணவர்களுக்கு மிகவும் சிறப்பான முறையில் இசைப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இப் பள்ளியில் பதினோராம் வகுப்பில் தேறிய மாணவர் இசையில் 'ஹையர்' வகுப்பில் தேர்ந்து, ஆசிரியர் பயிற்சியும் அடைந்து, இன்று சேலம் அரசினர் பார்வையிழந் தோர் பள்ளியில் இசையாசிரியராகப் பணியாற்று கிறார்.

இப்பள்ளி மாணவர்கள் நினைத்த இடத்திற்குச் செல்வதற்குரிய அறிவாற்றலும் துணிவும் பெற்றுத் திகழ்கிறார்கள். இவர்களிடத்தில் நல்ல ஒற்றுமை நிலவு கிறது. ஒருவருக்கொருவர் மரியாதையாகப் பேசிப் பழகுகின்றனர்; உதவி புரிகின்றனர். புதியவர்

களாக வந்து சேரும் பிள்ளைகளுக்குப் பழைய மாண வர்கள் உதவியளிக்கிறார்கள். எழுத்தறிவையும் தொழிற் பயிற்சியையும் புதிய மாணவர்களுக்குப் பழைய மாணவர்கள் கற்பிக்கின்றனர். இம் மாண வர்களிடையே காணப்படும் ஊக்கம், உழைப்பு, விடாமுயற்சி, பொறுமை ஆகிய நற்பண்புகளை யாவரும் கடைப்பிடித்து ஒழுகுவோமாக!

அருஞ்சொற் பொருள்

பார்வை யிழந்தவர்-குருடர். சேவை-தொண்டு. உள வியல்-மனோதத்துவம். அண்மை-பக்கம். திளைத்து-முழுகி.

வினாக்கள்

1. பார்வை யிழந்தவர் பள்ளி எங்குள்ளது?
2. விக்டரி மிமோரியல் பள்ளி எவ்வாறு உண்டாயிற்று?
3. உயர்திரு. 'பெல்' அவர்கள் பார்வையிழந்தவர்களுக் காகச் செய்த சேவையை விளக்குக.
4. திரு. ஜோசப் அவர்கள் இப்பள்ளியின் தலைவரான போது ஏற்பட்ட மாற்றம் யாது?
5. திரு. பி. ஏ. நந்தகோபால் அவர்கள் ஆற்றும் பணி யாது?
6. பூவிருந்தவல்லி பார்வை யிழந்தவர் பள்ளியில் எத்தனை மாணவர்கள் படிக்கின்றார்கள்?
7. பார்வை யிழந்தவர்கள் எவ்வாறு எழுதுகின்றனர்? எவ்வாறு படிக்கின்றனர்?
8. 'வில்லியம் மெக்பர்சன்', 'ஹெலன் கெல்லர்'— குறிப்பு வரைக.
9. பார்வை யிழந்தவர் பள்ளி மாணவர்கள் செய்யும் வேலைகளை விளக்கி எழுதுக.
10. பார்வை யிழந்தவர் பள்ளியில் படித்தவர்கள் ஏவ்வாறு பிழைக்கின்றனர்?

## 14. தேசிய ஒருமைப்பாடு

தேசிய ஒருமைப்பாடு என்பது வீட்டுக்கு வீடு, ஊருக்கு ஊர், நாட்டுக்கு நாடு நல்ல நட்புறவும், ஒத்துழைப்பும், ஒருவருக்கொருவர் உதவியும் கொண்டு வாழ்வதற்கு வேண்டிய ஒற்றுமை மனப் பான்மையை வளர்த்துக்கொள்வதே ஆகும். இத் தேசிய ஒருமைப்பாட்டு உணர்வில் நம் பாரத நாடு எந்த நாட்டிற்கும் குறைந்ததில்லை. இந்தியநாட்டின் விடுதலை வீர வரலாற்றை ஒருமுறை படித்துப் பார்த்தால் நம் நாட்டினர் எத்தகைய தேசிய ஒருமைப்பாடுடையவர்களாக வாழ்ந்தார்கள் என் பது புலனுகும். தேசிய ஒருமைப்பாடு என்னும் உணர்வு சத்தியம், அகிம்சை, சகோதரத்துவம் என்பனவற்றின் அடிப்படையில் எழுந்த ஒன்ருகும்.

இந்திய மக்களின் தேசிய ஒருமைப்பாட்டைச் சோதித்தறிய உலகத்திற்கு ஒரு வாய்ப்பளித்தது போல முதலில் சீனுவும், அடுத்துப் பாகிஸ்தானும் எல்லைப்போரை எழுப்பித் தொல்லை பல விளைத்தன. அப்பொழுது பெற்ற தாயும், பிறந்த பொன்னுடும் நற்றவ வானிலும் நனி சிறந்தனவாகக் கொண்ட பாரத மக்கள் பல்வேறு பண்பாடுகளும், பழக்க வழக்கங்களும், பல இனங்களும், மொழிகளும் உடையவர்களாயினும் அனைவரும் பாரதத் தாயின் மக்கள் என்னும் ஒற்றுமை உணர்வை ஒருசேரக் காட்டினர். தன்னலங் கருதி முறைகேடான செயல்

களில் ஈடுபட்ட மாற்ருர்களுக்குப் பாரதம் பணியாமல் தலைநிமிர்ந்து நின்றது.

சமாதானத்தை விரும்பும் கொள்கை கொண்ட நம் பாரதத்தின்மீது பாகிஸ்தான் ஆக்கிரமிப்புச் செய்தபோது, தாய்த்திரு நாட்டின் மானம் காக்க —இந்த மண்ணின் புனிதத் தன்மையைக் காக்க— தன் தன்மானங் காக்கவேண்டிய சூழ்நிலையில் நாடு போர்க்கோலம் பூண நேரிட்டது. அவ்வேளையில் கொடுத்த ஒத்துழைப்பும் செய்த தியாகங்களும் மக்கள் உள்ளத்தில் மறைந்து நிறைந்திருந்த ஒருமைப்பாட்டுணர்வை எடுத்துக்காட்டுவதற்குப் போதிய சான்ருகும்.

நாட்டின் சுதந்தரத்தைக் காக்க ஒவ்வொருவர் சேவையும் மிகமிகத் தேவை என்பதை எல்லாரும் உணரத் தலைப்பட்டனர். அந்த ஆண்டு தீபாவளியைச் சிக்கனமாகத் தியாகத் தீபாவளியாகக் கொண்டாடுமாறு தலைவர்கள் ஆணையிட்டார்கள். மக்கள் மனமுவந்து ஏற்றுக்கொண்டு மிகமிகச் சிக்கனமாகக் கொண்டாடினுர்கள். பண்டிகை என்னும் அடையாளமே காணப்படாத அளவுக்கு மக்கள் அனைவரும் ஒன்றுபட்டு ஒத்துழைத்தனர்.

இதைத் தொடர்ந்து உணவுப் பற்ருக்குறை ஏற்பட்டது. 'போர்க்காலத்தில் ஏற்பட்ட உணவு நெருக்கடியைச் சமாளிக்க வாரத்தில் ஒருவேளை நாட்டுமக்கள் அனைவரும் உணவுத் தியாகம் செய்ய வேண்டும். இறைச்சி உணவு சாப்பிடுகிறவர்கள் வாரத்தில் நான்கு நாட்களாவது அரிசி, கோதுமை சேர்த்துக்கொள்ளக்கூடாது. இப்படிச் செய்தால்

நாடு உணவு நிலையில் தன்னிறைவு பெறும்' என்று நாட்டு மக்களுக்கு மறைந்த நம் பாரதப் பிரதமர் திரு. லால்பகதூர் சாஸ்திரியார் அறிவித்ததைக் கேட்டு, மக்கள் ஒத்துழைப்புத் தந்தார்கள். அந்த ஒத்துழைப்பு, புத்துணர்ச்சியும் நல்லூக்கமும் வலிமையும் தரக்கூடியதாக இருந்தது. அவ்வேளையில் மக்கள் கேட்டதையெல்லாங் கொடுத்தார்கள்.

'இந்திய அரசாங்கம் வெளியிட்டுள்ள 15 ஆண்டுத் தங்கப் பத்திரங்களில் மக்கள் தங்கத்தையும் தங்க நகைகளையும் முதலீடு செய்து அரசாங்கத்தின் கரத்தை வலுப்படுத்த வேண்டும்' என்று அரசாங்க அறிக்கை வெளியானதும், தங்கமாகத் தங்கப் பத்திரத்திற்கும் பணமாகப் பாதுகாப்பு நிதிக்கும் வாரி வழங்கியது தமிழகம். பிற மாநிலங்களும் அவ்வாறே வழங்கின.

ஆடவரும் மகளிரும், இளைஞரும் முதியவரும், மாணவ மாணவிகள் அத்துணைப்பேர்களும் போட்டி போட்டுக்கொண்டு பாதுகாப்பு முயற்சிக்குக் காட்டிய ஒத்துழைப்பு இந்நாட்டு மக்கள் மட்டுமன்றி, வெளி நாட்டினரும் வியந்து பாராட்டும் அளவு ஓங்கி இருந்தது.

நாட்டு மக்களிடம் நிறைந்து காணப்படும் தேசிய ஒருமைப்பாட்டுணர்வைப் பகைவரை விரட்டி அடித்து நாட்டை மீட்கும் அளவோடு நிறுத்தாமல், 'போர்முனை வெற்றி பெறவேண்டுமானல் ஏர்முனையில் வெற்றி கண்டாக வேண்டும்' என அவ்வுணர்வை ஏர்முனைக்கு இழுத்து வந்தார் காலஞ்சென்ற நம் பாரதப் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரியார் அவர்

கள். "ஜவானுக்கு ஜே!" என்று சொன்ன மறுநொடி யிலே, "கிசானுக்கு ஜே!" என வீரமுழக்கமிட்டார். நாட்டின் தற்காப்புக்குப் போர்முனையும் ஏர்முனை யும் மிகமிகத் தேவை என்பதை நன்கு உணர்ந்த அவர், "பெரிய நிலக்கிழாராக இருந்தாலும் அல்லது காணி நிலமுடைய சிறிய உழவராக இருந்தாலும் இப்போது உற்பத்தி ஒரு மணி தானியம் என்றால், அதை இரண்டு மணி தானியங்களாகப் பெருக்க உறுதிகொள்ளவேண்டும். படைவீரன் நாட்டுக்குத் தன் இன்னுயிரைக் கொடுக்கிறான். இந்த நிலையில் நம் விவசாயிகளிடம் நாம் கேட்பதெல்லாம் உங்கள் ஒத் துழைப்பைத் தாரீர் என்பதுதான்" என்று கூறினார்.

தலைவரின் அன்புரையைக் கேட்ட உழவர்கள் ஊக்கங்கொண்டுழைத்தனர். விளையுளைப் பெருக்கு வதில் கண்ணுங் கருத்துமாக உள்ளனர். உழவர் களுக்கு விடுத்த வேண்டுகோளை ஏனைய தொழி லாளர்களும் ஆசிரியப் பெருமக்களும் ஏற்று அதிக நேரம் நாட்டுக்காக உழைத்து வருவது கண் கூடாகும்.

இன்று சிறுவர்களாக இருக்கும் நீங்களே இனி இந்த நாட்டினை ஆளப்போகின்றீர்கள். உங்களிடத் தில் காணப்படும் தேசிய ஒருமைப்பாடே வருங்கால இந்தியாவை வாழவைப்பதாகும். அதற்கான நல் லறிவையும் ஒற்றுமையுணர்வையும் வளர்த்துக் கொள்ளும் வகையிலேயே அன்றாடம் இறைவழி பாட்டுக் கூட்டத்தில் மாணவர்கள் தேசிய ஒருமைப் பாட்டு உறுதிமொழியாக, "இந்தியா என்னுடைய நாடு. இந்நாட்டில் வாழ்கின்ற ஆண் பெண் அனை

வரும் என் உடன்பிறந்தவர்கள். என் நாட்டின்பால் நான் அன்புடையேன். அதனுடைய வளமான பலவகைப்பட்ட பண்பாட்டு இயல்புகளை நினைந்து பெருமையடைகிறேன். இத்தகைய பழம் பெருமை யுடைய நாட்டின் குடிமகனாக இருப்பதற்கு உரிய தகுதிகளை அடைய நான் முயல்வேன். என்னுடைய பெற்றோரிடத்தும், ஆசிரியரிடத்தும், ஏனைய பெரி யோரிடத்தும் பணிவுடன் நடந்து கொள்வேன். அனைவரிடத்தும் பண்புடன் பழகுவேன். என் னுடைய நாட்டிற்கும் அதனுடைய மக்கட்கும் தொண்டு செய்ய உறுதி கூறுகிறேன். என் நல்வாழ்வு அவர்தம் நலத்தையும் வளமான வாழ்க்கையையுமே பொறுத்திருக்கின்றது'' என்று சிந்தையும் மொழியும் ஒன்றுபட்டிசைக்கக் கேட்கின்றோம். இவ்வித்து நல்ல தேசிய ஒருமைப்பாட்டுணர்வெனும் பயிரை விளை விக்கும் என்பதில் ஐயமில்லை.

### அருஞ்சொற் பொருள்

சோதித்து - ஆராய்ந்து. முறைகேடு - நீதிகெட்ட. மாற்றார்-பகைவர். மானம்-பெருமை. சேவை-தொண்டு. சிந்தை-மனம்.

### வினாக்கள்

1. தேசிய ஒருமைப்பாடு என்றால் என்ன?
2. இந்திய தேசிய ஒருமைப்பாடு எப்பொழுது வெளி யாயிற்று?
3. தேசிய ஒருமைப்பாட்டுக்கு நாட்டு மக்கள் எவ்வெவ் வகையில் ஒத்துழைத்தார்கள்?
4. திரு. லால்பகதூர் சாஸ்திரியார் விவசாயிகளுக்கு விடுத்த வேண்டுகோள் என்ன?
5. மாணவர்கள் மேற்கொள்ளும் உறுதிமொழியின் கருத்தினை விளக்குக.

## 15. உலகமும் உயிர்களும் தோன்றிய விந்தை

உலகமும் உயிர்களும் தோன்றிய விந்தையை என்னென்று சொல்வது? உலகுக்கு முதல்வன் இறைவன் ஆவான். அவ்விறைவன் மேலுள்ள வானுலகு எங்கும் நிறைந்தும், கீழுள்ள மண்ணுலகு எங்கும் நிறைந்தும், அவற்றிற்கு அப்பாலுமாய் விளங்குவான். எங்கும் விளங்குகின்ற ஒளிமேனியன், கணிக்கப்படும் சுட்டுப்பொருள் அனைத்தையும் கடந்து நிற்கும் அளவிலாத் தன்மையன்; மெய்ஞ் ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடர்; வாலறிவுடையவன். அவ்விறைவனே அண்டங்களையும், உலக உயிர்களையும் படைத்துக் காத்து அழித்து அருளிச் செய்கின்றான்.

'பரம்பொருளினின்றும் ஆகாயம் தோன்றிற்று; அதனினின்றும் காற்றுத் தோன்றிற்று; அதனினின்றும் தீத் தோன்றிற்று. அதனினின்றும் நீர் தோன்றிற்று; அதனினின்றும் நிலம் தோன்றிற்று' எனப் 'பரிபாடல்' என்னும் பழந் தமிழ் நூல் பகர்கின்றது. வேதத்துள்ளும் இவ்வாறே கூறப் பட்டுள்ளது. உலகம் ஒடுங்குவதும் இம்முறையிலே தான் நடைபெறும். நிலம் நீரிலும், நீர் தீயிலும், தீ காற்றிலும், காற்று வானிலுமாக மறையுமென ஆன்றோர் ஆராய்ந்து கூறியுள்ளனர்.

இவ்வுலகம் ஏறக்குறைய 500 கோடி ஆண்டுகளுக்குமுன் தோன்றிற்று என்று அறிஞர்கள் ஆராய்ந்து கூறுகின்றார்கள். நாம் காணும் சூரிய

னும் அதனைச் சுற்றியுள்ள கோள்களும் சுமார் 400 கோடி ஆண்டுகளுக்குமுன் தோன்றின. நாம் வாழும் இப்பூமியும் அதனைச் சுற்றியுள்ள கோள்களும் ஒரு காலத்தில் ஞாயிற்றின் பகுதிகளாகவே இருந்தன.

ஞாயிறு இப்பொழுது காணப்படுவதைக் காட்டி லும் பெரிதாகவும், வெப்பம் உடையதாகவும், ஒளி யுடையதாகவும் இருந்தது. அது வானில் தன்னைத் தானே சுற்றிக்கொண்டிருந்த பொழுது அதிலிருந்து தெறித்து விழுந்த துண்டுகளும் அவ்வாறே சுற்றி வரத் தொடங்கின. சூரியனிலிருந்து சிதறிய துண்டு தான் இந்தப் பூமி. இதிலிருந்து சிதறிய துண்டுதான் திங்கள். திங்கள் நிலத்தைவிடச் சிறியது. அது பூமியைவிடச் சீக்கிரமாகக் குளிர்ச்சியடைந்து விட்டது. பூமி குளிர்வதற்கு நெடுங்காலமாயிற்று. சூரியனும் நாளுக்கு நாள் வெப்பம் குறைந்து வரு கிறது. எனினும், அது பூமியைப்போல் குளிரப் பல கோடி ஆண்டுகள் பிடிக்கும்.

அழற்பிழம்பாய், அனல் ஆவியை உமிழ்ந்து கொண்டு இருந்த இப்பூமி படிப்படியே தணியத் தொடங்கிற்று. இப்பொழுது ஏறக்குறைய அறுபத்து நான்கு கிலோமீட்டர் தொலைவில் கனன்றுகொண் டிருக்கின்றது. தணிவு ஏற்பட ஏற்பட அனல் நின்று நின்று வெம்மை அலைகளைக் கொழித்துச் சென்றது. அவ்வலைகள் சில இடங்களில் வன்மையாக வீசின; சில இடங்களில் மென்மையாக வீசின; சில இடங் களில் இடைமையாக வீசின. அவற்றின் தன்மைக்கு ஏற்றவண்ணம் நிலத்தில் தட்பமும் வெப்பமும் தவழும்.

அனல் முதன்முதல் தணியத் தொடங்கிய இடம் தமிழ்நாடு. இஃது ஆராய்ச்சியாளர் கண்ட உண்மை. தமிழ்நாட்டின் தட்பவெப்ப நிலையோ வன்மையாகவும் இல்லை; மென்மையாகவும் இல்லை. இடைமையதாக உள்ளது.

பூமி குளிர்ச்சியடைந்த பொழுது காற்றிலுள்ள நீராவி முழுவதும் குளிர்ந்து மேகமாகிப் பெரு மழையாகப் பொழிந்தது. இவ்வாறு மழை பெய்ததால் நிலத்தில் இருந்த பள்ளங்களிலெல்லாம் நீர் நிரம்பிற்று. அதுவே பெருங் கடலாகக் காட்சியளிக்கின்றது.

பூமியை இருளில் மூழ்கடித்துக் கொண்டிருந்த மேகங்கள் நிலப்பரப்பின் வெப்பம் நீரின் கொதிநிலைக்குக் கீழ் வந்தவுடன் ஒன்றுகூடி இறுகின. அவை மழையைக் கொட்டின. பல ஆண்டுகள் தொடர்ந்து மழை பெய்து பூமியின் பரப்பு சமநிலைக்கு வந்தது. அதனால்தான் நமது பூமியின் பரப்பில் ஏறக்குறைய மூன்றில் இரண்டு பங்கு நீர்ப்பரப்பாக உள்ளது. இந் நிலப்பரப்பில் உயிரினங்கள் தோன்றத் தொடங்கிய காலம் சுமார் 300 கோடி ஆண்டுகளுக்கு முன்னதாகும். முதலில் கடலில் உயிரினங்கள் தோன்றிப் படிப்படியாக நிலத்தில் தோன்றலாயின.

இவ்வுலகிலுள்ள தாவரம், ஊர்வன, நீர்வாழ்வன, புள், விலங்கு, மக்கள் என்னும் பிறப்புக்களில் ஒவ்வொன்றையும் பல்வேறு வகைகளாக இக்காலத்து விஞ்ஞான நூலுடையார் பகுத்துள்ளனர். இதனையே நம் மாணிக்கவாசகப் பெருமானார் தாம் இயற்றிய 'திருவாசக'த்தில் தெளிவுபடுத்தியுள்ளார். 'உலகத்

தோற்றத்தில் கற்பாறை அணுக்களில் அடங்கிக் கிடந்து, பின் புல்லாகியும், அடர்ந்த புற்செடிகளாகியும், மரங்களாகியும் படைக்கப்பட்டு, நிகழ்கின்ற பலகோடி நிலையியற் பொருள்களுள்ளும், புழு, பாம்பு முதலிய ஊர்வனவாகியும், பறப்பனவாகியும், விலங்குகளாகியும், மக்களாயும், பேயினங்களாயும், பூதகணங்களாயும், வலிய அசுரராயும், முனிவராயும், விண்ணவராயும் படைக்கப்பட்டு இயங்குகின்ற பல கோடி விலங்குகளுள்ளும் அடங்கிய எல்லாவகையான பிறப்பினும் உடல் எடுத்து இறந்து உழன்று அலுத்தேன்' என்று அவர் மொழிந்துள்ளார்.

கி. மு. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுந்த 'தொல்காப்பியம்' என்னும் தமிழ்நூல் உயிர்களின் வளர்ச்சி முறையைப்பற்றித் தெளிவுபடுத்தியுள்ளது. அந்நூலை இயற்றியவர் தொல்காப்பியர் ஆவார். அவர்,உயிர்களை அறுவகையாக்கினர். புல்லும் மரமும் அவற்றின் இனமும் ஒன்றனை அறியும் ஓரறிவுடைய உயிர் என்றும், சிப்பி சங்கு முதலியன உற்றறிதலாகிய மெய்யுணர்வோடு சுவையையும் அறியும் ஈரறிவுடைய உயிர் என்றும், கறையான் எறும்பு முதலியன உற்றுணர்ந்து மீடலும், நாச்சுவை கோடலும், நெய்யுள்வழி மோந்தறிதலுமென மூன்றறிவினையுடைய உயிர் என்றும், தும்பி வண்டு முதலியன மேற்கூறிய மூன்றனேடு கண்ணுணர்வையும் பெற்றுள்ள நாலறிவுயிர் என்றும், மனவறிவில்லா மானிடரும், விலங்கு, புள் முதலியனவும் அந்நாலறிவோடு செவியறிவையும் கொண்டுள்ள காரணத்தால் ஐயறிவுயிர் என்றும், ஐம்புலன்க

ளோடு ஆகிய மனவறிவையும் உடைய மக்கள் ஆறறிவுயிர் என்றும் உயிரின் வகைகளைக் காரணத்தோடு முறைப்படுத்திக் காட்டியுள்ளார்.

இவ்வாறு இறைவனிலிருந்து நிலம், நீர், தீ, காற்று, வானம் என்னும் ஐம்பொருள்களும், ஞாயிறு, திங்கள், விண்மீன்கள் முதலிய யாவும் தோன்றியன எனவும், பிறகு நிலத்தில் புல் முதலிய ஓரறிவுயிரிலிருந்து படிப்படியே ஆறறிவுயிர்கள் வரை வளர்ந்துள்ளன எனவும் அறிகிறோம்.

### அருஞ்சொற் பொருள்

கணிக்கப்படும்-கணக்கிடப்படும். மிளிர்தல்-விளங்குதல். வாலறிவு-தூய்மையான அறிவு. ஒடுங்குவது-மறைவது. அழற்பிழம்பு-நெருப்புருண்டை.

### வினாக்கள்

1. இறைவனின் தன்மையைக் கூறுக.
2. உலகம் தோன்றுவதும் மறைவதும் எம்முறையில்?
3. உலகம் தோன்றியது எப்பொழுது?
4. ஞாயிறு எப்பொழுது தோன்றிற்று?
5. பூமி எவ்வாறு உண்டாயிற்று?
6. அனல் முதன்முதல் தணியத் தொடங்கிய இடம் எது?
7. கடல் எவ்வாறு உண்டாயிற்று?
8. மாணிக்கவாசகர் உலகமும் உயிர்களும் தோன்றிய முறையை எவ்வாறு விளக்கியுள்ளார்?
9. உயிர்களின் வளர்ச்சியைத் தொல்காப்பியர் எங்ஙனம் மொழிந்துள்ளார்?

---

# இலக்கணம்

## தோற்றுவாய்

தமிழ் உலக மொழிகளுள் முதன்மையான மொழியாகும். காரணம், இதன் இயல்பும் எளிமையும் இனிமையுமேயாகும். தமிழ் எழுத்துக்களைத் தனித்துக் கூறினாலும், சொற்களாகச் சேர்த்துக் கூறினாலும் ஒரே தன்மையாக ஒலிக்கும் இயல்புடையனவாகும். சொற்கள் ஒன்றோடொன்று சேருங்காலத்தில் தோன்றல் திரிதல் கெடுதல் என்னும் மூன்று வகையில் புணரும். சொல் நயமும், பொருள் நயமும், ஓசை நயமும் உண்டாக்கும் தன்மை தமிழ் எழுத்துக்களுக்கே உரிய தனித் தன்மையாகும். இவையே தமிழின் இயல்புக்கும் எளிமைக்கும் இனிமைக்கும் காரணங்களாகும்.

தமிழ் நமது தாய்மொழி. தமிழ் என்னும் சொல்லுக்கு இனிமை என்பது பொருள். மொழியைத் திருத்தமாகப் பேசவும், எழுதவும் நமக்குக் கற்பிப்பதே இலக்கணமாகும். தமிழ் இலக்கணம் ஐந்து வகைப்படும். அவை எழுத்து இலக்கணம், சொல் இலக்கணம், பொருள் இலக்கணம், யாப்பு இலக்கணம், அணி இலக்கணம் என்பனவாம்.

தமிழ் இலக்கணங்களில் மிகப் பழமையான நூல் அகத்திய முனிவரால் இயற்றப்பட்ட 'அகத்தியம்' என்பர். தொல்காப்பியரால் இயற்றப்பட்ட 'தொல்காப்பியமும்', பவணந்தி முனிவரால் இயற்றப்பட்ட 'நன்னூலும்' இந்நாளில் சிறந்த இலக்கண நூல்களாக நமக்குக் கிடைத்துள்ளன. அவற்றை முறையாகக் கற்கவேண்டியது தமிழ்மக்களுடைய கடமையாகும்.

# I. எழுத்து

எழுத்தாவது மொழிக்குக் காரணமான ஒலி. எழுத்தின் ஒலியைக் காதால் கேட்கும்போது ஒலியெழுத்து என்றும், அதனையே கண்ணால் காணுமாறு வரையும்பொழுது வரியெழுத்து என்றும் கூறப்படும்.

மொழிக்கு முதற் காரணமான ஒலியன்றித் தும்முதல், இருமுதல், கனைத்தல், முற்குதல், கத்துதல், கூவுதல் ஆகிய ஓசைகள் எழுத்தாகமாட்டா.

எழுத்துக்கள் இரண்டு வகைப்படும். அவை முதலெழுத்து, சார்பெழுத்து என்பனவாம்.

## 1. முதல் எழுத்துக்கள்

மொழியெனப்படுவது ஒரு குடும்பம். குடும்பத்திற்கு முதன்மையானவர்கள் தந்தையும் தாயும் ஆவார்கள். அண்ணன், அக்காள், தம்பி, தங்கை, மாமன், அத்தை ஆகிய உறவினர்கள் எல்லாரும் ஏற்படுவதற்கு முதன்மையாக இருப்பவர்கள் அவர்களே. அவ்வாறே உயிர்மெய் முதலிய பிற எழுத்துக்களெல்லாம் தோன்றுவதற்கு முதலாக உள்ளவை முதல் எழுத்துக்கள் ஆகும். அவை உயிரெழுத்து, மெய்யெழுத்து என இருவகைப்படும்.

நாமெல்லாரும் இப்பொழுது உயிரோடு கூடியிருக்கிறோம். நம் உடம்பில் கலந்திருக்கின்ற உயிர் உடலை விட்டுப் பிரிந்துபோனால் பிறகு உடல் மட்டும் தனித்து இயங்காது. நம் உயிர் தனித்தும் இயங்கும்; உடம்போடு சேர்ந்தும் இயங்கும். அவ்வாறே உயிர் எழுத்துக்களுள் சில எழுத்துக்கள் தனித்தும், வேறு சில எழுத்துக்களோடு சேர்ந்தும் ஒலிக்கும். இவ்வாறு ஒலிக்கும் எழுத்துக்களுக்கு உயிரெழுத்துக்கள் என்று பெயர்.

உயிரெழுத்துக்கள் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ எனப் பன்னிரண்டாம்.

உடம்பு உயிரோடு சேர்ந்தல்லது இயங்காது. அது போல 'க்' முதலிய மெய்யெழுத்துக்கள் 'அ' முதலிய உயிரெழுத்துக்களோடு சேர்ந்தன்றி மொழிக்கு முதலில் வாரா. இங்ஙனம் உயிருக்கு இடமாகிய மெய்போல் வரும் எழுத்துக்கள் மெய்யெழுத்துக்கள் எனப்படும்.

மெய் எழுத்துக்கள் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் எனப் பதினெட்டாம்.

உயிரெழுத்துக்கள் பன்னிரண்டும், மெய் எழுத்துக்கள் பதினெட்டும் ஆகிய முப்பது எழுத்துக்களும் தமிழ்மொழிக்கு முதன்மையான எழுத்துக்களாகும். இவை உயிர்மெய் முதலியன பிறப்பதற்கு முதலாக உள்ளன. மேலும், தமிழ்மொழியிலுள்ள எல்லாச் சொற்களுக்கும் முதற் காரணமாக உள்ள எழுத்துக்கள் உயிரெழுத்தும் மெய் யெழுத்துமேயாம். ஆதலால், அவ்வெழுத்துக்கள் முத லெழுத்துக்கள் எனப்பட்டன.

"உயிரு முடம்புமா முப்பது முதலே."

(நன்னூல், சூத்திரம், 59)

## 2. சார்பு எழுத்துக்கள்

உயிரும் மெய்யும் ஆகிய முதலெழுத்துக்களைப் போன்று தனித்து வருதலின்றி, அம் முதலெழுத்துக் களையோ அன்றி ஒரு சொல்லையோ சார்ந்து வரும் எழுத்துக்கள் சார்பெழுத்துக்கள் எனப்படும்.

அச் சார்பெழுத்துக்கள் பத்து வகைப்படும். அவை:

| | |
|---|---|
| 1. உயிர்மெய் | 6. குற்றியலுகரம் |
| 2. ஆய்தம் | 7. ஐகாரக்குறுக்கம் |
| 3. உயிரளபெடை | 8. ஔகாரக்குறுக்கம் |
| 4. ஒற்றளபெடை | 9. மகரக்குறுக்கம் |
| 5. குற்றியலிகரம் | 10. ஆய்தக்குறுக்கம் |

என்பனவாம்.

## (1) உயிர்மெய்

தமிழ் மொழியில் உயிர், மெய் என்னும் முதலெழுத்துக்கள் மட்டுமே இருக்குமாயின், வேலன் என்பதை 'வ் ஏ ல் அன்' என்றுதானே எழுதவேண்டியதாகும். அவ்வாறு எழுதினால் எழுத்துக்கள் பலவாதலோடு காலமும் மிகுதியாகும். அதனால் மெய்யெழுத்துக்களின் வடிவங்களோடு உயிரெழுத்துக்களின் வடிவங்களின் ஒரு பகுதியைச் சேர்த்துத் தனித்தனி எழுத்துக்களாக அமைத்துள்ளனர். அவை உயிரும் மெய்யும் ஒன்றாகச் சேர்ந்தனவாதலின், அவற்றிற்கு உயிர்மெய்யெழுத்து என்னும் பெயர் ஏற்படுவதாயிற்று. உயிர்மெய்யெழுத்துக்களில் மெய்யொலி முன்னும், உயிரொலி பின்னுமாக ஒலிக்கும். பதினெட்டு மெய்யின்மேலும் பன்னிரண்டு உயிரும் தனித்தனி ஏற இருநூற்றுப் பதினாறு உயிர்மெய்யெழுத்துக்கள் உண்டாகும். அவை உயிரையும் மெய்யையும் சார்ந்து பிறப்பதனால் சார்பெழுத்துக்களாம்.

## (2) ஆய்தம்

மூன்று புள்ளிகளை (ஃ) மட்டுமே உடைய ஒரெழுத்திற்கு ஆய்தவெழுத்து என்பது பெயராகும். இவ்வெழுத்துத் தனிநிலை யுடையது. அஃதாவது, உயிரெழுத்துக்களைப்போல் தானாக ஒலிப்பதற்கும் வாராது; மெய்யெழுத்துக்களைப்போல் உயிரெழுத்துக்களோடு சேர்ந்து ஒரெழுத்தாகவும் வாராது. முதலில் உயிர்க்குற்றெழுத்து அல்லது உயிர்மெய்க் குற்றெழுத்துக்களில் யாதேனும் ஒன்று வரும்; ஈற்றில் வல்லின உயிர்மெய்யெழுத்துக்களுள் யாதேனும் ஒன்றே நிற்கும். இடையே மன்னனைப் போலச் சிறப்புடன் அஃது அமைந்திருக்கும். ஆய்தவெழுத்தினை 'அஃகேனம்' என்று வழங்குவர். உயிரையும் உயிர்மெய்யையும் சார்ந்து வருதலால் ஆய்தவெழுத்து சார்பெழுத்தாயிற்று.

### (3) உயிரளபெடை

பாட்டில் ஓசை குறையுமிடத்து மொழிக்கு முதல், இடை, கடை என்னும் மூன்றிடங்களிலும் நெட்டெழுத்து ஏழும் அவ்வோசையை நிறைக்கத் தத்தம் மாத்திரையின் மிக்கு ஒலிக்கும். அதற்கு அடையாளமாக அவ்வந் நெட்டெழுத்திற்கு இனமாகிய குற்றெழுத்துக்கள் வரிவடிவில் அடையாளமாய் வரும்.

ஓஒதல், உறூஉர், படாஅ என உயிர் எழுத்துக்கள் அளபெடுத்துள்ளமை காண்க.

செய்யுள் ஓசை குறையாதவிடத்தும் இனிய ஓசை தரவும் சொல்லிசை நிறைக்கவும் அளபெடுப்பதுண்டு. அவை இன்னிசையளபெடை, சொல்லிசையளபெடை எனப் பெயர்பெறும்.

### (4) ஒற்றளபெடை

இலங்ங்கு வெண்பிறை
கலங்ங்கு நெஞ்சமிலை

என்பனபோலச் செய்யுளில் ஓசை குறையும்போது மெய்யெழுத்துக்கள் அளவில் நீண்டு ஒலிக்கும். அவை ஒற்றளபெடை எனப்படும்.

### (5) குற்றியலிகரம்

எனப்படுவது + யாது = எனப்படுவதியாது. — இத்தொடரில் எனப்படுவது என்பதில் உள்ள 'து' என்பது குற்றியலுகரம். அதற்கு முன் யா வரும்போது குற்றியலுகரத்திலுள்ள உகரம் இகரமாகத் திரிகிறது. இவ்வாறு குற்றியலுகரம் திரிந்து வரும் இகரம் குற்றியலிகரம் எனப்படும்.

### (6) குற்றியலுகரம்

ஆறு, பஞ்சு என்பனபோலத் தனிக் குற்றெழுத்தல்லாத மற்றைய வெழுத்துக்களின் பின்னே சொல்

விறுதியில் வல்லின மெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரங்கள் (கு, சு, டு, து, பு, று) ஓசையில் குறைந்து ஒலிக்கும். அவை குற்றியலுகரம் எனப்படும்.

### (7) ஐகாரக் குறுக்கம்

ஐப்பசி, இடைச்சங்கம், குவளை எனச் சொல்லின் முதல், இடை, கடையாகிய மூன்றிடங்களிலும் வரும் 'ஐ' என்னும் எழுத்து ஓசையில் குறைந்து ஒலிக்கும். இவ்வாறு ஓசை குறைந்து ஒலிக்கும் ஐகாரம், ஐகாரக் குறுக்கம் எனப்படும்.

### (8) ஔகாரக் குறுக்கம்

ஔவையார், மௌனம் என வரும் சொற்களில் ஔ என்னும் எழுத்தும் ஓசையில் குறைந்து ஒலிக்கும். இதுபோலக் குறைந்து ஒலிக்கும் ஔகாரம், ஔகாரக் குறுக்கம் எனப்படும்.

(ஐ, ஔ என்னும் இவ்விரண்டெழுத்துக்களும் அவ் வெழுத்துக்களைக் குறிக்கும்போது மட்டுமே குறுகாமல் ஒலிக்கும்.)

### (9) மகரக் குறுக்கம்

மருளும் என்பது மருண்ம் எனவும், போலும் என்பது போன்ம் எனவும் ளகர லகரந் திரிந்த ணகர னகரங்களை அடுத்து வரும் மகரம் தன் மாத்திரையிற் குறுகும். 'தரும் வளவன்'—இத்தொடரில் 'வ்' என்னும் மெய் யெழுத்தை அடுத்து முன்னே வரும் 'ம்' என்னும் எழுத்து ஓசையில் குறைந்து ஒலிக்கும். இவ்வாறு குறைந்து ஒலிக்கும் 'ம்' என்னும் எழுத்து மகரக்குறுக்கம் எனப்படும்.

### (10) ஆய்தக் குறுக்கம்

அல் + திணை — அஃறிணை, முள் + தீது — முஃடீது — இங்ஙனம் ல், ள் என்னும் எழுத்துக்கள் திரிந்து வரும்

ஆய்தவெழுத்து ஓசையில் குறைந்து ஒலிக்கும். அஃது ஆய்தக்குறுக்கம் எனப்படும்.

மேற்கண்ட யாவும் உயிரும் மெய்யுமாகிய எழுத்துக்களின் சார்பினுலேயே அளபெடுத்தும், குறுகியும் ஒலிக்கின்றன. ஆகவே, இவை பத்தும் சார்பெழுத்துக்கள் எனப்பட்டன.

''உயிர்மெய் யாய்த முயிரள பொற்றள
பஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.'' (நன். சூ. 60)

## 3. மாத்திரை

நீட்டல் அளவைக்கு 'மீட்டர்' என்றும், நிறுத்தல் அளவைக்குக் 'கிராம்' என்றும், முகத்தல் அளவைக்கு 'லிட்டர்' என்றும் தற்காலத்தில் அளவைகளுக்குப் பெயர்கள் உண்டு. அவ்வாறே எழுத்துக்களை ஒலிப்பதற்கும் கால அளவு உண்டு. உயிர் எழுத்துக்களில் அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தெழுத்துக்களைக் குறுக்கியும், ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்னும் ஏழெழுத்துக்களை நீட்டியும் ஒலிக்கின்ருேம். குற்றெழுத்தை எந்த அளவு ஒலிக்கவேண்டும், நெட்டெழுத்தை எந்த அளவு ஒலிக்கவேண்டும், மெய் எழுத்து, ஆய்த எழுத்து ஆகியவற்றை எந்த அளவு ஒலித்தல் வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ளுதல் இன்றியமையாததாகும். எழுத்துக்களை உச்சரிக்கவேண்டிய கால அளவுக்கு **மாத்திரை** என்பது பெயர்.

மாத்திரை என்னும் சொல்லுக்கு அளவை என்பது பொருளாகும். ஒருமுறை இயல்பாகக் கண் இமைக்கும் காலத்தை ஒரு மாத்திரை என்று கூறுவர். ஒருமுறை கையை நொடிப்பதும் ஒரு மாத்திரையாகும்.

'அ' என்று சொல்வதற்கும், ஒருமுறை கண்ணை இயல்பாக இமைப்பதற்கும் பிடிக்குங்காலம் சரியாக இருக்கும். ஆகவே, குற்றெழுத்திற்கு ஒரு மாத்திரை என்று தெரிந்துகொள்ளலாம்.

'ஆ' என்று சொல்வதற்கும், இரண்டு முறை கண்ணிமைப்பதற்கும் பிடிக்குங் காலம் சரியாக இருக்கும். இதிலிருந்து நெட்டெழுத்திற்கு இரண்டு மாத்திரை என்பதை நீங்கள் அறியலாம்.

உயிர்க்குறில் (அ), உயிர்மெய்க்குறில் (க)—ஒரு மாத்திரை.

உயிர்நெடில் (ஆ), உயிர்மெய் நெடில் (கா)—இரண்டு மாத்திரை.

| | |
|---|---|
| மெய் (க்), ஆய்தம்(ஃ) | —அரை மாத்திரை. |
| குற்றியலுகரம் (நாடு) | —அரை மாத்திரை. |
| குற்றியலிகரம் (நாகியாது) | —அரை மாத்திரை. |
| ஐகாரக் குறுக்கம் (ஐப்பசி) | —ஒரு மாத்திரை. |
| ஔகாரக் குறுக்கம் (ஔவையார்) | —ஒரு மாத்திரை. |
| மகரக் குறுக்கம் (தரும் வளவன்) | —கால் மாத்திரை. |
| ஆய்தக் குறுக்கம் (அஃறிணை) | —கால் மாத்திரை. |
| உயிரளபெடை (ஓஒதல்) | —மூன்று மாத்திரை. |
| ஒற்றளபெடை (இலங்ங்கு) | —ஒரு மாத்திரை. |

மெய்யெழுத்திற்கு மாத்திரை அரை. உயிர்க் குற்றெழுத்திற்கு மாத்திரை ஒன்று. ஒரு மெய்யெழுத்தோடு ஒருயிர்க் குற்றெழுத்துச் சேர்ந்தால், க்—$\frac{1}{2}$, அ-1 ஆக = $1\frac{1}{2}$ மாத்திரை என்று கணக்கிடலாம். அவ்வாறே க் + ஆ = கா. இதற்கு $2\frac{1}{2}$ மாத்திரை என்று கருதலாம். ஆனால், மெய் எழுத்து உயிர் எழுத்தோடு சேர்ந்தபோது உயிரின் ஒலியில் மெய்யின் ஒலி அடங்கிவிடுகின்றது. எனவே, உயிர்க் குற்றெழுத்தைப் போலவே உயிர்மெய்க் குற்றெழுத்திற்கும் மாத்திரை ஒன்றேயாகும்; உயிர்

நெட்டெழுத்தைப் போலவே உயிர்மெய் நெட்டெழுத்திற்கும் மாத்திரை இரண்டே ஆகும்.

மெய்யெழுத்தை உப்பு என்றும், உயிரெழுத்தை நீர் என்றும் வைத்துக்கொள்ளுங்கள். ஒரு லிட்டர் நீரில் அரை லிட்டர் உப்பைக் கொட்டி அது கரைந்துபோன பிறகு அளந்தால் ஒரு லிட்டர் நீர்தான் இருக்கும்; ஒன்றரை லிட்டர் இருக்காது. இவ்வெடுத்துக்காட்டு உயிர்மெய் மாத்திரைக்குப் பொருத்தமானதாகும்.

பண்டமாற்று, விளி, புலம்பல், இசை ஆகியவற்றில் எழுத்துக்கள் தமக்குரிய அளவு கடந்தும் ஒலிக்கும்.

தயிரோஒ தயிர் —பண்டமாற்று.
அம்மாஅஅ —விளி.
ஐயாவோஒ —புலம்பல்.

இசையில் நீண்டொலித்தலைப் பாடும்போது கேட்டறிக.

## 4. முற்றியலுகரம்

மெல்லினமெய் ங், ஞ், ண், ந், ம், ன்.—இவற்றோடு உகரம் சேர்ந்தால் ஙு, ஞு, ணு, நு, மு, னு என்றாகும். இவற்றிற்கு மெல்லின மெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரம் என்று பெயர்.

இடையினமெய் ய், ர், ல், வ், ழ், ள்.—இவற்றோடு உகரம் சேர்ந்தால் யு, ரு, லு, வு, ழு, ளு என்றாகும். இவற்றிற்கு இடையினமெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரம் என்று பெயர்.

வல்லினமெய் க், ச், ட், த், ப், ற்.—இவற்றோடு உகரம் சேர்ந்தால் கு, சு, டு, து, பு, று என்றாகும். இவற்றிற்கு வல்லின மெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரம் என்று பெயர்.

உகரம் தனக்குரிய ஒரு மாத்திரை அளவில் குறையாமல் ஒலிப்பது முற்றியலுகரமாகும்.

உரிஞு, மண்ணு, மநு, தும்மு, துன்னு என மொழியின் ஈற்றில் மெல்லின மெய்யின்மேல் ஏறி நிற்கும்

உகரமும், வாயு, உரு, நில்லு, செலவு, ஏழு, பள்ளு என மொழியின் ஈற்றில் இடையின மெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரமும், நகு, பசு, எடு, அது, தபு, அறு என ஒரு குற்றெழுத்தை அடுத்து வரும் வல்லின மெய்யின் மேல் ஏறி நிற்கும் உகரமும் முற்றியலுகரம் எனப்படும்.

மெல்லின மெய்யின்மேலும், இடையின மெய்யின்மேலும் ஏறி நிற்கும் உகரமும், தனிக் குற்றெழுத்தினுல் தொடரப்பட்ட வல்லின மெய்யின்மேல் ஏறி நிற்கும் உகரமும் முற்றியலுகரமாம்.

உகரம் தனித்து வரினும், தனிக் குற்றெழுத்தை அடுத்துவரினும், சொல்லின் முதல், இடை, கடை ஆகிய எவ்விடத்து வரினும் ஓசை குன்ருது ஆதலால், முற்றிய லுகரம் எல்லாவிடங்களிலும் வரும் என்று அறிந்து கொள்வீர்களாக.

## 5. குற்றியலுகரம்

மேற்கூறிய சார்பெழுத்துக்கள் பத்தனுள் குற்றிய லுகரமும் ஒன்று என்பதனை நீங்கள் அறிந்துள்ளீர்கள்.

குறுமை+இயல்+உகரம்=குற்றியலுகரம். ஒலியில் குறுகிய இயல்புடைய உகரம் என்பது அதன் பொரு ளாகும். குற்றியலுகரத்திற்கு அடையாளம் வல்லின மெய்யின்மேல் ஏறிய உகரம் (கு, சு, டு, து, பு, று) ஆறனுள் ஒன்று மொழிக்கு ஈற்றில் வரவேண்டும். அவை ஒரு குற்றெழுத்தை அடுத்து வரக்கூடாது. (ஒரு குற்றெழுத்தை அடுத்து வந்தால் முற்றியலுகர மாகும் என முன்னரே கண்டோம்.) ஒரு நெட் டெழுத்தை அடுத்து வரலாம். ஒன்றுக்கு மேற்பட்ட பல எழுத்துக்கள் தொடர்ந்தும் வரலாம்.

இதனுல், கு, சு, டு, து, பு, று என்னும் வல்லின மெய்யின் மேல் ஏறி நிற்கும் உகரங்கள் ஆறும் (நகு, பசு, எடு, எது, தபு, சுறு எனத்) தனிக் குற்றெழுத்தினை அடுத்து நிற்பின் ஓசை குறுகமாட்டா எனவும், ஏனைய

எழுத்துக்களை அடுத்து நிற்கும் இடங்களிலெல்லாம் உகரம் ஓசை குறைந்து ஒலிக்கும் எனவும் அறியலாகும். ஏனைய எழுத்துக்கள் ஆறு. அவை நெட்டெழுத்து, ஆய்த எழுத்து, உயிர் எழுத்து, வல்லெழுத்து, மெல் லெழுத்து, இடையெழுத்து என்பனவாகும்.

1. பாகு —கு, நெட்டெழுத்தினை அடுத்து வந்தது.
2. படகு — கு, உயிரெழுத்தினை ,,
3. பாக்கு — கு, வல்லெழுத்தினை ,,
4. பங்கு — கு, மெல்லெழுத்தினை ,,
5. தெள்கு —கு, இடையெழுத்தினை ,,
6. எஃகு —கு, ஆய்தவெழுத்தினை ,,

ஏனைய சு, டு, து, பு, று என்னும் எழுத்துக்களும் இவ்வாறே நெட்டெழுத்து முதலிய ஆறனையும் அடுத்து வரும்.

உகரம் எந்த எழுத்தை அடுத்து வருகின்றதோ அந்தத் தொடர்க் குற்றியலுகரம் என்று கூறவேண்டும். அவை நெடிற்றொடர்க் குற்றியலுகரம், ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம், உயிர்த்தொடர்க் குற்றிய லுகரம், வன்றொடர்க் குற்றியலுகரம், மென்றொடர்க் குற்றியலுகரம், இடைத்தொடர்க் குற்றியலுகரம் என்று பெயர் பெறும்.

### (1) நெடிற்றொடர்க் குற்றியலுகரம்

நாகு, காசு, ஏடு, காது, காபு, ஆறு.

நெடில் தொடர்க் குற்றியலுகரம் எப்போதும் இரண்டெழுத்து மொழியாகவே இருக்கும். முதல் எழுத்து உயிர் நெடிலாகவோ உயிர்மெய் நெடிலாகவோ இருக்கலாம். தனி நெட்டெழுத்தை அடுத்து வருதலி ஞலேயே இதற்கு நெடிற்றொடர்க் குற்றியலுகரம் எனப் பெயராயிற்று.

### (2) ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம்

எஃகு, கஃசு, அஃது—என்னும் குற்றியலுகரச் சொற்களின் ஈற்றெழுத்திற்கு அயலெழுத்து ஆய்த எழுத்தாக இருப்பதால், இவை ஆய்தத் தொடர்க் குற்றியலுகரம் எனப்படும்.

### (3) உயிர்த்தொடர்க் குற்றியலுகரம்

வரகு, பலாசு, சரடு, எருது, மரபு, வயிறு—இவ்வாறு உயிர் எழுத்துக்கள் ஈற்றுக்கு அயலெழுத்துக்களாகத் தொடர்ந்துவர, மொழியின் ஈற்றில் வல்லின மெய்யின் மேல் ஏறிய உகரம் வரின் உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் எனப்படும். இதில் ஈற்றுக்கு அயலாக வரும் உயிர்மெய் எழுத்து, குறிலாகவோ நெடிலாகவோ இருக்கலாம். நெடில்தொடர் நீங்கலாக ஏனைய தொடர்க் குற்றியலுகரங்கள் எல்லாம் இரண்டுக்கு மேற்பட்ட எழுத்துக்களையே பெற்றுவரும்.

வரகு என்பதில் 'ர' உயிர்மெய் எழுத்தாயினும் அதனைப் பிரித்தால் ர்+அ என்றாகும். கு—அகர உயிரை அடுத்து வந்துள்ளது எனக் கொள்ள வேண்டும். இவ்வாறே பிறவற்றையும் காண்க.

### (4) வன்றொடர்க் குற்றியலுகரம்

கொக்கு, அச்சு, எட்டு, பத்து, தப்பு, காற்று என்னும் குற்றியலுகரச் சொற்களில் ஈற்றுக்கு அயலில் உள்ள எழுத்துக்கள் க், ச், ட், த், ப், ற் என்னும் வல்லின மெய்களாகும். இவ்வாறு வல்லின மெய்யைத் தொடர்ந்துவரும் குற்றியலுகரம் வன்றொடர்க் குற்றியலுகரம் எனப்படும்.

### (5) மென்றொடர்க் குற்றியலுகரம்

பங்கு, நெஞ்சு, நண்டு, பந்து, செம்பு, நன்று என்னும் குற்றியலுகரச் சொற்களில் ஈற்றுக்கு அயலில்

உள்ள எழுத்துக்கள் ங், ஞ், ண், ந், ம், ன் என்னும் மெல்லின மெய்களாகும். இவ்வாறு மெல்லின மெய்யைத் தொடர்ந்துவரும் குற்றியலுகரம் மென்றொடர்க் குற்றியலுகரமாகும்.

### (6) இடைத்தொடர்க் குற்றியலுகரம்

வெய்து, மார்பு, சால்பு, மூழ்கு, தெள்கு என்னும் குற்றியலுகரச் சொற்களின் ஈற்றயலிலுள்ள ய், ர், ல், ழ், ள் என்பன இடையின மெய்களாகும். இவ்வாறு இடையின மெய்களைத் தொடர்ந்துவரும் குற்றிய லுகரங்கள் இடைத்தொடர்க் குற்றியலுகரம் எனப்படும்.

தனி நெட்டெழுத்தை அடுத்தும், உயிர், வல்லினம், மெல்லினம், இடையினம், ஆய்தம் ஆகிய எழுத்துக்களை ஈற்றுக்கு அயலெழுத்தாகத் தொடரப்பெற்றும் சொல்லின் இறுதியில் வல்லெழுத்துக்கள் யாதேனும் ஒன்றன் மேல் ஏறி வரும் உகரமானது தம்மியல்பாகிய மாத்திரையில் குறைந்து ஒலிக்கும். அது குற்றியலுகரம் எனப்படும்.

''நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடைத்
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேற் றொடரவும் பெறுமே.'' (நன். சூ. 94)

## 6. குற்றியலிகரம்

எனப்படுவது + யாது = எனப்படுவதியாது.
உனக்கு + யாவர் = உனக்கியாவர்.
கேள் + மியா = கேண்மியா.
செல் + மியா = சென்மியா.

குறுமை + இயல் + இகரம் = குற்றியலிகரம். இகரம் தனக்குரிய ஒரு மாத்திரை அளவிற் குறைந்து அரை மாத்திரை அளவாக ஒலிப்பதே குற்றியலிகரமாகும்.

குற்றியலுகர வீற்றுச் சொற்களுக்குமுன் வருமொழி முதலில் யகரம் வந்தால் அக் குற்றியலுகரம் இகரமாகத்

திரியும். அங்ஙனம் திரிந்த இகரமும், முன்னிலை அசைச் சொல்லாகிய மியா என்னும் சொல்லில் உள்ள இகரமும் குறுகி ஒலித்தலால் குற்றியலிகரம் எனப்படும்.

"யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய." (நன். சூ. 93)

பயிற்சி வினாக்கள்

1. முதலெழுத்து என்றால் என்ன?
2. முதலெழுத்துக்கள் எத்தனை வகைப்படும்?
3. உயிரெழுத்து, மெய்யெழுத்து — பெயர்க்காரணம் கூறுக.
4. சார்பெழுத்துக்கள் என்றால் என்ன? அவை யாவை?
5. மாத்திரை என்றால் என்ன?
6. எவ்வெவ் வெழுத்துக்கள் எத்தனை எத்தனை மாத்திரை பெற்று வரும்?
7. முற்றியலுகரமாவது யாது?
8. குற்றியலுகரமாவது யாது?
9. குற்றியலுகரம் எத்தனை வகைப்படும்? அவை யாவை?
10. குற்றியலிகரமாவது யாது?

# II. சொல்

## 1. பதம்

ஓர் எழுத்துத் தனித்தேனும் இரண்டு முதலாகத் தொடர்ந்தேனும் பிற பொருளைத் தருமாயின் அது பதமாகும். பதம், சொல், மொழி, கிளவி என்பன ஒரு பொருட் சொற்கள்.

ஓரெழுத்தாலான சொல் ஓரெழுத்து ஒருமொழி என்றும், இரண்டு முதலிய எழுத்துக்களாலான சொல் எழுத்துத் தொடர்மொழி என்றுங் கூறப்படும்.

ஆ, பூ—ஓரெழுத்தொருமொழி.

மணி, மலர்—எழுத்துத் தொடர்மொழி.

## 2. ஓரெழுத்தொருமொழி

தமிழிலுள்ள ஓரெழுத்தொருமொழிகள் நாற்பத்திரண்டாகும்.

உயிர்க்கூட்டத்தில் ஆறு நெட்டெழுத்துக்களும், மகரக் கூட்டத்தில் ஆறு நெட்டெழுத்துக்களும், த, ப, ந என்பவற்றுள் ஐந்து நெடிலும் ($3 \times 5 = 15$), க, வ, ச என்பவற்றுள் நான்கு நெடிலும் ($3 \times 4 = 12$), யகரத்தில் ஒரு நெடிலும், நொ, து என்னும் குற்றெழுத்துக்களும் ஓரெழுத்தொரு மொழிகளாகும்.

| | |
|---|---|
| ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ | 6 |
| மா, மீ, மூ, மே, மை, மோ | 6 |
| தா, தீ, தூ, தே, தை | 5 |
| பா, பூ, பே, பை, போ | 5 |
| நா, நீ, நே, நை, நோ | 5 |
| கா, கூ, கை, கோ | 4 |
| வா, வீ, வை, வௌ | 4 |
| சா, சீ, சே, சோ | 4 |
| யா | 1 |
| நொ, து | 2 |
| | 42 |

ஆ-பசு, ஈ-ஈ யென்னும் பறவை, ஊ-இறைச்சி, ஏ-அம்பு, ஐ-வியப்பு, ஓ-மதகு நீர் தாங்கும் பலகை.

மா-விலங்கு, மீ-மேல், மூ-மூப்பு, மே-மேன்மை, மை-கறுப்பு, மோ-மோத்தல்.

தா-பகை, தீ-நெருப்பு, தூ-தூய்மை, தே-தெய்வம், தை-ஒரு மாதம்.

பா-பாட்டு, பூ-மலர், பே-நுரை, பை-பசுமை, போ-செல்.

நா-நாக்கு, நீ-முன்னிலை ஒருமைப் பெயர், நே-அன்பு, நை-ஓர் இகழ்ச்சிக் குறிப்பு, நோ-நோய்.

கா-சோலை, கூ-பூமி, கை-சிறுமை, கோ-அரசன்.

வா-வருவாய், வீ-மலர், வை-வைக்கோல், வெள-கொள்ளை.

சா-பேய், சீ-இகழ்ச்சிக் குறிப்பு, சே-எருது, சோ-ஒலிக் குறிப்பு, அரண்.

யா-யாவை, நொ-துன்பம், து-ஓர் இகழ்ச்சிக் குறிப்பு.

### 3. பகாப்பதம்—பகுபதம்

**எழுத்துத் தொடர்மொழிகள் :** அணி, அறம், அழகு.

பதமானது பகாப்பதம், பகுபதம் என இருவகைப் படும்.

பகாப்பதமாவது சொல்லைப் பிரித்தால் பகுதி, விகுதி முதலிய பயனில்லாமல் ஒரு பொருளைக்காட்டும் இடுகுறி யாகிய சொல்லாம். அது பெயர்ப் பகாப்பதம், வினைப் பகாப்பதம், இடைப் பகாப்பதம், உரிப் பகாப்பதம் என நான்கு வகைப்படும்.

மண், பொன் — பெயர்ப் பகாப்பதம்.
வா, போ — வினைப் பகாப்பதம்.
மற்று, கொல் — இடைப் பகாப்பதம்.
உறு, தவ — உரிப் பகாப்பதம்.

பகுபதமாவது சொல்லைப் பிரித்தால் பகுதிக்கும் விகுதிக்கும் வேறுபொருள் உண்டாகி, காரணம் உடையதாய், புலவர்களால் அவ்வப்போது உண்டாக்கக் கூடியதாகும். அது பெயர்ப் பகுபதம், வினைப் பகுபதம் என இரண்டு வகைப்படும்.

பொன்னன், மலையன் — பெயர்ப் பகுபதம்.
செய்தான், கொடுத்தான் — வினைப் பகுபதம்.

### 4. பகுபத உறுப்புக்கள் :
### பகுதி, விகுதி, இடைநிலைகள்

பகுபத உறுப்புக்கள் ஆறு. அவை பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் என்பனவாகும். பகுபதம் ஆறு உறுப்புக்களில் பகுதி, விகுதி என்னும்

இவ்விரண்டு உறுப்புக்களை எப்போதும் பெற்றேவரும். ஏனைய உறுப்புக்களை ஏற்றபடி பெற்றும் பெருமலும் வரும்.

பகுபதத்தில் முதலில் நிற்பது பகுதியாகும். பகுதி-முதல்நிலை. இறுதியில் நிற்பது விகுதியாகும். விகுதி-இறுதிநிலை. பகுதிக்கும் விகுதிக்கும் இடையே நிற்கும் ஓர் உறுப்பு இடைநிலை எனப்படும். இடைநிலைக்கும் விகுதிக்கும் நடுவே வருவது **சாரியை** ஆகும். பகுதிக்கும் இடைநிலைக்கும் நடுவே வருகின்ற தோன்றல் முதலிய புணர்ச்சி விகாரம் **சந்தி** எனப்படும். பகுதியில் ஏற்படும் குறுக்கல், நீட்டல் முதலிய மாறுபாடு **விகாரம்** எனப்படும்.

### (அ) பெயர்ப் பகுபதத்தின் பகுதிகள்

பெயர்ப் பகுபதத்தின் பகுதிகள் பெரும்பாலும் பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் அறுவகைப் பெயர்ச்சொற்களில் வரும். சிறுபான்மை சுட்டிடைச் சொற்களும், எ, ஏ, யா என்னும் வினு இடைச்சொற்களும், மற்று, பிற முதலிய இடைச்சொற்களும், கடி போன்ற உரிச்சொல்லும் பெயர்ப் பகுபதத்தின் பகுதிகளாக வரும்.

| பகுபதம் | பகுதி | |
|---|---|---|
| பொன்னன் | பொன் | பொருள் அடியாகப் பிறந்தது. |
| ஊரன் | ஊர் | இடம் ,, |
| மாசியான் | மாசி | காலம் ,, |
| பல்லன் | பல் | சினை ,, |
| கரியன் | கருமை | குணம் ,, |
| ஊணன் | ஊண் | தொழில் ,, |

அவன், இவன், உவன் எனச் சுட்டிடைச் சொல்லடியாகவும், எது, ஏது, யாது என வினு இடைச்சொல் அடியாகவும், மற்றையான், பிறன் என இடைச்சொல்

அடியாகவும், கடியன் என உரிச்சொல்லடியாகவும் பகுபதத்தின் பெயர்ப் பகுதிகள் வரும்.

### (ஆ) பெயர்ப் பகுபதத்தின் விகுதிகள்

பெயர்ப் பகுபதத்தின் விகுதிகள் அன், ஆன், அள், ஆள், அர், ஆர், அ, து, இ, மார், மன், மான், கள், வை, தை, கை, பி, ன், ள், ர் என்னும் இவை போன்றனவாம்.

| பகுபதம் | விகுதி | பகுபதம் | விகுதி |
|---|---|---|---|
| குழையன் | அன் | வடமன் | மன் |
| குழையான் | ஆன் | கோமான் | மான் |
| குழையள் | அள் | கோக்கள் | கள் |
| குழையாள் | ஆள் | அவை | வை |
| குழையர் | அர் | தந்தை | தை |
| குழையார் | ஆர் | தங்கை | கை |
| குழையன | அ | தம்பி | பி |
| யாது | து | பிறன் | ன் |
| பொன்னி | இ | மகள் | ள் |
| தேவிமார் | மார் | பிறர் | ர் |

### (இ) வினைப் பகுபதத்தின் பகுதிகள்

வினைப் பகுபதத்தின் பகுதிகள் நட, வா, மடி, சீ, விடு, கூ, வே, வை, நொ, போ, வெள, உரிஞ், உண், பொருந், திரும், தின், தேய், பார், செல், வவ், வாழ், கேள், அஃகு என இருபத்து மூன்றுகும்.

| வினைப் பகுபதம் | பகுதி |
|---|---|
| நடந்தான் | நட |
| வாராய் | வா |
| படித்தான் | படி |

### (ஈ) வினைப் பகுபதத்தின் விகுதிகள்

வினைப்பகுபதத்தின் விகுதிகள் அன், ஆன், அள், ஆள், அர், ஆர், து, அ, ஆ, ஐ, ஆய், இர், ஈர், ஏன்,

அம், ஆம், எம், ஏம், ஓம், உம், க, உ, இ, ய், இன், ஆல், கால், மல், மே, து என்னும் இவை முதலியனவாம்.

| பகுபதம் | விகுதி | பகுபதம் | விகுதி |
|---|---|---|---|
| கண்டனன் | அன் | கண்டாம் | ஆம் |
| கண்டான் | ஆன் | கண்டனெம் | எம் |
| கண்டனள் | அள் | கண்டேம் | ஏம் |
| கண்டாள் | ஆள் | கண்டோம் | ஓம் |
| கண்டனர் | அர் | வாரும் | உம் |
| கண்டார் | ஆர் | வருக | க |
| கண்டது | து | வந்து | உ |
| கண்டன | அ | ஓடி | இ |
| காணு | ஆ | போய் | ய் |
| கண்டனை | ஐ | உண்ணின் | இன் |
| கண்டாய் | ஆய் | கண்டால் | ஆல் |
| கண்டனிர் | இர் | கண்டக்கால் | கால் |
| கண்டீர் | ஈர் | காணுமல் | மல் |
| கண்டேன் | ஏன் | காணுமே | மே |
| கண்டனம் | அம் | காணுது | து |

### (உ) இடைநிலைகள்

பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் நிற்பது இடைநிலையாகும். அது பெயரிடைநிலை, வினையிடைநிலை என இரண்டு வகைப்படும். பெயர்ப் பகுபதங்களில் வரும் இடைநிலைகள் காலங்காட்டா. வினைப்பகுபதங்களில் வரும் இடைநிலைகள் காலங்காட்டும்.

### 5. காரண இடுகுறிப்பெயர்

நாம் பொருள்களின் பெயர்களைக் குறிப்பிடுங்கால் பலவற்றிற்குப் பெயர்க்காரணம் புலப்படவில்லை; சிலவற்றிற்குப் பெயர்க்காரணம் விளங்குகின்றது. பெயர்க் காரணம் புலப்படாமல் தொன்றுதொட்டு நம் முன்னோர் இட்டு வழங்கிவரும் பெயருக்கு இடுகுறிப் பெய

ரென்றும், காரணம் தெரிகின்ற பெயர்க்குக் காரணப் பெயர் என்றும் பெயராகும்.

இடுகுறிப்பெயர், காரணப்பெயராகிய இரண்டும் தனித்தனியே பொது, சிறப்பு என இருவகைப்படும். அவை இடுகுறிப் பொதுப்பெயர், இடுகுறிச் சிறப்புப் பெயர், காரணப் பொதுப்பெயர், காரணச் சிறப்புப் பெயர் எனப்படும்.

மரம், செடி —காரணப்பொருள் தெரியவில்லை; பொதுவாகத் தாவரத்தின் பெயராக உள்ளன. இவ்வாறு வருவது இடுகுறிப் பொதுப் பெயர் ஆகும்.

பனை, தென்னை—இவற்றிற்கும் காரணப் பொருள் தெரியவில்லை; என்றாலும், இன்ன வகையைச் சேர்ந்த மரம் எனச் சிறப்பாகத் தெரிவிப்பதால் இடுகுறிச் சிறப்புப் பெயர் ஆகும்.

அணி என்பது—காரணப் பொதுப்பெயர்.

சிலம்பு என்பது—காரணச் சிறப்புப்பெயர்.

இவற்றைச் சென்ற வகுப்பில் படித்தீர்கள். இங்குக் **காரண** இடுகுறிப்பெயரை நோக்குவோம். அஃதாவது, காரணங்கருதி ஒரு பொருட்கு இடுகுறிபோல் இட்டு வழங்கும் பெயராகும்.

'நாற்காலி கொண்டு வா' என்று சொன்னால் முதலில் உள்ள சொல் உட்காரும் இருக்கையாகிய 'நாற்காலி' என்னும் பொருளை உணர்த்தி நிற்கின்றது. நாற்காலி என்பதன் பொருள் நான்கு கால்களை உடையது என்பதாகும். நான்கு கால்களை உடைய காரணத்தால் நாற்காலி எனக் காரணப் பெயராயிற்று. கட்டில், மேசை, ஆடு, மாடு முதலியவையும் நான்கு கால்களை யுடையனவாயினும் அவற்றிற்கு நாற்காலி என்னும் பெயர் இல்லை,

'முள்ளி' என்பது முள்ளையுடையது என்னுங் காரணத்தால் ஒருவகை முட்செடிக்கு இட்ட பெயராகும். எலுமிச்சை, ரோசா, சுண்டை முதலிய செடிகளும் முள்ளையுடையனவே ஆயினும், அவற்றிற்கு முள்ளி என்னும் பெயர் இல்லை.

இவ்வாறு காரணம் கருதியபொழுது அக் காரணத்தையுடைய பல பொருள்களைக் குறித்தும், காரணங் கருதாதபோது இடுகுறியளவாய் நின்று ஒரு பொருளுக்கே உரியதாயும் வழங்கிவரும் பெயர், காரண இடுகுறிப் பெயராகும்.

## 6. பண்புப் பெயர்

வெண்மை, செம்மை, கருமை என்பன போல் பொருள்களின் நிறங்களைக் குறிக்க வரும் பெயர்களும், நன்மை, தீமை, பெருமை, சிறுமை என்பன போல் பொருள்களின் குணங்களைக் குறிக்க வரும் பெயர்களும், வட்டம், குறில் என்பனபோல உருவத்தைக் குறிக்க வரும் பெயர்களும் பண்புப் பெயர்களாகும்.

பண்புப் பெயர்களெல்லாம் சொல் நிலையால் பகுபதமாயினும், மை விகுதிக்குப் பகுதிப்பொருள் அல்லது வேறு பொருள் இல்லாமையினலே பொருள்நிலையால் பகாப்பதமேயாகும்.

பண்புப்பெயர் விகுதிகள் மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர், பம், து, இல், மன் என்பனவாகும்.

| பண்புப்பெயர் | | விகுதி | பண்புப்பெயர் | | விகுதி |
|---|---|---|---|---|---|
| நன்மை | — | மை | நன்று | — | று |
| தொல்லை | — | ஐ | நலம் | — | அம் |
| மாட்சி | — | சி | நன்னர் | — | நர் |
| பண்பு | — | பு | திட்பம் | — | பம் |
| மழவு | — | உ | தீது | — | து |
| நன்கு | — | கு | குறில் | — | இல் |
| நன்றி | — | றி | பருமன் | — | மன் |

## 7. தொழிற் பெயர்

கல்வி, கேள்வி, செய்கை, உண்ணல்—இச்சொற்கள் தொழிலைக் குறிக்கும் பெயர்களாய் உள்ளன. கல்வி என்பதில் 'க' என்னும் பகுதி கற்றலாகிய தொழிலையும், கேள்வி என்பதில் 'கேள்' என்னும் பகுதி கேட்டலாகிய தொழிலையும், செய்கை என்பதில் 'செய்' என்னும் பகுதி செய்தலாகிய தொழிலையும், உண்ணல் என்பதில் 'உண்' என்னும் பகுதி உண்ணலாகிய தொழிலையும் உணர்த்துகின்றன. அவற்றுள் வி, கை, அல் என்னும் விகுதிகள் தொழிற்பெயர் விகுதிகள் ஆகும்.

ஒரு பொருளின் தொழிலைக் குறிக்கும் பெயர் தொழிற் பெயராகும். அது படர்க்கை இடத்தில் மட்டுமே வரும்; பெரும்பாலும் காலம் காட்டாது.

தொழிற் பெயர் விகுதிகள் தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து என்னும் பத்தொன்பதும் பிறவுமாம்.

| தொழிற்பெயர் | | விகுதி | தொழிற்பெயர் | | விகுதி |
|---|---|---|---|---|---|
| செய்தல் | — | தல் | உணர்ச்சி | — | சி |
| நாடல் | — | அல் | கேள்வி | — | வி |
| நோக்கம் | — | அம் | கடவுள் | — | உள் |
| பொறை | — | ஐ | வேக்காடு | — | காடு |
| தொழுகை | — | கை | விதைப்பாடு | — | பாடு |
| பார்வை | — | வை | தோற்றரவு | — | அரவு |
| போக்கு | — | கு | வாரானை | — | ஆனை |
| மடிப்பு | — | பு | செய்தமை | — | மை |
| செலவு | — | உ | பாய்த்து | — | து |
| மறதி | — | தி | | | |

## 8. வேற்றுமை உருபுகள்

வருமொழியை நோக்கிப் பெயர்ச் சொல்லின் பொருளை வேறுபடுத்துவது வேற்றுமையாம். பெயர்ச்

சொல்லின் பொருளை வேறுபடுத்துவதற்கு அதன் ஈற்றில் சேர்க்கும் ஐ, ஆல், கு, இன், அது, கண் முதலிய சொற்கள் வேற்றுமை உருபுகள் எனப்படும். அவ் வேற்றுமை எட்டு வகைப்படும். அவை முதல் வேற்றுமை, இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை, நான்காம் வேற்றுமை, ஐந்தாம் வேற்றுமை, ஆறாம் வேற்றுமை, ஏழாம் வேற்றுமை, எட்டாம் வேற்றுமை என்பனவாம்.

### (அ) முதல் வேற்றுமை

ஒரு பொருளின் இயல்பான பெயரே முதல் வேற்றுமை. அதற்குப் பெயர் வேற்றுமை எனவும், எழுவாய் வேற்றுமை எனவும் பெயர் உண்டு. எழுவாய் வேற்றுமை வினை, பெயர், வினாக்களில் ஒன்றைக் கொண்டு முடியும்.

முருகன் படித்தான்—வினையைக் கொண்டு முடிந்தது.
முருகன் என் மகன்—பெயரைக் கொண்டு முடிந்தது.
முருகன் வந்தானா?—வினாவைக் கொண்டு முடிந்தது.

முருகன்—முதல் வேற்றுமை. இப்பெயர் திரிபு இல்லாமல் இயல்பாய் இருத்தல் காண்க.

### (ஆ) இரண்டாம் வேற்றுமை உருபு

இரண்டாம் வேற்றுமையின் உருபு 'ஐ' ஒன்றே யாகும். இவ்வேற்றுமை செயப்படுபொருள் வேற்றுமை என்றும் சொல்லப்படும்.

| | |
|---|---|
| நாற்காலியைச் செய்தான் | (ஐ) |
| பலகையை உடைத்தான் | ,, |
| வீட்டை அடைந்தான் | ,, |
| மாட்டை விட்டான் | ,, |
| புலியை நிகர்த்தான் | ,, |
| பொன்னை உடையான் | ,, |

### (இ) மூன்றாம் வேற்றுமை உருபுகள்

மூன்றாம் வேற்றுமை உருபுகள் ஆல், ஆன், ஒடு, ஓடு என்பனவாம் ஆல், ஆன் உருபுகள் நிற்றற்குரிய

இடத்தில் கொண்டு என்பதும், ஒடு, ஓடு நிற்றற்குரிய இடத்தில் உடன் என்பதும் சொல்லுருபுகளாக வரும்.

பிரம்பினுல் செய்த நாற்காலி (ஆல்)
களிமண்ணுனியன்ற பொம்மை (ஆன்)
என்னெடு வந்த பையன் (ஒடு)
வாளோடு வந்த வீரன் (ஓடு)
வாள் கொண்டு வெட்டினன் (கொண்டு)
ஆசிரியருடன் மாணக்கன் வந்தான் (உடன்)

## (ஈ) நான்காம் வேற்றுமை உருபு

நான்காம் வேற்றுமைக்கு உருபு 'கு' ஒன்றேயாகும்.

பாரி ஔவைக்கு நெல்லிக்கனி கொடுத்தான். (கு)
இந்தியாவுக்குப் பகை சீன. ,,
பிசிராந்தையார்க்கு நண்பன் கோப்பெருஞ்சோழன் ,,
கற்றவனுக்கு வேண்டியது ஒழுக்கம். ,,

## (உ) ஐந்தாம் வேற்றுமை உருபுகள்

ஐந்தாம் வேற்றுமையின் உருபுகள் இன், இல் என்பனவாம். நின்று, இருந்து என்பன சொல்லுருபுகளாக வரும்.

மலையின் வீழருவி (இன்)
கண்ணின் மணிபோன்றவன் (இன்)
பூவிருந்தவல்லியின் வடக்கு ஆவடி (இன்)
பாவில் சிறந்தது வெண்பா (இல்)
புலியூரினின்று வந்தான் (நின்று)
சென்னையிலிருந்து மதுராந்தகம்
எண்பது கிலோ மீட்டர். (இருந்து)

## (ஊ) ஆரும் வேற்றுமை உருபுகள்

ஆரும் வேற்றுமையின் உருபுகள் அது, ஆது, அ என்பனவாம். 'உடைய' என்பது சொல்லுருபாக வரும். ஆரும் வேற்றுமையில் வருமொழி அஃறிணை ஒருமையாக இருந்தால் 'அது' என்றஉருபும் 'ஆது' என்ற உருபும் வரும்.

வருமொழி பன்மையாக இருந்தால் 'அ' என்ற உருபு வரும். வருமொழி உயர்திணையாயின் 'உடைய' என்னும் சொல்லுருபைச் சேர்த்து வழங்குவர்.

கண்ணனது கண் (அது)
எனது கை (ஆது)
என கைகள் (அ)
அறிவழகனுடைய மைந்தர் (உடைய)

## (எ) ஏழாம் வேற்றுமை உருபுகள்

ஏழாம் வேற்றுமையின் உருபுகள் இல், கண், உள், இடம் முதலியனவாம்.

கண், கால், கடை, இடை, தலை, வாய், திசை, வயின், முன், சார், வலம், இடம், மேல், கீழ், புடை, முதல், பின், பாடு, அளை, தேம், உழை, வழி, உழி, உளி, உள், அகம், புறம், இல் என்னும் இருபத்தெட்டும் தம்மை ஏற்ற பெயர்ப் பொருளை இடப்பொருளாக வேற்றுமை செய்யும் உருபுகளாம்.

ஊர் நடுவில் உள்ளது குளம் (இல்)
உடம்பின்கண் உள்ளது உயிர் (கண்)
நீருக்குள் இருப்பது முதலை (உள்)
கதிரவனிடம் வெப்பமும் ஒளியும் உண்டு (இடம்)

## (ஏ) எட்டாம் வேற்றுமை

எட்டாம் வேற்றுமையின் உருபுகளாவன, பெயரின் ஈறு திரிதல், ஈறு கெடுதல், ஈறு மிகுதல், ஈற்று அயலெழுத்துத் திரிதல், ஈறு இயல்பாதல் முதலியனவாம். எட்டாம் வேற்றுமை விளி வேற்றுமை எனப் பெயர் பெறும்.

அம்மை—அம்மா (ஈறு திரிதல்)
வேந்தன்—வேந்த (ஈறு கெடுதல்)
செல்வி—செல்வீ (ஈறு மிகுதல்)
மக்கள்—மக்காள் (ஈற்றயல் திரிதல்)

| | |
|---|---|
| தம்பி—தம்பி | (இயல்பு) |
| அன்னை—அன்னா | (ஐகாரம் ஆ ஆயிற்று) |
| பிள்ளை—பிள்ளாய் | (ஐகாரம் ஆய் ஆயிற்று) |
| அண்ணன்—அண்ணா | (ஈறுகெட்டு அயல் நீண்டது) |
| அப்பன்—அப்பாவோ | (ஈறுகெட்டு அயல் நீண்டு ஒகாரம் மிகுந்தது) |
| ஐயன்—ஐயாவே | (ஈறுகெட்டு அயல் நீண்டு ஏகாரம் மிகுந்தது) |
| அண்ணன்—அண்ணே | (ஈறுகெட்டு அயல் அகரம் ஏகாரமாயிற்று) |

## 9. வினைச்சொல்

### எச்சம்—முற்று (தெரிநிலை-குறிப்பு)

உழுதான்
உழுகிறான்
உழுவான்

இம்மூன்று சொற்களும் உழவன் என்னும் பொருளின் வினையை (தொழிலை) உணர்த்துகின்றன. ஆகவே, அவை வினைச்சொற்களாம்.

வினைச்சொல் ஒன்றன் தொழில் நிகழ்ச்சியைத் தெரிவிக்கும்; காலம் காட்டும்; செய்பவன், கருவி, நிலம், செயல், காலம் ஆகியவற்றை உணர்த்தும்; திணை, பால், எண், இடம் ஆகியவற்றை ஏற்கும். வேற்றுமையுருபுகளை ஏலா.

### (அ) எச்சம்

இந்த வானொலிப் பெட்டியை என்னிடம் படித்த பையன் செய்து தந்தான்.

மேற்கண்ட சொற்றொடரில் 'தந்தான்' என்னும் வினைச்சொல் பொருள் முடிவை உணர்த்தி நிற்கின்றது. அது முற்றுவினை எனப்படும். வினைமுற்று எனவும் வழங்கப்படும்.

மேலே படித்த, செய்து என வந்துள்ள சொற்களைக் கவனி.

அவை இரண்டும் பொருள் முடிவைக் காட்டவில்லை.

| பகுதி | இடைநிலை | விகுதி |
|---|---|---|
| படி + | த் + | அ |
| செய் + | த் + | உ |

அ, உ என வந்துள்ள விகுதிகள் திணையையோ, பாலையோ, இடத்தையோ தெரிவிக்கவில்லை. படித்த, செய்து என்னும் சொற்களினால் பொருளும் முடிவடைய வில்லை.

விகுதியினால் திணை, பால், எண், இடம் ஆகிய வற்றைக் காட்டாததும், பொருள் முடிவு பெறாததும் ஆகிய வினைச்சொல் எச்சம் எனப்படும். அது பெய ரெச்சம், வினையெச்சம் என இருவகைப்படும்.

பையன்—பெயர்ச்சொல்

தந்தான்—வினைச்சொல்

பால் காட்டும் விகுதி பெறாத 'செய்த' என்னும் குறைவினைச்சொல் 'பையன்' என்னும் பெயரைக் கொண்டு முடிவதால் பெயரெச்சம் எனப்படும்.

பால்காட்டும் விகுதி பெறாத 'செய்து' என்னும் குறைவினைச்சொல் 'தந்தான்' என்னும் வினையைக் கொண்டு முடிவதால் வினையெச்சம் எனப்படும்.

## (1) பெயரெச்சம்

பெயரெச்சம் தெரிநிலைப் பெயரெச்சம், குறிப்புப் பெயரெச்சம் என இருவகைப்படும். தொழிலையும் காலத்தையும் வெளிப்படையாகத் தெரிவித்து வருவது தெரிநிலைப் பெயரெச்சம் எனப்படும். அவற்றைக் குறிப்பாக உணர்த்தி வருவது குறிப்புப் பெயரெச்சம் ஆகும்.

கண்ட காட்சி
காண்கின்ற காட்சி } தெரிநிலைப் பெயரெச்சம்.
காணும் காட்சி

பெரிய மனிதர்
நல்ல வீடு } குறிப்புப் பெயரெச்சம்.

பெயரெச்சம் (1) இறந்தகாலப் பெயரெச்சம் (செய்த), (2) நிகழ்காலப் பெயரெச்சம் (செய்கின்ற), (3) எதிர்காலப் பெயரெச்சம் (செய்யும்), (4) எதிர் மறைப் பெயரெச்சம் (செய்யாத) என நான்கு வகையாக வரும்.

செய்த, செய்கின்ற, செய்யும் என்னும் வாய் பாட்டில் காலத்தையும் தொழிலையும் உணர்த்தித் திணை பால் காட்டும் விகுதியுடன் முற்றுப்பெறுமல் செய்பவன் முதலான ஆறில் ஒன்றன் பெயரைக்கொண்டு முடிவது பெயரெச்சமாகும்.

''செய்த செய்கின்ற செய்யுமென் பாட்டிற்
காலமுஞ் செயலுந் தோன்றிப் பாலொடு
செய்வ தாதி யறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச் சம்மே.'' (நன். சூ. 340)

(2) வினையெச்சம்

வினையெச்சம் தெரிநிலை வினையெச்சம், குறிப்பு வினை யெச்சம் என இருவகைப்படும்.

தொழிலையும் காலத்தையும் வெளிப்படையாக உணர்த்தி வருது தெரிநிலை வினையெச்சம் எனப்படும்.

தொழிலையும் காலத்தையும் குறிப்பாக உணர்த்தி வருவது குறிப்பு வினையெச்சம் ஆகும்.

செய்து வந்தான்
செய வருகிறான்
செயின் வருவான் } தெரிநிலை வினையெச்சங்கள்.

மெல்ல வந்தான்
அருள் இன்றிச் செய்தான் } குறிப்பு வினையெச்சங்கள்.

வினையெச்சம், செய்து மகிழ்ந்தான்—இறந்தகால வினையெச்சம், செய வருகிறான்—நிகழ்கால வினையெச்சம், செயின் தருவான்—எதிர்கால வினையெச்சம், படியாமல்

இருந்தான்—எதிர்மறை வினையெச்சம் என நான்கு வகையாக வரும்.

தொழிலையும் காலத்தையும் உணர்த்திப் பால் காட்டும் விகுதி பெறாமல் வினையைக்கொண்டு முடியும் எச்சவினை வினையெச்சமாகும்.

> " தொழிலுங் காலமுந் தோன்றிப் பால்வினை
> ஒழிய நிற்பது வினையெச் சம்மே." (நன். சூ. 342)

## (ஆ) முற்று

ஒரு பொருளினது தொழிலையும், காலத்தையும் உணர்த்திச் செய்பவனைக் காட்டும் விகுதியோடு முற்றி (முடிந்து) நிற்கும் வினைச்சொல் முற்றுவினை எனப்படும் என்பதை முன்னர் அறிந்தோம். அவ்வினைச் சொற்கள் தெரிநிலைவினை, குறிப்புவினை என இருவகைப்படும்.

### (1) தெரிநிலை வினைமுற்று

கண்ணன் பொம்மையைச் செய்தான்.—இச்சொற்றொடரில் செய்தான் என்பது வினைமுற்று.

கண்ணன்— (பொம்மையைச்) செய்பவன்.

மண், அச்சு முதலியன—
(பொம்மை செய்வதற்குரிய) கருவி.

வீடு— (பொம்மை செய்யும்) இடம் அல்லது நிலம்.

செய்தல்— செயல்.

செய்தான்— (இறந்த) காலம்.

பொம்மை— (பொம்மையாகிய) செய்பொருள்.
அல்லது செயப்படுபொருள்.

செய்தான் என்னும் தெரிநிலை வினைமுற்று, செய்பவனாகிய கண்ணனையும், செய்தற்குரிய கருவியையும், செய்யும் இடத்தையும், செயலையும், செய்த காலத்தையும், செய்யப்பட்ட பொருளாகிய பொம்மையையும் உணர்த்திற்று. இவ்வாறு செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருள் ஆகிய ஆறனையும்

வெளிப்படையாகத் தெரிவித்துவரும் வினைமுற்று தெரிநிலை வினைமுற்றாகும்.

" செய்பவன் கருவி நிலஞ்செயல் காலஞ்
செய்பொரு ளாறுந் தருவது வினையே." (நன். சூ. 320)

(2) குறிப்பு வினைமுற்று

| | | |
|---|---|---|
| இவள் தாமரையாள்— | பொருட்பெயர் அடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று | |
| இவன் குன்றத்தூரான்— | இடப்பெயர் | ,, |
| இவன் சித்திரையான்— | காலப்பெயர் | ,, |
| இவன் பல்லன்— | சினைப்பெயர் | ,, |
| இவர் பெரியார்— | பண்புப்பெயர் | ,, |
| யானை தூங்கு நடையது— | தொழிற்பெயர் | ,, |

மேற்கண்டவைகளில் தாமரையாள், குன்றத்தூரான், சித்திரையான், பல்லன், பெரியார், நடையது என்பன குறிப்பு வினைமுற்றுக்கள். இவை அறுவகைப் பெயர்களின் அடியாகப் பிறந்தவை. குறிப்பு வினைமுற்று அறுவகைப் பெயர்களின் அடியாகவே தோன்றும்.

அறுவகைப் பெயர்களின் அடியாகத் தோன்றிச் செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படு பொருள் என்ற ஆறனுள் செய்பவனை மட்டும் வெளிப் படையாக உணர்த்தி, ஏனையவற்றைக் குறிப்பால் உணர்த்தி வரும் வினைமுற்று குறிப்பு வினைமுற்றாகும்.

" பொருண்முத லாறினுந் தோற்றிமுன் னாறனுள்
வினைமுதன் மாத்திரை விளக்கல் வினைக்குறிப்பே."
(நன். சூ. 321)

10. செயப்படுபொருள் குன்றிய வினை—குன்றா வினை

(அ) செயப்படுபொருள் குன்றிய வினை

செயப்படுபொருளை ஏற்காத வினைமுற்றுக்குச் செயப்படுபொருள் குன்றியவினை என்று பெயர்.

நடந்தான், வந்தான், தூங்குகிறது, போவான் இவற்றுள் செயப்படுபொருள் இல்லை.

இதனை எவ்வாறு தெரிந்துகொள்வது?

இரண்டாம் வேற்றுமையின் உருபு 'ஐ' ஆகும். அதற்குச் செயப்படுபொருள் உண்டு. இரண்டாம் வேற்றுமை உருபாகிய 'ஐ'யை யார், எது, எவை என்பவற்றோடு சேர்த்து யாரை, எதை, எவற்றை என்று பயனிலையைக் கேள்வி கேட்க வேண்டும். அவ்வினாவிற்கு விடை வரப் பெறாதது செயப்படுபொருள் குன்றியவினை எனப்படும்.

வந்தான்—யாரை வந்தான்? விடை வரவில்லை. அதனால் இது செயப்படுபொருள் குன்றிய வினையாம்.

செயப்படுபொருள் குன்றிய வினையானது, செயப்படுபொருள் நீங்கலாகச் செய்பவன், கருவி, நிலம், செயல், காலம் ஆகிய ஐந்தினை மட்டுமே பெற்றுவரும்.

பொன்னப்பன் புயலில் சிக்கினான்—இது செயப்படுபொருள் குன்றியவினை. இது பொன்னப்பனாகிய செய்பவனும், உடம்பாகிய கருவியும், தெரு ஆகிய இடமும், சிக்குதலாகிய செயலும், இறந்த காலமும் ஆகிய ஐந்தினையும் அறிவித்தல் காண்க.

### (ஆ) செயப்படுபொருள் குன்றாவினை

செயப்படுபொருள் குன்றாவினையாவது செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செயப்படுபொருள் என்னும் ஆறனையும் அறிவிக்கும்.

கண்டான்—யாரை? நேருவை.

வாங்கினான்—எதை? கடிகாரத்தை.

நொறுக்கினான்—எவற்றை? கண்ணாடிகளை.

மணிமேகலை மாலை தொடுத்தாள்—இது செயப்படுபொருள் குன்றாவினை. இதில் மணிமேகலையாகிய செய்பவளும், மலர், நார்களாகிய கருவியும், பௌத்த மடமாகிய இடமும் (நிலமும்), தொடுத்தலாகிய

செயலும், இறந்தகாலமும், மாலையாகிய செயப்படு பொருளும் வருதலை அறிக.

### 11. காலம் காட்டும் இடைநிலைகள்

காலமாவது ஒரு பொருளின் தொழில் நிகழ் பொழுதை உணர்த்துவதாகும். அஃது,

1. இறந்தகாலம் (ஒரு பொருளின் தொழில் முன்னமே நடந்துவிட்ட காலம்.),

2. நிகழ்காலம் (ஒரு பொருளின் தொழில் முடிவு பெறுமல் நிகழ்ந்துகொண்டிருக்குங் காலம்.),

3. எதிர்காலம் (ஒரு பொருளின் தொழில் இனி நடக்கப் போகிற காலம்.) என மூவகைப்படும்.

இடைநிலையாவது பகுபதத்தில் பகுதிக்கும் விகுதிக்கும் இடையே நிற்கும் ஓர் உறுப்பாகும். பகுதியால் செயலையும், விகுதியால் திணை, பால், எண், இடம் முதலியவற்றையும், இடைநிலையால் காலத்தையும் அறிந்துகொள்ளலாம்.

வினைப் பகுபதத்தில் வரும் இடைநிலைகள் முக்காலங் களையும் உணர்த்தும். அவை காலம் காட்டும் இடை நிலைகளாகும்.

#### (அ) இறந்தகால இடைநிலைகள்

இறந்தகால இடைநிலைகள் த், ட், ற், இன் என்பன வாம்.

| பகுபதம் | | இடைநிலை |
|---|---|---|
| செய்தான் | (செய் + த் + ஆன்) | த் |
| உண்டான் | (உண் + ட் + ஆன்) | ட் |
| கற்முன் | (கல் + ற் + ஆன்) | ற் |
| ஓடினுன் | (ஓடு + இன் + ஆன்) | இன் |

#### (ஆ) நிகழ்கால இடைநிலைகள்

நிகழ்கால இடைநிலைகள் கிறு, கின்று, ஆநின்று என்பனவாம்.

| பகுபதம் | | இடைநிலை |
|---|---|---|
| உண்கிருன் | (உண் + கிறு + ஆன்) | கிறு |
| உண்கின்முன் | (உண் + கின்று + ஆன்) | கின்று |
| உண்ணுநின்முன் | (உண் + ஆநின்று + ஆன்) | ஆநின்று |

### (இ) எதிர்கால இடைநிலைகள்

எதிர்கால இடைநிலைகள் ப், வ் என்பனவாம்.

| பகுபதம் | | இடைநிலை |
|---|---|---|
| படிப்பான் | (படி+ப்+ப்+ஆன்) | ப் |
| ஓடுவான் | (ஓடு+வ்+ஆன்) | வ் |

## 12. புணர்ச்சி

புணர்ச்சி என்பது சேர்தலாகும். நிலைமொழியின் ஈற்றெழுத்தும் வருமொழியின் முதலெழுத்தும் ஒன்றுபடச் சேர்வதாம். இது கூடல், சந்தி எனவும் பெயர் பெறும்.

நிலைமொழியாவது முதலில் நிற்கும் சொல்லாம். வருமொழியாவது அதனை அடுத்துப் பின்வரும் சொல்லாகும்.

புணர்ச்சி இயல்பு புணர்ச்சி, விகாரப் புணர்ச்சி என இருவகைப்படும்.

### 1. இயல்பு புணர்ச்சி

| நிலைமொழி | வருமொழி |
|---|---|
| வான் | சிறப்பு |
| பொன் | மலர் |
| நிலம் | பெரிது |
| (ஏரியில்) நீர் | நிறைந்தது |

நிலைமொழியும் வருமொழியும் ஒரு சிறிதும் வேறுபாடின்றிச் சேர்வது இயல்பு புணர்ச்சியாம்.

"விகார மனைத்து மேவல தியல்பே." (நன். சூ. 153)

### 2. விகாரப் புணர்ச்சி

விகாரப் புணர்ச்சியாவது நிலைமொழியின் ஈற்றெழுத்தும் வருமொழியின் முதலெழுத்தும் ஒன்றுபடச் சேரும்போது அங்குத் தோன்றல், திரிதல், கெடுதல் ஆகிய மூவகை விகாரங்களில் ஒன்றேனும் பலவேனும் உண்டாகப் புணர்வதாம்.

#### (அ) தோன்றல் விகாரம்

எழுத்தாவது, சாரியையாவது தோன்றச் சொற்கள் புணர்வது தோன்றல் விகாரமாகும்.

வாழை+பழம்=வாழைப்பழம் (எழுத்துத் தோன்றல்).

அறம்+பால்= அறத்துப்பால் (சாரியை தோன்றல்).

### (ஆ) திரிதல் விகாரம்

நிலைமொழி ஈற்றெழுத்தாயினும் வருமொழி முதலெழுத்தாயினும் அவ்விரண்டுமாயினும் திரிந்து வருவது **திரிதல் விகாரமாகும்.**

சொல்+பொழிவு=சொற்பொழிவு (நிலைமொழியீறு திரிந்தது).

பொன்+நகர்=பொன்னகர் (வருமொழி முதல் திரிந்தது).

கல்+தூண்=கற்றூண் (நிலைமொழியீறும் வருமொழி முதலும் திரிந்தன).

### (இ) கெடுதல் விகாரம்

நிலைமொழியீறு கெட்டு வருவது **கெடுதல் விகாரமாகும்.**

கபிலர் + பரணர்=கபிலபரணர்
மரம் + வேர் =மரவேர்
வெண்மை + மதி =வெண்மதி

பனை+காய்=பனங்காய். —இதில் மூன்று விகாரங்களும் வந்துள்ளமை அறிக. நிலைமொழி ஈற்று உயிர் ஐ கெட்டு, அம் தோன்றி, இதன் ஈற்று ம்-ங் எனத் திரிந்து மூன்று விகாரங்களும் உண்டாயின.

"தோன்றல் றிரிதல் கெடுதல் விகாரம்
மூன்று மொழிமூ விடத்து மாகும்." (நன். சூ. 154)

#### பயிற்சி வினாக்கள்

1. பதமாவது யாது?
2. ஓரெழுத்தொருமொழி என்றால் என்ன?
3. பகாப்பதம் என்றால் என்ன?
4. பகுபதமாவது யாது?
5. பகுபத உறுப்புக்கள் எத்தனை? அவை யாவை?
6. இடைநிலையாவது யாது? அதன் வகைகள் யாவை?
7. காரண இடுகுறிப் பெயராவது யாது? எடுத்துக் காட்டுத் தருக.

8. பண்புப்பெயர் என்றால் என்ன?
9. தொழிற்பெயர் என்றால் என்ன? அதன் விரித்
எழுதுக.
10. வேற்றுமையாவது யாது? அஃது எத்தனை வ
படும்?
11. முதல்வேற்றுமை கொண்டு முடியும் பயனி
யாவை?
12. இரண்டாம் வேற்றுமையின் உருபு யாது?
13. மூன்றாம் வேற்றுமையின் உருபுகள் ய
எடுத்துக்காட்டுத் தருக.
14. நான்காம் வேற்றுமையின் உருபு எது? எ(
காட்டுத் தருக.
15. ஐந்தாம் வேற்றுமையின் உருபுகள் யாவை?
துக்காட்டுத் தருக.
16. ஆறாம் வேற்றுமையின் உருபுகள் யாவை? எடு
காட்டுத் தருக.
17. ஏழாம் வேற்றுமையின் உருபுகளை வரைக.
18. எட்டாம் வேற்றுமையில் பெயர்ச்சொற்கள்
யும் மாறுபாடுகளை உதாரணத்துடன் எழுதுக.
19. வினைச்சொல்லாவது யாது?
20. எச்சவினை என்றால் என்ன? அஃது எத்தனை வ
படும்?
21. பெயரெச்சம், வினையெச்சம் இரண்டினையு
விளக்குக.
22. வினைமுற்றின் இலக்கணம் என்ன?
23. தெரிநிலை வினைமுற்றின் இலக்கணம் என்ன?
24. குறிப்புவினைமுற்றாவது யாது?
25. செயப்படுபொருள் குன்றியவினை என்றால் என்
26. செயப்படுபொருள் குன்றாவினை என்றால் என்
எடுத்துக்காட்டுத் தந்து விளக்குக.
27. முக்காலங்களுக்கும் உரிய இடைநிலைகள் யா
28. புணர்ச்சியாவது யாது? அஃது எத்தனை வ
படும்?
29. இயல்பு புணர்ச்சி என்றால் என்ன? எடுத்துக்காட்
தருக.
30. விகாரப் புணர்ச்சியாவது யாது? அதன் வகை
யாவை?

# PAARI THAMIZH VASAGAM

**VIII STANDARD**

by

Vidwan N. PALANIAPPAN
Pulavar T. SINGARAVELU



PAARI NILAYAM

**59, Broadway : : MADRAS-1**

 **[Price: Rs. 2.00**

Wrapper Printed at Neo Art Press, Madras - 2